

அரித்துவாரமங்கலம் அ/மி. அலங்காரவல்லி திருக்கோவில்



'செந்தமிழ்ப் புலவர்' வா.கோபாலசாமி ரகுநாத இரா.ஜாளியாரின் நினைவாக இம் மலரை வெளிக்கொணர்வதில் பெருமுயற்சி எடுத்திருக்கும் ஓய்வுபெற்ற தலைமையாசிரியர் திரு. த.கோபால்சாமி அவர்கள் இராசாளியார் வழிவந்த பெருமைக்குரியவர். நல்ல பண்பு நலம் படைத்தவர். அவரது இவ்வரிய முயற்சி பெரும் பாராட்டுதலுக்குரியது.

மாண்புமிகு சி.நா.மீ.உபைய துல்லா,
தமிழக வணிகவரித்துறை அமைச்சர்.

அரித்துவாரமங்கலம் - பெரும்புலவர் - புரவலர்

# வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார்
F.T.S., O.S.E.,

# சாதனை சரித்திரம்



தொகுப்பு ஆசிரியர்
**த. கோபால்சாமி**
தலைமையாசிரியர் - ஓய்வு

அரித்துவாரமங்கலம்

# வா. கோபாலசாமி இரகுநாத ராசாளியார்

# சாதனை சரித்திரம்

தொகுப்பாசிரியர்
**ந. கோபால்சாமி**
தலைமையாசிரியர் (ஓய்வு)

**மணிமேகலை லலிதா பதிப்பகம்,**
புத்தூர் - அம்மாப்பேட்டை - 614 402,
பாபநாசம் தாலுக்கா, தஞ்சாவூர் மாவட்டம்.
Cell : 93671 33964

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அரித்துவாரமங்கலம் வா. கோபாலசாமி இரகுநாத ராஜாளியார் சாதனை சரித்திரம் |
| தொகுப்பாசிரியர் | : | த. கோபால்சாமி |
| உரிமை | : | தொகுப்பு ஆசிரியருக்கு |
| பதிப்பு | : | முதற்பதிப்பு பிப்பிரவரி 2009 |
| பக்கம் | : | 156 |
| படிகள் | : | 1,000 |
| விலை | : | ரூ.100/- |
| அச்சிட்டோர் | : | முல்லைபாரதி கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ்,<br>தெற்கு வீதி, தஞ்சாவூர்.<br>போன் : 276972 |
| வெளியீடு | : | மணிமேகலை லலிதா பதிப்பகம்<br>கலைமகள் நகர்,<br>புத்தூர் - அம்மாபேட்டை - 614 402<br>தஞ்சாவூர் மாவட்டம்.<br>கைபேசி : [illegible] |


## முன்னுரை

பேரன்புடையீர்! வணக்கம்.

பெரும்புலவரும் புரவலருமான அரித்துவாரமங்கலம் வா. கோபாலசாமி ரெகுநாத ராசாளியார் வரலாற்று சிறப்பு நூலினைத் தொகுத்து அளிக்கும் வாய்ப்புப் பெற்றமைக்குப் பெரிதும் மகிழ்கின்றேன்.

இராசாளியார் அவர்களின் சாதனை சரித்திரத்தை முழுமையாக அளிக்க இயலவில்லை. பல நல்ல தகவல்கள் கிடைக்கப்பெறவில்லை. சுருங்கக் கூறின் நெற்குவியலைக் காண இயலவில்லை. சிந்துமணி சிதறும் மணியாக கிடைக்கப் பெற்ற சான்றுகளே இந்நூலாகும்.

இந்த நூல் வெளியீட்டுக் குழுத் தலைவராக இருந்து நல்வழி நடத்திய கல்விக்காவலர் பூண்டி கி. துளசிஐயா வாண்டையார் அவர்கட்கும் ஒல்லும் வகையில் எல்லாம் உதவிகள் புரிந்திட்ட நல்ல உள்ளங்கட்கும் சிறப்பாக நூலினை வெளியிட பேருதவி செய்திட்ட கல்வெட்டு ஆய்வுத்துறை அறிஞர் குடவாயில் முனைவர் பாலசுப்பிரமணியன் அவர்கட்கும் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினை சிறப்பாக வடிவமைத்து அச்சிட்டுத் தந்த தஞ்சாவூர், முல்லைபாரதி கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ் நிறுவனத்திற்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர உதவி புரிந்த அனைத்து தமிழ் நெஞ்சங்கட்கும் இராசாளியாரின் அடிதொட்டு வணங்கி நன்றி கூறுகின்றேன்.

அன்புடன்,
த. கோபால்சாமி

நாள் : 10.02.2009
அம்மாபேட்டை.

# இமாலயக் காவலர் இராசாளியார்

**ஜி.எம். ரந்தர் வாண்டையார்**

நமது சமுதாய வளர்ச்சிக்கு அளப்பரிய சாதனைகள் செய்திட்ட இர்ராசாளியார் அவர்கள் எனது அன்பான மைத்துனரும் சகோதரியின் கணவருமான டாக்டர் வி.வி.ஆர். அவர்களின் தாய்வழித் தாத்தா என்பதை பெருமையுடனும் பூரிப்புடனும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இமாலய சாதனையினை இராசாளியார் ஆற்றி உள்ளார். குற்றப்பரம்பரை என்ற கொடிய சட்டம் நீங்க போராடி, வாதாடி வென்றுள்ளார். 12.12.1911ல் ஐந்தாம் ஜார்ஜ் அரசரின் அழைப்பினை ஏற்று முடிசூட்டும் விழாவில் பங்கேற்றதோடு இந்த இழிவைப் போக்க இங்கிலாந்து நாட்டு அரசரோடு ஒரு மணிநேரம் வாதாடி வெற்றியும் கண்டார். ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் மகுடாபிஷேகத்தை நேரில் குடும்பத்தாரோடு கண்டுகளித்தும், அன்னாருடன் மேன்மை தங்கிய மேரிராணி அம்மையாரோடும் உரையாடிய பெருமை பெற்றவர். குற்றப்பரம்பரை சட்டம் குறித்து ஜார்ஜ் மன்னரோடு வாதாடி வெற்றியும் கண்டார்.

இராமநாதபுரம் மன்னர் வழிவந்த பாண்டித்துரையாரிடம் இணைந்து இராசாளியார் மதுரை தமிழ்ச் சங்கம் கண்டார். கரந்தை தமிழ்ச் சங்கம் தோற்றுவித்ததில் முதலிடம், செம்மொழிக்கு முதல் குரல், பல்கலையில் தமிழ்த் துறை தோற்றுவிக்க முதல் குரல், புறநானூறு ஏட்டைப் புதுப்பித்ததில் முதலிடம், தொல்காப்பியனுக்கு சிலை வைப்பதில் முதலிடம் என பல அளப்பரிய சாதனைகளைச் செய்தவர்.

# பெரியார் மணியம்மை பல்கலைக்கழகம்

**பேராசிரியர் நல். இராமச்சந்திரன்**
துணைவேந்தர்

## அணிந்துரை

தஞ்சை மாவட்டம், அரித்துவாரமங்கலம் பெரும் புலவர் - புரவலர் வா. கோபாலசாமி இரகுநாத இராஜாளியார் சாதனைச் சரித்திரம் என்னும் நூலை அவரது பெயரன் திரு த. கோபால்சாமி, தலைமையாசிரியர் (ஓய்வு) பெருமுயற்சி செய்து இதுவரை வெளிவராத அரிய செய்திகளைத் தொகுத்து தொகுத்து புத்தக வடிவில் கொண்டு வருவது பெரிதும் பாராட்டுக்குரியது. தமிழ் கூறும் நல்லுலகச் சான்றோர் நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், அவரின் கள்ளர் சரித்திரம் என்ற நூலில் இராஜாளியாரின் தமிழ்ப் பணி, சமூகப் பணி ஆகியவை பற்றி சிறப்பாகக் கூறுகிறார்.

இராஜாளியார் என்பது அவரது குடும்பப் பெயர். அவர் வாழ்ந்த நாட்கள் (1870 - 1920) சிறிதே ஆயினும் அவர் ஆற்றிய பணிகள் போற்றுதற்குரியன. மதுரை, தமிழ்ச் சங்க வளர்ச்சிக்காகவும், கரந்தை தமிழ்ச் சங்க வளர்ச்சிக்காகவும் அவர் ஆற்றியுள்ள பணிகளை இந்நூல் ஆதாரத்துடன் கோடிட்டுக் காட்டுகிறது. அவரின் தமிழ்த் தொண்டு தமிழ் நூல்கள் வெளிவர அவர் மேற்கொண்ட முயற்சிகள் முறை

யாக சான்றுகளுடன் வெளிப்படுத்தப்பட்டுள்ளது பாராட்டுக் குரியது. இராஜாளியார் அவர்களின், புரவலரைக் காக்கும் பண்பு தனித்தமிழ் வித்தகர் மறைமலையடிகளை அரித்துவாரமங்கலம் வரச் செய்து 'பிரணவம்' என்ற அரிய சொற்பொழிவை நிகழ்த்தச் செய்து அவருக்கு பொருளுதவி வழங்கிச் சிறப்பித்ததிலிருந்து வெளிப்படுகிறது.

இராஜாளியார் பல்துறை விற்பன்னராக இருந்திருக் கிறார் என்பதை இந்நூல் வெளிக்கொணர்வது அவரைத் தமிழ் மக்கள் நன்கு அறிந்துகொள்ள வழி வகுத்துள்ளது. மருத்துவத்திலும், ஓலைச்சுவடி நூல்களைப் பாதுகாத்து அவற்றை புத்தக வடிவில் வெளிவர பொருளுதவி செய் துள்ளதை புலவர் வெள்ளைவாரணார், டாக்டர் உ.வே.சா., அரசன் சண்முகனார் ஆகிய பேரறிஞர்கள் போற்றியுள்ளது, இராஜாளியார் அவர்களின் பெருமையை தமிழகத்திலும் மற்றும் உலகின் பல பகுதிகளிலும் உள்ள தமிழர்கள் அறிய உதவுகிறது.

மதுரை தமிழ்ச் சங்கத்துக்கு இராஜாளியார் அளித்த உதவியைப் போற்றி பாண்டித்துரைத் தேவர் அவர்கள் அவரை பாண்டிய மன்னனின் மாப்பிள்ளை என்று கூறியது, இராஜாளியாரின் தமிழுணர்வையும் மொழிப்பணி மக்க ளிடையே எப்படி ஒற்றுமையை வளர்க்கிறது என்பதையும் வெளிப்படுத்துகின்றன.

அண்மையில் கிடைத்த இணையதளக் குறிப்பில் டி.பி. சிவராம் என்பார் ''இலங்கைத் தமிழ்ச் சங்கம்; அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இலங்கைத் தமிழரின் சங்கம்'' என்னும் நூலில் இராஜாளியார் மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்கு அளித்த உதவி குறித்தும் சமுதாய சீர்திருத்தத்திற்கு அவர் ஆற்றிய பணிகள் பற்றியும் கூறியுள்ளார். இதுபோன்ற அரிய குறிப்புகள் பலவற்றை இந்நூல் வெளிக்கொணர்வது இராஜாளியாரை தமிழ் மக்கள் ஒரு பெரிய புரவலராகவும் மற்றும் சமுதாய முற்போக்கோளராகவும் அறிந்து கொள்ளப் பெரிதும் உதவுகிறது.

இராஜாளியார் பற்றிய செய்திகள் அனைத்தையும் இந்நூல் வெளிப்படுத்தி விட்டது என்று உறுதியாகக் கூற முடியாது. எனவே, இந்நூல் தொகுப்பாசிரியர், அவரின் ஆய்வை, இந்த நூல் வெளிவந்ததற்குப் பின்னரும் மேற் கொண்டு எல்லாத் தகவல்களையும் செய்திகளையும் திரட்டி வெளிவர எல்லா முயற்சிகளையும் செய்ய வேண்டும் என்று வேண்டி, இதுவரை இராஜாளியார் பற்றிய அரிய செய்தி களை வெளிக்கொணர அவர் எடுத்துள்ள முயற்சிகளையும் உழைப்பையும் பாராட்டி, ஒரு தமிழ்ச் சான்றோராகவும், அரிய புலவராகவும், சமூக முற்போக்காளராகவும் விளங்கிய இராஜாளியார் அவர்களின் புகழ் என்றும் வாழ்க, வளர்க என்று வாழ்த்தி மகிழ்கிறேன்.

17.2.09
டாக்டர் நல். இராமச்சந்திரன்
துணைவேந்தர்
பெரியார் மணியம்மை
பல்கலைக்கழகம்



அரித்துவாரமங்கலம்
வா. கோபால்சாமி ரெகுநாத ராஜாளியார், F.T.S., O.S.E.,
1870 - 1920

# பூண்டி புனிதரின் புஷ்பாஞ்சலி

## இராசராசன் இராஜாளியார்


கல்விக்காவலர் திருமிகு கி. துளசிஐயா வாண்டையார்

*K. T. Vandayar* ॐ *Poondi 613 502*


17.09.2008

சாமர்த்தியத்திற்கு உழைப்பது செல்வம்!
சம்பிரதாயத்திற்கு வாழ்வது சங்கமம்!
சன்மார்க்கம் நிலைபெற பயிற்சி பெறுவது கண்ணியம்!
சமயத்திற்குத் தொண்டு செய்வது துல்லியம்!
ராஜாமிராசு ஆடையில் ஆளவந்தார்,
'மாப்பிள்ளை' என்று பாண்டித்துரையால் அழைக்கப்பட்ட
ராஜாளியார் தமிழ்ச்சங்கம் துவங்க
அடிக்கல்லாக இருந்தவர்!
மன்னர்களையும் பண்டிதர்களையும் கவர்ந்தவர்!
மக்கள் பிணிதீர்க்க மருத்துவச் சேவையில்
நாட்டம் கொண்ட நாட்டார்!
வீரமரபில் சுருள் வாளும் சூலமும் தாங்கி
களம் கண்ட மறவர்களைக் குற்றப் பரம்பரை என்ற
வெள்ளையரின் கூற்றை முறியடித்துக்
காலூன்றி ஜெயக்கொடி நாட்டியவர் ராசராசர்!
அவர் புகழ் காக்க சந்ததிகள் சலியாப்
பயிற்சி பெற வாழ்த்துக்கள்!

அன்பு,




இராசாளியார் துயில்கின்ற நினைவிடத்தின் தோற்றம் (அரித்துவாரமங்கலம்)



"கோயில் அய்யா"
கே.இராமையா ரெகுநாத ராசாளியார் அவர்களால்
அன்னை அலங்காரவல்லி திருக்கோயில் முன்பாக திருப்பணி செய்யப்பட்ட
திருக்குளத்தின் அழகிய தோற்றம்.

கோ.சி. மணி
கூட்டுறவுத் துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 22.11.2008.

## வாழ்த்துரை

அரித்துவாரமங்கலம் தமிழ்ப் பெரும் புலவர் புரவலர் வா. கோபால்சாமி ரெகுநாத ராஜாளியார் அவர்கள் தமிழ் மொழியின் உயர்வுக்கும் சமூக மேம்பாட்டிற்கும் பல அரிய சாதனைகளைப் படைத்தவர். கரந்தை தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்ததோடு மதுரை தமிழ்ச் சங்க வளர்ச்சியிலும் பெரும் பங்காற்றியவர்.

இன்று நமது தலைவர் கலைஞர் அவர்கள் தமிழ் மொழியைச் செம்மொழியாக்கி வெற்றி கண்டதற்கு முதல் குரல் கொடுத்த புலவர் வா. கோபால்சாமி ரெகுநாத ராஜாளியார் என்றால் மிகையாகாது. பல்கலைக் கழகங்களில் தமிழுக்கு தனித்துறை ஏற்படுத்த முதல் முயற்சி மேற்கொண்டு வெற்றி பெற்றவர் ராஜாளியார் ஆவார். ''குற்றம்பரம்பரை'' என்னும் கொடிய சட்டம் நீங்க ஐந்தாம் ஜார்ஜ் பேர்ரசருடன் வாதாடி வெற்றி கண்டவர். தமிழ்ப் புலவர்கள் பலருக்கு ஆதரவும் அடைக்கலமும் தந்தவர். குன்னூரில் தொல்காப்பியருக்கு சிலை அமைத்து சிறப்பு செய்தவர். அன்னாருக்கு சிலை அமைத்தல், நூல் வெளியிடுதல், அவரது பெயரில் நூல் நிலையம் அமைத்தல் போன்ற நிகழ்வுகள் எண்ணி மகிழக்கூடியது மட்டுமல்லாமல் பாராட்டுக்குரியது மாகும். மேற்கண்ட நிகழ்ச்சிகள் சிறப்பாக அமைய எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள
[கையொப்பம்]
(கோ.சி.மணி)
கூட்டுறவுத் துறை அமைச்சர்
தலைமைச் செயலகம்,
சென்னை-600 009.



## "ராசாளியாருக்குச் செய்யும் சிறப்பு தமிழன்னைக்குச் செய்யும் சிறப்பு"

**ம.பொ. சிவஞானம்**
தலைவர்,
தமிழ்நாடு சட்டமன்ற மேலவை

புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 009

*15.03.1980*

அன்புடையீர்!

வணக்கம். அரித்துவாரமங்கலம் ராஜாளியார் வாழ்க்கை வரலாறு மலர் வெளிவரவிருப்பது அறிந்து மகிழ்ச்சியடைகின்றேன். இராஜாளியார் தமது வாழ்நாளில் பெரும் பகுதியை தமிழுக்குத் தொண்டாற்றுவதிலே கழித்தவராவார். அவருக்குச் செய்யும் சிறப்பு தமிழன்னைக் குச் செய்யும் சிறப்பாகும். அவரது வாழ்க்கை வரலாறு தமிழர் இல்லந்தோறும் இருப்பது அவசியம். மலர் நல்ல முறையில் வெளிவர உழைக்கும் அன்பர்கள் அனைவருக்கும் என் பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,
**ம.பொ. சிவஞானம்.**



கோபாலசாமி கோபுரம்
நூறு ஆண்டுகளுக்கு முன்பு இராசாளியாரால் கட்டப்பட்ட
அரித்துவாரமங்கலம் ஆலய தெற்கு கோபுரம்



இராசாளியார் சிலை அமைப்பு
இராசாளியார் அவர்களின் அன்பு மகள் திருமதி ஆண்டாள் அம்மையாரின்
பெயரச் செல்வங்கள் (தட்டி கிராமம்)
டாக்டர் வி.வரதராஜன் (வி.வி.ஆர்), வழக்கறிஞர் வி.தங்கதுரை,
வி.பஞ்சமூர்த்தி (இந்தியன் வங்கி ஓய்வு), வி.முருகானந்தம் (வி.ஏ.ஓ.)

## முத்தமிழ்க் காவலரின் வாழ்த்துச் செய்தி

கி.ஆ.பெ. விசுவநாதம்

திருச்சி
*13.03.1980*

கரந்தை தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கியவருள் ஒருவரும், அரசன் சண்முகனுர், உ.வே. சாமிநாத ஐயர், மறைமலை அடிகள் போன்ற புலவர் பெருமக்கள் பலரை ஆதரித்தவரும் தொல்காப்பியர் சிலையை 1911-ம் ஆண்டில் நீலகிரி குன்னூரில் நிறுவி தொல்காப்பிய பாயிரவிருத்தி உரையை அச்சிட்டு வெளியிட்டவரும், நற்றிணை நூலை முதன்முதலில் ஓலைச் சுவடியிலிருந்து அச்சேற்றிய பெருமகனும், ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் அவர்களைப் பேட்டி கண்டு போராடி குற்றப் பரம்பரைச் சட்டத்தைப் போக்கியவரும், பாண்டித்துரைத் தேவர் அவர்களால் பாராட்டப் பெற்றவருமாகிய மதுரைத் தமிழ்ச் சங்கத் துணைத் தலைவர் அரித்துவாரமங்கலம் திரு வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார் அவர்களின் வாழ்க்கை வரலாற்று மலர் வெளிவர விருக்கின்றது என்ற செய்தியும் என்னை மகிழ்விக்கின்றன.

தங்களன்பிற்குரிய
**கி.ஆ.பெ. விசுவநாதம்**

## அன்பில் வாழ்த்துகின்றார்

பேரன்புடையீர்! வணக்கம்.

அமரர் அரித்துவாரமங்கலம் பெருமைமிகு "ராசாளியார்" அவர்களது வாழ்க்கை வரலாறு நூல் வெளியிட தாங்கள் எடுத்துக்கொண்டுள்ள பெருமுயற்சிக்கு பாராட்டும் நன்றியும் தெரிவித்துக் கொள்கிறேன். என்னுலான எல்லா ஒத்துழைப்பையும் நல்க சித்தமாயிருக் கிறேன். குழு எடுக்கும் முடிவை ஏற்றுக் கொண்டு பணியாற்ற சம்மதிக்கிறேன்.

அன்பன்,
**அன்பில் தர்மலிங்கம்**

நாள் : *11.10.1979*



வாழ்க பெரியார்!

## திராவிடர் கழகம்

கி. வீரமணி, எம்.ஏ.,பி.எல்.
பொதுச் செயலாளர்

"பெரியார் திடல்"
சென்னை-600 007.

தஞ்சை மாவட்டம் அரித்துவாரமங்கலத்தைச் சேர்ந்த மறைந்த திரு.வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் அவர்களுக்கு மலர் வெளியிட்டு பாராட்டு விழா நடைபெற இருப்பது அறிந்தேன். இவரைப்பற்றி, வெளியிட்டுள்ள துண்டு வெளியீடு களிலிருந்து "இவர் கரந்தை, மதுரை தமிழ்ச்சங்கங்களை கட்டிக் காத்தவரும், கள்ளர் பெருமக்களின் மீது குற்றப்பரம்பரை சட்டத்தை (C.T.Act) சுமத்தி அம்மக்களை வாட்டியபோது அந்தச் சட்டத்தை எதிர்த்து வாதாடி வென்றுள்ளவரும், 1908ஆம் ஆண்டிலேயே திருக்காட்டுப்பள்ளி லேடி சிவசாமி அய்யர் உயர்நிலைப் பள்ளியில் பார்ப்பன ஆதிக்கத்தை எதிர்த்து முழக்க மிட்டவர்" என்றும் செய்திகள் காணப்படுகின்றன.

இப்படிப்பட்ட பழைய வரலாறுகளை இருட்டடிக் காமல், இளைய தலைமுறைக்கு அளித்திடுவார்கள் என்ற நம்பிக்கையுடன் இம்மலர் வெளியிடுவதற்கு மகிழ்ச்சி அடைகின்றேன். என்னுடைய வாழ்த்துக்களையும் மலர் வெளியிட்டு விழாக் குழுவினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்களன்புள்ள
**கி. வீரமணி**

## உக்கடையின் வாழ்த்துச் செய்தி

**அ. விசுவநாதத் தேவர்**

பேரன்புடையீர்

தாய்க்குலத்திற்கும் தாய்மொழிக்கும் முன்னோடியாக நின்று செயற்கரிய சிறப்புத் தொண்டாற்றிய நம்பெருமகனார்க்கு நாம் செய்யும் நன்றிக் கடனாக அன்னாரின் வரலாற்று நூல் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

அன்புள்ள,
**அ. விசுவநாதத்தேவர்**

உக்கடை
*14.10.1979*

# குறுநில மாமன்னன் இராசாளியார்

மாண்புமிகு சி.நா.மீ. உபயதுல்லா
வணிக வரித்துறை அமைச்சர்
தமிழ்நாடு அரசு.

"பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்"

இப்பூவுலகில் வாழ்ந்தவர் கோடி கோடி; மறைந்தவர் கோடானு கோடி.

தாம் வாழ்ந்து மறைந்த அடையாளத்தைப் பதித்துச் சென்றவர் சில ஆயிரக் கணக்காணோரே!

அத்தகையோரில் ஒருவரே அரித்துவாரமங்கலம் கோபாலசாமி ரகுநாத ராஜாளியார்! என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

அவருடைய பெருமை, புகழ் இன்றும் நினைவுகூறப் படுகிறது.

50 ஆண்டுகளே வாழ்ந்த அப்பெருமகன், ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும் நினைக்கத்தக்க அளவில் தமிழ்ப் பணி செய்துள்ளார். புலவர்கள், அறிஞர் பெருமக்களுக்குத் தோன்றாத் துணையாக இருந்து, அவர்களுக்கு விருந் தளித்துப் பாராட்டி, பொருளுதவி செய்து வருவதில் மகிழ்வு கொண்டிருக்கிறார். அற்றை நாளில் நான்காம் தமிழ்ச் சங்கமாம் மதுரைத் தமிழ்ச் சங்கத்தை உருவாக்கிய பாலை வனத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவரோடு இணைந்து பொறுப்பில் இருந்தார் என்பது எவ்வளவு வியப்பான செய்தி!

அக்காலத்தில் தஞ்சை மாவட்டத்திலிருந்து - மதுரை மாவட்டங்களுக்கு இடையில் போக்குவரத்து வசதிகளற்ற காலத்தில் உள்ள தூரம் எவ்வளவு நீண்ட தூரம்.



அப்படியிருந்தும் அவர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் அரும் பணியாற்றினார். அதன் 7ஆம் ஆண்டு விழாவை 7 நாட்கள் தஞ்சையில் மிகச் சிறப்பாக நடத்தியுள்ளார்.

அது தஞ்சைத் தமிழ்ச் சங்கமாம் 'கரந்தைத் தமிழ்ச் சங்கம்' உருவாக அன்பர்களிடையே ஆர்வத்தை ஏற்படுத்தி, அதன்பிறகு உருவான கரந்தைத் தமிழ்ச் சங்கத்திலும் பொறுப்பேற்றுத் திறம்பட நடத்தினார்.

தமிழுக்குத் தொண்டு செய்ய நூல் நிலையங்கள் உருவாகக் காரணமாயிருந்தார். ஏறத்தாழ 100 ஆண்டுகளுக்கு முன்பே நீலகிரி மாவட்டம் குன்னூரில் தன் செலவில் நூல் நிலையம் ஒன்றை உருவாக்கியதோடு தமிழ்க் கைலாயன் தொல்காப்பியனுக்குச் சிலையும் அமைத்தார் என்பது அவருடைய ஆழ்ந்த தமிழ்ப் பற்றையும், புலமையைப் போற்றும் திறத்தையும் காட்டுவதாக உள்ளது.

வீரசோழியம் முதலான இலக்கண நூல் ஓலைச் சுவடிகளையும், நற்றிணை, புறநானூறு முத்லான இலக்கிய நூல் ஓலைச் சுவடிகளை தமிழ் உலகத்திற்குத் தந்து உதவியதோடு தமிழ் செம்மொழி ஆவதற்குத் தீர்மானம் இயற்றவும் துணை புரிந்துள்ளார்.

அரசன் சண்முகனார், உ.வே.சா, மறைமலைஅடிகள், பரிதிமால் கலைஞர், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், ந.மு. வேங்கடசாமி நாட்டார், நீ. கந்தசாமிப் பிள்ளை, அருணா சலக் கவிராயர் இன்னோரன்ன தமிழறிஞர் பெருமக்கள் பலரை உவந்து பாராட்டியுள்ளார்.

ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் முடிசூட்டு விழாவில் கலந்து கொள்ளும் பேறுபெற்றவர். அன்றைய ஆங்கிலத் துரைத்தனத்தாரும் மதிக்கத்தக்கவராக விளங்கியுள்ளார். மாவட்டக் கழகம், தாலுகா போர்டு முதலான உள்ளாட்சி அமைப்புக்களில் பொறுப்பேற்று மக்கள் செல்வாக்குள்ள நல்ல மனிதராகத் திகழ்ந்துள்ளார்.

கள்ளர் இனப் பெருமக்கள் மீது சுமத்தப்பட்டிருந்த இழிவை, அவலத்தை ஆங்கிலேயே அரசாங்கத்திற்கு எடுத்து உணர்த்தித் தனது செல்வாக்கால் துடைத்தெறிந்துள்ளார்.

சைவ சமயத்தைச் சார்ந்திருந்தபோதும், திருவரங்கம் வைணவர் அவையின் தலைவராக இருந்தும், அன்னி பெசன்ட் அம்மையாரின் பிரம்மஞான சபையிலும் ஈடுபாடு கொண்டவர்.

அன்னிபெசன்ட் அம்மையாரைத் தஞ்சைக்கு அழைத்துக் கூட்டங்கள் நடத்திச் சிறப்புச் செய்துள்ளார். சைவ சமயத்தைச் சேர்ந்த திருவாவடுதுறை ஆதீனத்தோடும் நல்ல தொடர்புடையவராக விளங்கியுள்ளார்.

50க்கும் மேற்பட்ட கிராம மக்களுக்குப் பயன்படக் கூடிய வகையில் 'ஔஷத சாலை' என்னும் பெயரில் மருத்துவமனை அமைத்து மக்கள் நலப்பணி ஆற்றி உள்ளார். பெருமகன் பாண்டித்துரைத் தேவரின் புகழ் அஞ்சலிக் கூட்டம் ராஜாளியார் தலைமையில் நடந்தது என்றால் தஞ்சை மாவட்ட மக்களுக்கு எத்துணை பெருமை?

'செந்தமிழ்ப் புலவர்' வா. கோபாலசாமி ரகுநாத இராஜாளியாரின் நினைவாக இம்மலரை வெளிக்கொணர் வதில் பெருமுயற்சி எடுத்திருக்கும் ஓய்வு பெற்ற தலைமை யாசிரியர் திரு.த. கோபால்சாமி அவர்கள் இராஜாளியார் வழிவந்த பெருமைக்குரியவர். நல்ல பண்புநலம் படைத்தவர்.

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, தலைவர் கலைஞர் ஆகியோரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைமைக் கழகப் பேச்சாளராகவும் அரும்பணி ஆற்றி வருபவர். அவரது இவ்வரிய முயற்சி பெரும் பாராட்டுதலுக்குரியது.

தமிழ் மண்ணின் தவப்பயனாய்த் தகைசான்ற பேராளர் கள் பலர் தோன்றிச் சிறந்து, வாழ்ந்து நமக்கு வழிகாட்டி உள்ளனர். அத்தகையோரில் ஒருவராக, ஔவையின் வாக்குக்



கேற்ப நட்பும், தயையும், கொடையும் பிறவிக்குணமாக அமைந்து, ஒரு குறுநில மன்னனாக வாழ்ந்து தமிழ்த் தொண்டு ஆற்றி உள்ளார் அரித்துவார மங்கலம் பெரும் புலவர் வா. கோபாலசாமி ரகுநாத இராஜாளியார். அவர்தம் பெயரும், புகழும் பல்லாண்டு நின்று நிலைபெறும்.

**"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்"**

[illegible]
22/11/2008

***

## முத்துச்சரம்

### ஒருவேளை உணவிற்கு ஒருமூட்டை அரிசி

அரண்மனையில் இருந்து அழைபபு வந்தாலும், ஜமீன்தார் மிட்டா மிராசு அழைத்தாலும், ராஜாளியார் எளிதில் செல்வதில்லை, புலவர்கள் அழைத்தாலும் அழைக்காவிட்டாலும் அவர்களது இல்லம் தேடிச் செல்வது ராஜாளியார் வழக்கம், நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் திருச்சியில் தங்கித் தமிழ்ப் பணியாற்றிய காலம், ராஜாளியார் திருச்சியில் நாட்டார் இல்லத்திற்குச் சென்றார். நாட்டார் ராஜாளியாருக்குச் சிறந்த விருந்திட்டு, வரவேற்று உபசரித் தார்கள். இரண்டு நாள் கழித்து நாட்டார் இல்லத்திற்கு ஒருமூட்டை அரிசி வீடுதேடி 'பார்சலில்' வருகிறது. அனுப்பியவர் ராஜாளியார் புலவர்கட்கு உதவி செய்வதைப் பெரும்பேறாகக் கருதியவர். நாட்டார் விரும்பாவிட்டாலும், ராஜாளியாரின் அன்புக் காணிக்கைதனை ஏற்றுக்கொண்டார்.

மத்திய பஞ்சாயத்து ராஜ் அமைச்சர்

## மணிசங்கர் ஐயரின் வாழ்த்துரை

03.07.2008

அன்புடையீர்!

வணக்கம். திருமிகு வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார் அவர்களது நினைவாக மலர் வெளியிடுவது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். தமிழ் வளர்ச்சிக்காக அவர் ஆற்றியுள்ள அருந்தொண்டுகள் போற்றுதலுக்குரியது.

குன்னூர், அரித்துவாரமங்கலம் போன்ற இடங்களில் நூல் நிலையங்கள் நிறுவியது.

மதுரையில் 4ம் தமிழ்ச்சங்கம், கரந்தை தமிழ்ச் சங்கம் தோற்றுவித்தது போன்ற நற்காரியங்கள் அவரால் நடை பெற்றுள்ளது.

ஐந்தாம் ஜார்ஜ் பேரரசரிடம் வாதாடி குற்றப் பரம்பரை சட்டத்தை நீக்கியது.

அன்னிபெசண்ட் அம்மையாரிடம் F.T.S. பட்டம் பெற்றது போன்றவை அவரின் சாதனைகளுக்கு உதாரண மாகச் சொல்லலாம்.

சென்னை பல்கலைக்கழகத்தில் முதலாவதாக தமிழ்த்துறை இவரின் முயற்சியால் நிறுவப்பட்டது பெருமைக்குரிய செயலாகும்.

இவ்வாறான பெருமைகளைப் பெற்றுள்ள திருமிகு ராசாளியார் அவர்களுக்கு மலர் வெளியிடுவது அவசியம் செய்ய வேண்டிய பணியாகும். இதற்காக எனது நல்வாழ்த் துக்களை இதயபூர்வமாக தெரிவித்துக் கொள்கிறேன்.



## மறைமலை அடிகளும் ராஜாளியாரும்

புலவர். மறை-திருநாவுக்கரசு
(அடிகளாரின் அன்புச் செல்வர் நாவுக்கரசு
"மறைமலை அடிகள் வரலாற்று" நூலில் எழுதியது)

### புரவலர் ராஜாளியார்

அடிகள் நகைபோந்து விரிவுரைகள் ஆற்றியதை அறிந்த சாமிநாதராவும், சோமநாத ராவும் கூட்டங்கள் நடத்த ஏற்படு செய்தனர். 'பிரணவம்' என்னும் பொருள் பற்றி ஆய்வு மிக்க சொற்பொழிவுகளாற்றினர்.

இப்பெருமைகளை அறிந்தார் வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் என்பவர். இவர் தஞ்சாவூர் சீமை மன்னார்குடியை அடுத்துள்ள அரித்துவாரமக்கலத்தில் வாழும் பெரும் நிலக்கிழார் ஆவார். தமிழ்க் கல்வி மாணுகவும் விளங்கினார். வீர் வைணவராயினும் அடிகள் பால் பேரன்பு கொண்டார்.

அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும் அன்றோ 18-03-1912இல் அடிகளை அரித்துவாரமங்கலத்திற்கு வருவித்தார். முன்பே அடிகளிடம் நட்புக்கொண்டவர் ராஜாளியார். சிறந்த ஒப்புரவு ஆற்றி அடிகளைப் பெரிதும் மகிழ்வித்தார் 'பிரணவம்' என்ற அடிகளின் அறிவு சான்ற சொற்பொழிவின் நடத்துவித்து மகிழ்ந்தார்.

அடிகள் மறுத்தும் வற்புறுத்தி அடிகட்கு ரூ.250/-ரூபாய்கள் கொடுத்தார். (1912)இல் ரூ.250 பெரிய தொகை யாகும்) அன்பை மறுக்க ஒண்ணமல் அடிகள் அதனை ஏற்றுக் கொண்டார். அடிகள் பிறர் தந்த அன்புக் காணிக்கை ஏற்றது இதுவே முதல் தடவையாகும். முதற்கொடை அளித்திட்ட பெருமை ராஜாளியாரைச் சேரும்.

# மலைமீது தொல்காப்பியன் சிலையை வைத்தாய் மனதினிலே நீங்காது நிலைத்து நின்றாய்

10-9-11 இல் நீலகிரி மாவட்டக் குன்னூரில் உள்ள 'இராஜாளியார்' நூல் நிலையத்தின் முன்பு தொல்காப்பியரின் உருவச் சிலைதனை நிறுவித் திறந்துவைத்த இராஜாளியார் அவர்கட்கு நீலகிரி மக்கள் வாசித்தளித்த **வரவேற்புரை**

## ஆசிரிய விருத்தம்

1. அந்நாளில் சுயநலம் வேட் டொருமுனியைத் தென்மலைமே
லரன்வைத் திட்டான்
பன்னாளும் பொதுநலம்வேட் டரித்வார மங்கலக்கோ
பால சாமி
பின்னாளிற் றமிழ்க்கடலுண் டையமலை யமிழ்த்துதொல்காப்
பியர்பேர் பூண்ட
தென்னாரு மொருமுனியை நீலமலை மேல்வைத்தான்
சிறப்பா மீதே
(சுயநலம் - என்றது - திருமணத்தின்பொருட்டு)

2. ஆசிரியன் குறமுனிவன் விந்தகிரி தாழ்த்தினன் றொட்
டவுன் முற்சீடன்
றேசவிரு நீலகிரி யுயர்த்தினன்றான் வீற்றிருந்தே
திருமா லுக்குத்
தாசரெனங் கோபால சாமிரகு நாதரா
சாளி யார்செய்
தேசமிகு உதவிபெறி லெவருமெத னையுமுயர்த்த
னேரா தேயோ

3. நீலகிரி குன்னூரிற் றமிழபிமா னச்செல்வர்
நிலவ நாட்டு
மேலுமிசை ராசாளி யார்புத்த கச்சாலை
யெவற்றி னுக்கு



மேலதென வதனிடையே காட்டுமதன் றியுமலைமேல்
விளக்க மென்னு
நூலமொழியுங்காட்டு நாடுமெடுத்துக் காட்டலெவ
னாட்டுங் காலே

## வாழ்த்து (வெண்பா)

திருமால் திருப்பதியெண் சேர்த்துமே லொன்று
வருநாளிற் குன்னூரில் வாழுந் - திருவாளர்
நாட்டியரா சாளியார் நற்புத் தகசாலை
நாட்டினிலே வாழ்கநெ டுநாள்.

| குறிப்பு | - | திருப்பதியெண் | | நூற்றெட்டு |
|---|---|---|---|---|
| வருஷம் | - | விரோதிகிருது | - | 45 |
| மாதம் | - | ஆவணி | - | 5 |
| தேதி | - | 25 | - | 25 |
| கிழமை | - | ஞாயிறு | - | 1 |
| நட்சத்திரம் | - | உத்திரட்டாதி | - | 26 |
| இலக்கினம் | - | துலாம் | - | 7 |
| | | கூடுதல் | - | 109 |

***

# மறைமலை அடிகளுக்கு முதல் நன்கொடை

மறைமலை அடிகளைத் தம்மூருக்கு ராஜாளியார் 18-3-1912இல் அழைத்துச் சென்று உபசரித்து ரூ.250/- காணிக்கைதனை அன்புடன் அளித்திட்டார் அதுவரை அடிகள் யாரிடமும் நன்கொடை பெற்றதில்லை. தர முன்வந்தாலும் அடிகள் பெற மறுத்திட்டார்.

ராஜாளியார் முதன்முதல் அன்புடன் அளித்திட்ட நன்கொடைதனைப் பெற்றுக்கொண்டார். இரண்டாவது நன்கொடை அடிகளுக்கு அளித்திட்ட பெருமை 'இளங்காட்டு' - கிராம மக்களைச் சேரும் மேற்கண்ட தகவலை அடிகள் தமது நாட்குறிப்பேட்டில் (டைரியில்) குறித்துள்ளார்.

# "பூபாலர் போற்றும் புகழ்பாலன்"

பெரும்புலவர்: **அரசன் சண்முகனர்**
("தொல்காப்பியப் பாயிர விருத்தி" - நூலின் முன்னுரையில் எழுதியது)

சுவாமிகள் கட்டளைப்படி முறையே பாயிர விருத்தி முதலாயின அச்சிடுமாறு கருதிக் குரோதி ஆண்டு தைத் திங்கள் தஞ்சை சென்றேன். சென்று வேலை தொடங்கிய சின்னாளுட் சுரங்கண்டு உணவொழித்துக் கிடைப்படுத்திற் ருகலின் அச்சிடு முயற்சியும் நின்றது. அக்காலை எனக்கு மிக்க நண்பரும், வடமொழி, தென்மொழி, ஆங்கில நூலாராய்ச்சியே பொழுது போக்கும், விளையாட்டாகவும் உடையாரும் வைத்திய நூற் பயிற்சியும், அனுபவமும் உடையாரும், பிரபு சிகாமணியும், வள்ளலும் ஆகிய அரித்துவார மங்கலம் மகா ஸ்ரீ ஸ்ரீ வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார் அவர்கள் என்னைத் தம்மூர்க்கு அழைத்துச் சென்று, பல நன் மருத்துவரைக் கொண்டு மருந்தளித்தும், வேதமுணர்ந்த அந்தணரைக் கொண்டு கிரகசாந்தி முதலாயின செய்தும் பிணி தீர்த்து வெண் பொற்காசு முந்நூற்றின் மேலாக என்னிமித்தம் செலவு செய்ததுமின்றி, அப்பொழுது தேக வன்மையெனக்கின்மையால் தமக்குள்ள இன்றியமையாதனவாகிய உலகியல் பலவற்றையும் கருதாமல் தனவாகிய உலகியல் பலவற்றையும் கருதாமல் தாமே பரிசோதித்தும், பிறரைக்கொண்டு பரிசோதிப்பித்தும் இப் புத்தகத்தைப் பதிப்பித்து முடித்துப் பேருதவி புரிந்தார் கள். அவர்கள் செய்த உதவியேயன்றிக் குணமாட்சியும், பன்னாளுடனிருந்து பழகித் தெரிந்தேனாகலின் அவர்களது நட்பை எழுமையும் மறப்பேனல்லேன்.



**வெண்பா**

கோபால சாமி ரகுநாத கோக் குருசில்
பூபாலர் போற்றும் புகழாளன் - நீபா
வளியாய சொன்மழையும் வண்சபையிற்
வெளியாய பொன் மழையோன் மிக்கு

-அரசன் சண்முகனர்.

***

# "கோபாலசாமி ரகுநாத குஞ்சரமே"!

**அருணாசலக் கவிராயர்**
(மதுரைத் தமிழ்ச் சங்க நூற்பரிசோதகர்)

மண்புதனேர் கோபால சாமிரகு நாதமதி
நான்கு பெற்றோய்
முன்பு தமிழ் பாராட்டு நம்போலும் புலவர் கவி
முழுதுந் தேர்நி
நின்புதல்வி மணங் காணற் கெழுந்துவரு கெனவிடுத்த
நிருபங் கண்டுள்
ளன்புதழை யிருதயத்திற் காண்டலே காண்டலென
வறிந்த தன்றி
மெய்த் துணையா லுங் காண்டல் காண்டலென வுந்தெளி
வித்தா லென்னெஞ்
சுய்த் துணர்ந்து களிகூர்ந்தே னினிஅரசஞ் சண்முகனா
ருவப்புற் றாங்க
ணித்துணைமன் றற்சிறப்பென் றறிவந்த நாவலர்பா
லெல்லா மண்பு
வைத்துணர்ந்து மகிழநின்றே நின்புதல்வி வரனுடனே
வாழ! வாழி!

சேர்ப்பு க.

கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

---

ஆதரிப்பாளர்.

சீமான் வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார் அவர்கள், F. T. S., O. S. E.

சீமான் சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார் அவர்கள், M. R. A. S., ஆண்டிப்பட்டி ஜமீன்தார்.

---

சங்கத்தலைவர்.

சீமான் த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள், B. A., B. L.

---

அமைச்சர்.

சீமான் அ. கணபதிப் பிள்ளை அவர்கள்.

---

உதவியமைச்சரும், நிதிக்கிழவரும்.

சீமான் ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை அவர்கள்.

---

திரிசிரபுரம் கிளை அமைச்சர்.

சீமான் E. R. நடேசபிள்ளை அவர்கள்.

---

கணக்குப் பரிசோதகர்.

சீமான் பா. கலியாணசுந்தரம் பிள்ளை அவர்கள்.

சீமான் R. வேங்கடாசலப் பிள்ளை அவர்கள்.

---

நிருவாகசபையார்.

க சீமான் த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள், B. A., B. L.
உ ,, அ. கணபதிப் பிள்ளை ,,
௩ ,, ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை ,,
௪ ,, ஐ. குமாரசாமிப்பிள்ளை ,, B. A.
௫ ,, ஙி. தட்சணாமூர்த்திப்பிள்ளை ,,
௬ ,, த. பீ. சேதுமாதராவ் ,,
௭ ,, க. சண்முகம் பிள்ளை ,, B. A., B. L.

(கரந்தை தமிழ்ச் சங்கத்தின் ஆண்டறிக்கை, உண்மை நகல்)



# தமிழ்ச் செம்மொழி வரலாற்றுச் சிறப்புத் தீர்மானம்

தமிழினைச் செம்மொழியாக அரசு ஏற்கவும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறையினை ஏற்படுத்தவும் இராசாளியார் வழி நடத்திய கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் முதன் முறையாகத் தீர்மானம் நிறைவேற்றப் பெற்றது.

தீர்மானம் : உண்மை நகல்

எவ்வளனும் இனிது வாய்ந்துள்ள தமிழ் மொழியை உயர் தனிச்செம்மொழி வரிசையிற் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று பல முறையும் சென்னைப் பல்கலைக் கழகத்தாரை வற்புறுத்தியும், அவர்கள் இன்னும் அவ்வாறு செய்யாமலும் கட்டாயப் பாடமாக ஏற்படுத்தாமலும் இருப்பது பிசகென்று அறிவிப்பதோடு, இனியாவது அவர்கள் தமிழை உயர்தனிச் செம்மொழியாகக் கொள்வதுடன், கட்டாய முறையாகவும், கூடியவரை கல்லூரிகளில் கலைபயில் கருவி மொழியாகவும் கொண்டு தங்கள் முதற் கடமையைச் செலுத்தும்படி அவர்களை இப்பெருங் கூட்டத்தார் கேட்டுக் கொள்கிறார்கள்.

***

## தொல்காப்பியனும் ராஜாளியாரும்

முதன்முதலில் தமிழ்ப் புலவனுக்கு சிலை எழுப்பியவர் ராஜாளியார். ஒல்காப் புகழ் தொல்காப்பியனுக்கு நீலகிரி குன்னூரில் சிலைதனை சொந்தப் பொறுப்பில் நிறுவி 10.09.1911-இல் திறந்துவைத்தவர் ராஜாளியார்.

# மதுரை நான்காம் தமிழ்ச்சங்க நிர்வாகத்தை நடத்தி வந்த சான்றோர் வரிசைப் பட்டியல்

1. மாட்சிமை தங்கிய ஸ்ரீமான் ராஜராஜேஸ்வரி முத்துராமலிங்க சேதுபதி, தலைவர்
2. எஸ்.ஆர்.எம்.எம்.டி.டி. பெத்தாச்சி செட்டியார், துணைத்தலைவர்.
3. திருமிகு பாலைவனநத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவர் (சங்க ஸ்தாபகர்)
4. வி. கோபாலசாமி ரகுநாத ராசாளியார் அவர்கள், அரித்துவாரமங்கலம்
5. திருமிகு உ.வே. சாமிநாத ஐயர்
6. தட்சணமூர்த்தி துரைராஜா அவர்கள்
7. ராவ் சாகேப் ஆப்ரகாம் பண்டிதர் மற்றும் 8 சான்றோர்கள்

மேற்கண்ட செய்தி, தஞ்சை, ராவ்சாகேப் மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் இயற்றிய "கருணாமிர்த சாகரம்" என்ற நூலில் முதல் புத்தகம் முதல் பாகம் இந்திர சங்கீத சரித்திரம் சுருக்கம் (91ஆம் பக்கம்) உள்ளது.

***

## பாண்டித்துரைத் தேவரும் - ராஜாளியாரும்

பாண்டித்துரைத் தேவர் மறைந்தவுடன் அவரது இறுதி யாத்திரைதனை சிறப்பாகச் செய்த பின்னர் மதுரை தமிழ்ச் சங்க சார்பில் நடைபெற்ற இரங்கல் கூட்டம் ராஜாளியார் தலைமையில் நடைபெற்றது.



# கரந்தை, தமிழ்ச் சங்கம் - வரலாறு வரிசைப் பட்டியல்

1. வி. கோபாலசாமி ரகுநாத ராசாளியார், தலைவர்
2. புலவர் வி. சாமிநாதப் பிள்ளை, செயலர்
3. இராதாகிருட்டிணப் பிள்ளை
4. தட்சணாமூர்த்திப் பிள்ளை
5. கல்யாணசுந்தரம் பிள்ளை
6. கவியரசு வேங்கடாசலம்
7. அரசன் சண்முகநாதன்
8. பாலசுப்பிரமணிய பிள்ளை
9. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்

பரிதாபி வருடம் ஆனி மாதம் 31ம் நாள் (1912) கொடைவள்ளல் கோபாலசாமி ரகுநாத ராசாளியார் நூல் நிலையத்தை தோற்றுவித்து திறந்து வைத்தார். சங்கத் தலைவர் இராசாளியார் கட்டிட நிதியாக ரூ. ஆயிரம் அளித்தார். பெத்தாச்சி செட்டியாரும் ரூபாய் ஆயிரம் அளித்தார். 5ம் ஆண்டில் 6.10.1916 தொழிற்கூடம், கல்விக் கூடம் முதலியவற்றை இராசாளியார் துவக்கினார்.

மேற்கண்ட தகவல் பேராசிரியர் இரா. சின்னத் தம்பி, எம்.ஓ.எல்.எம்.பில்., அவர்கள் எழுதிய "கரந்தை தமிழ்ச் சங்கம்" என்ற நூலில் 2ம் பக்கம் முதல் 9ம் பக்கம் வரை உள்ளது.

## நற்றிணை நானூறு மூலமும் உரையும் நூல் வெளியிட உதவியவர் இராசாளியார்

எட்டுத் தொகையுள் ஒன்றாகிய நற்றிணை நானூறு மூலமும் உரையும் என்ற நூலை பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் எழுதிய உரையுடன் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட் வெளியிட்டது. அதில் உரையாசிரியர் முகவுரை என்ற தலைப்பில் 14ம் பக்கத்தில்,

"...... எனது அறிவிற்கெட்டியவாறு ஓர் உரையை எழுதி அச்சிடத் தொடங்கிய காலையில், வி. கோபாலசுவாமி இரகுநாத ராஜாளியாரவர்கள் (அரித்துவாரமங்கலம்),...... முதலிய தமிழபிமான சீலர்களின் பேருதவியால் ஒருவாறு அச்சிட்டு முடித்தனன்.... இதனை வெளியிடலானேன்."

அ. நாராயணசாமி ஐயன்

என்று குறிப்பிட்டுள்ளார்.

***

## ஆஸ்டின் துரையும் ராஜாளியாரும்

சப் கலெக்டர் ஆஸ்டின் துரை அவர்கள் ராஜாளியாரோடு அன்பாக நடந்து வந்தார். அரித்துவாரமங்கலத்தில் ராஜாளியாரால் கட்டப்பெற்ற "கார்னேஷன் கட்டிடம்" (கார்னேஷன் விழா நினைவாக நினைவாக கட்டப் பட்டது) என்பதை ஆஸ்டின் துரை திறந்து வைத்துள்ளார்.

தாலுக்கா போர்டு தேர்தலில் ஆஸ்டின் துரை அவர்கள் அவரது வாக்கினை ராஜாளியாருக்குச் செலுத்தி வெற்றியடையச் செய்துள்ளார்.





தொல்காப்பியனுக்கு சிலை எடுத்து சிறப்பித்தவர் இராசாளியார்

10.09.1911 நீலகிரி மாவட்டம், குன்னூரில் இராஜாளியார் நூல் நிலையம் முன்பு தொல்காப்பியனுக்கு சிலை அமைத்து திறந்தும் வைத்தார்.

அள்ளி அள்ளி கொடுத்திட்ட வள்ளல் இராஜாளியார்.

நீலகிரி குன்னூரில் 10.09.1911ல் நூல் நிலையம் அமைக்க ரூபாய் பத்தாயிரம் வழங்கி உள்ளார். அதன் இன்றைய மதிப்பு ரூ. 60 லட்சத்திற்கும் மேல்.

உ.வே.சா. அவர்கட்கு வெள்ளிப் பேழையில் வைத்து ரூ. 1,000/- அளித்திட்டார்.

மறைமலை அடிகட்கு முதல் நன்கொடை அளித்திட்டார் பெரும்புலவர்.

அரசன் சண்முகம் அவர்கட்கு ரூ. 300/- அளித்திட்டார்.

கரந்தை தமிழ்ச்சங்க கட்டிட நிதிக்கு முதன் முதலில் ரூ. 1,000/- அளித்திட்டார்.

தொல்காப்பிய தெய்வச்சிலையார் மூலச் சுவடி *இராசாளியார் இல்லத்திலிருந்து எடுக்கப்பட்டு அச்சிடப்பெற்றது.

**சாதனை சரித்திரம் - 4**

கரந்தை தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவரும் இராஜாளியார் அவர்களே.

கரந்தை, தமிழ்ச்சங்கம், வடவாற்றுக் கரையில் உள்ள பஞ்சநதிப் பாவா சத்திரத்தில் தோற்றுவிக்கப்பட்டது. சங்கத்தின் தலைவர் வா. கோபால்சாமி ரகுநாத ராஜாளியார். செயலர் இலக்கணக் கடல் வி. சாமிநாத பிள்ளை அவர்கள், 19 ஆண்டுகள் கரந்தை தமிழ்ச் சங்க ஆண்டு அறிக்கையில் முதலிடத்தில் இருப்பவர் இராஜாளியார் இரண்டாம் இருப்பவர் பெத்தாச்சி செட்டியார் ஆவார். கல்வி நிலையம், நூல் நிலையம், தொழிற்கூடம் முதலியன ஏற்பட அச்சாணியாய் இருந்தவரும் இராஜாளி யாரே.

**சாதனை சரித்திரம் - 5**

சென்னை பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறையினைத் தோற்றுவித்தவரும் இராஜாளியாரே.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறை தோற்றுவிக்கப்பட வேண்டும் என்று இராசாளியார் தலைமை வகித்த கரந்தை தமிழ்ச் சங்கத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது. அரசில் தமக்கிருந்த செல்வாக்கு மற்றும் கவர்னர் லாலி துரை போன்றவர்கள் நட்பால் தமிழ்த்துறை தோற்றுவிக்கப்பட்டது. அதன் விளைவாக சென்னை, பிரசிடென்சி கல்லூரியில் தமிழ்த்துறை முதன் முதலாக தோன்றலானது.



**சாதனை சரித்திரம் - 6**

இராசாளியாரால் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் தொல்காப்பிய பாயிர விருத்தி - நற்றிணை - வீரசோழியம், தொல்காப்பியம் தெய்வச்சிலையார் உரை மற்றும் பல.

இராஜாளியார் ஆதரித்த புலவர் பட்டாளம் பாரீர்!

1. அரசன் சண்முகனார்
2. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்
3. உ.வே. சாமிநாத ஐயர்
4. ஜி. சதாசிவம் பிள்ளை (விஞ்சைராயர்)
5. சர்க்கரை ராமசாமிப் புலவர்
6. மு.ரா. அருணாசலக் கவிராயர்
7. கோபாலகிருஷ்ணன்
8. சேதுராம பாரதியார்
9. தூத்துக்குடி பொ. முத்தையா பிள்ளை
10. இலக்கணக்கடல் சாமிநாத பிள்ளை
11. கவியரசு வெங்கடேசப் பிள்ளை
12. நாகை முத்துசாமி ஐயர்
13. ந.மு. வேங்கடசாமி நாட்டார்
14. நீ. கந்தசாமிப் பிள்ளை
15. பரிதிமாற் கலைஞர்
16. இராகவ ஐயங்கார்

## "நிலந்தினிலே ராஜாளி நிதிதனிலே ராஜாளி! குலந்தனிலே ராஜாளி கொடைதனிலே ராஜாளி கோபாலசாமி ராஜாளி நீதான்"!

நாகை: **"நிலலோசனி"** - இதழ் ஆசிரியர்

**G. சதாசிவம் பிள்ளை**

கோபால சாமிரகு நாதனெனுங் கோமானீ
குலவி வாழ்க
பூபாலர் ஜார்ஜரசர் புனைமகுடக் கா தனைப்
பொருந்தக் கண்டாய்
மாபாலா வுனைக்கண்டோம் வண்பாவால் வாழ்த்திடவும்
வாய்க்கப் பெற்றோம்
நோபால வொருநலங் கொண்டிருநலங்க ளெமக்களித்தாய்
நிருபவாழி

திருமாலி னவதாரந் தேர் வேந்த ரெனச் சான்றோர்
செப்பா நிற்பார்
ஒருமாலாம் ஜார்ஜரச ருயர் விருந்தா யிருந்துநல
முவந்து வந்தாய்
தருமாலே கோபாலசாமிரா ஜாளியுனைத்
தழையக் கண்டோம்
திருமாலைக் கண்டவரைக் கண்டாலுங் கலிதீர்தல்
திண்ண மாமே

நிலந்தனிலே ராஜாளி நிதி தனிலே ராஜாளி
நேர்மையான
குலத்தனிலே ராஜாளி கொடை தனிலே ராஜாளி
குறையா ஞானப்
பலந்தனிலே ராஜாளி கோபாலசாமி ராஜாளி
நீதான்
தவந்தனிலே மிகு ஜார்ஜ் ராஜாளி தனைக்காணல்
தகுதிதானே



இந்தியா தேசமதி லிங்கிலாந்து தேசமன்ன
ரினிதா யெய்திக்
கொந்தள நன் முடியணிந்த கொண்டவர்நம்
ஜார்ஜரசே குவலயத்தில்
நிந்தையிலா ஜார்ஜ்ரசை நேர்முகமாக் கண்டவர்கள்
நீயே யன்றி
பந்து நிறை யெம்மவரிற் பார்க்கிலுண்டோ கோபால
சாமி மாலே.

***

## மன்னன் பாண்டியனின் மாப்பிள்ளை ராசாளியார்

மதுரை தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவின் 7 நாட்கள் தஞ்சையில் ராசாளியார் நடத்தி உள்ளார். இறுதிநாள் விழாவிற்கு திரு பாண்டித்துரைத் தேவர் அவர்கள் தலைமை ஏற்றார். பாண்டித்துரைத்தேவர் அவர்கள் தலைமை உரையில் கீழ்கண்டவாறு குறிப்பிட்டார்.

"மதுரை தமிழ்ச்சங்கம் பாண்டிமண்டலத்தின் பரம் பரை சொத்து அந்தப்பாண்டிய மன்னனின் பைங்கொடி யாளை (தமிழ்ச்சங்கத்தை) தமிழ்க் கன்னியினை, சோழன் ராசாளியார் அவர்களின் திருக்கரத்தில் சேர்க்கின்றேன்! மன்னன் பாண்டியனின் மகளை கரம்பற்ற சோழன் ராசாளியாரை விட சிறந்த ஒருவரை நாம் காண்பது அரிது! என்று 'ஆனந்தக் கண்ணீர்' சிந்தியவாறு கூறினார்கள். இந் நிகழ்ச்சி அனைவரின் உள்ளத்தையும் புல்லரிக்கச் செய்தது.

# "கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் கோக்குருசில்

நாவலர் **ந.மு. வேங்கடசாமி நாட்டார்**

*("கள்ளர் சரித்திரம்" - நூலில் எழுதியது)*

மூன்றாண்டின் முன் இவ்வுலகில் புகழுடம்பை வைத்துச் சென்றாரும், கல்வியிலும், வண்மையிலும், நற்குணத்திலும் மிக்காரும் அரசஞ் சண்முகனார், பின்னத்தூர் நாராயணசாமி அய்யர், ஜி. சதாசிவ விஞ்சைராயர், சர்க்கரை இராமசாமிப் புலவர், மு.ரா. அருணாசலக் கவிராயர், கோ. பாலகிருஷ்ண ஐயர், வி. சாமினாதப் பிள்ளை, முத்து சாமி ஐயர், சேதுராம பாரதியார் முதலிய எண்ணிறந்த புலவர் களால் புகழ்ந்து பாடப்பெற்ற பெருமை வாய்ந்தவருமாகிய அரித்துவாரமங்கலம் கோபாலசாமி இரகுநாத ராசாளியார் இக்குலத்தவர் என்பது யாவரும்அறிவர். சோழவந்தான் சண்முகம் பிள்ளையவர்களால் எழுதப்பட்ட தொல்காப் பியப் பாயிர விருத்தி என்னும் புத்தகம் இராசாளியார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது என்பதை அதன் முக வேட்டினின்றும் அறியலாகும்.

கல்வி அறிவு ஒழுக்கங்களிலும், வண்மையிலும் மேம்பட்டு விளங்கிய இப் பெருந்தகையார் பிரமோதூத ஆண்டு கார்த்திகைத் திங்கள் 17ஆம் நாள் அரித்துவார மங்கலத்தில் பெருநிலக் கிழமையுடைய ஓர் பிரபலக் குடும் பத்தில் பிறந்தவர். இவர் இளம் பருவத்தில் கும்பகோணத் தில் உள்ள ஆங்கிலப் பாடசாலையில் மெட்ரிக் குலேஷன் வகுப்பிற் படித்துக் கொண்டிருந்தவர். அப்பொழுதே. குடும்பப் பாரம் ஏற்க நேர்ந்தமையின் படிப்பை விடுத்து ஊருக்கு வந்துவிட்டார். எனினும் கல்வியில் இவருக்கிருந்த விருப்பம் மேன்மேலும் வளர்ந்தே வந்தது. தமது பன்னிரண் டாம் வயதிலிருந்தே யோக நூல்கள் படிக்க வேண்டுமென்



னும் ஆவலுடையவராய் அவற்றைத் தேடிப் படித்தும், பெரியோர்கள் பலரை உசாவியும் யோக நுட்பங்களைத் தெரிந்து வந்ததோடு, யோகப் பயிற்சியும் ஓரளவு செய்து வந்தாரெனத் தெரியவருகிறது. திருமந்திரம் முதலிய யோக நூல்களிலிருந்து ஆயிரத்துக்கும் மேம்பட்ட பாடல்கள் இவருக்குப் பாடமுண்டு. மருத்துவநூல், சோதிட நூல் களிலும் இவருக்குப் பயிற்சி உண்டு. வடமொழிப் பயிற்சி யும் பெற்றிருந்தார். சிறு பருவந் தொடங்கியே சிறந்த ஒழுக்க மும் தெய்வ பக்தியும், உபகாரத்தன்மையும் உடையவராக இருந்தாராகலின் இவரது வாழ்க்கை தூய்மையும், பெருமை யும் வாய்ந்ததென்பது தேற்றம். மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவப்பெற்றது இவருக்குத் தமிழில் மிக்க ஆர்வமும், பயிற்சியும் உண்டாவதற்கு ஏது நிகழ்ச்சியா யிருக்கத் திருவாளர் பொன். பாண்டியத்துரைத் தேவர் அவர்கள், அரசஞ் சண்முகனார் முதலிய பலருடைய நண்பு அவற்றைப் பெரிதும் வளர்த்து வருவதாயிற்று. அக்காலந் தொடங்கியே மதுரை முதலான இடங்களில் சங்கங்கள் கூடும் பொழு தெல்லாம் தவறாது செல்வதும், புலவர் களோடு அளவளாவி இன்புறுவதும், தமிழ் நூலாராய்ச்சி செய்வதும் பெருஞ் சொற்களியற்றுவதும் இவர் கடப் பாடாகக் கொண்டிருந்தார். பலவூர்களில் உள்ள பல சங்கங்களில் இவர் தலைமை வகித்தும், சொற்பொழிவுகள் புரிந்தும் இருக்கின்றனர். பிரணவம், யோகம் என்று பொருள்களைக் குறித்து மூன்று, நான்கு மணி நேரங்கள் அருமையாகப் பேசியிருக்கிறார்.

ஓராண்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவைத் தஞ்சையில் மிகவும் சிறப்பாக நடத்திவைத்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் நிறைவேற்றக் கழக உறுப்பின ராகவும், எம் சங்கத்தின் புரவலராகவும், மற்றும் பல சங்கங்களின் தொடர்புடையவராகவும் இருந்திருக்கின்றனர்.

தம் மரபினராகிய கள்ளர் குல மக்கள் கல்வி முதலியவற்றில் மேம்பட்டுத் தம் பழம் பெருமையின் வழுவாதிருக்க வேண்டுமெனக்கருதி இந்திர குலாதிபர்

சங்கம் என்னும் ஓர் சங்கம் நிறுவி நடத்திவந்தார். தஞ்சை ஜில்லா போர்டிலும், தாலுகா போர்டிலும் பல ஆண்டுகள் உறுப்பினராய் இருந்துள்ளார். தம்முடைய ஊரில் நூல் நிலையம், மருத்துவ நிலையம் முதலியன ஏற்படுத்தி வைத்தார். அறத்திற்கு மிகுதியான நிலம் எழுதி வைத்தார். நமது பெரு மாட்சி பொருந்திய ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் பெருமான் டில்லிமா நகரில் முடி சூட்டிக்கொள்ளும் அமையத்துச் சென்று தரிசித்து வந்தார். திருவாவடுதுறை ஆதீனத் தலைவரவர்களைத் தம்மூருக்கு எழுந்தருளிவித்துப் பூசித்து, அவர்கள் உவந்தளித்த பொற்கடகங்களும் பெற்றார். தமிழ்ப் புலவர்களிடத்தில் அவருக்கிருந்த அன்பு அளவிட்டுரைக்கற்பாலதன்று. இவர் போன்று புலவர்களை உபசரிப்பவர் உலகில் மிக அரியரென்றே சொல்ல வேண்டும். அரசஞ் சண்முகனார், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் முதலிய புலவர் பலர் இவர்பால் மிக்க உதவி பெற்றுள்ளார்கள். இவர்மீது எத்தனையோ புலவர்கள் பாடிய பாடல்கள் உள்ளன. பிற வணிதையரைப் பெற்ற தாயெனவும், பிறர் பொருள் எட்டியே யெனவும், பிறர் வசை யுரைத்தல் பெருமையன்றெனவும் கருதியவர். 'ஈதல், இசைபட வாழ்தல் அதுவல்ல - தூதியமில்லை யுயிர்க்கு' என உணர்ந்தவர். சுருங்க உரைக்கின்ற இவர் தம்பால் ஒன்று வேண்டினர்க்கு மறுத்தறியாத வண்மையும், இன்னல் கருதிக் கண்ணீர் ஒரு துளியும் விடாத தண்மையும், திருமாலின் திருவடிகளிடத்தில் வைத்தபக்தியின் உண்மையும் உடையவர் ஆவர். இப்பெற்றியமைந்த இவ்வாண்டகை தம் சுற்றத்தார்களும், நண்பர்களும், புலவர்களும், மற்றும் தம் ஆதரவு பெற்றோர்களும் ஆகிய எண்ணிறந்தோர் வருத்தமுறத் தமது ஐம்பதாம் வயதில் சித்தார்த்தி ஆண்டு, பங்குனித் திங்கள் உரு-ம் நாளில் இராமநாமம் சொல்லிக்கெண்டிருந்தபடியே தம் பொன் போலும் அழகிய உடம்பை விடுத்துப் பரந்தாமனுலகெய்தினர் என்பது.



## செந்தமிழ்ப் பேரன்பர்
# திருவாளர் கோபாலசாமி இரகுநாத ராஜாளியார் அவர்கள்
## அரித்துவாரமங்கலம்

(பேராசிரியர் **க. வெள்ளைவாரணனார்**)

தண்ணார் தமிழ் வளர்க்கும் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் புரவலர்களுள் ஒருவராகவிருந்து அதன் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த பெருமக்களுள் அரித்துவாரமங்கலம் செந்தமிழ்ப் பெருமகனார் கோபாலசாமி இரகுநாத ராசாளியார் அவர்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். இப்பெருந்தகையார் தஞ்சை மாவட்டத்தில் இக்காலத்தில் அரித்துவாரமங்கலம் என வழங்கப்பெறுவதும் தேவார ஆசிரியர்கள் காலத்தில் திரு அரதைப் பெரும்பாழி எனப் போற்றப்பெற்ற சிறப்புடையதும் ஆகிய பதியிலே ஊராண்மைக்கு ஒத்த பெருஞ்செல்வமும் நாடாள் வேந்தர்க்குப் போர்த் துறையில் உதவும் வீரமும் ஒருங்கமைந்த தமிழ்க் குடும்பத்தில் பிறந்தார். தாய்மொழியாகிய தமிழுடன் வடமொழியும் ஆங்கிலமும் பயின்று சிறந்த புலமை பெற்றார். அதன் பயனாகத் தாம் பிறந்த அரித்துவார மங்கலத்தில் கல்விக் கடலில் உலவுவார்க்கு உறுதுணை புரியும் மரக்கலமெனத் திகழும் நூல்நிலையத்தையும் மக்கள் நோயற்ற நல்வாழ்வு பெற உதவும் ஔ தசாலை என்னும் மருத்துவ நிலையத்தையும் நிறுவிப் பேணிவந்தார்.

மொழிப்பற்றின் துணைகொண்டே நாட்டுப் பற்றினை வளர்த்தல் வேண்டும் என்னும் திருந்திய நோக்குடன் பாலவனத்தும் குறுநில மன்னர் பாண்டித்துரைத் தேவரவர்கள் தமிழ்நிலை பெற்ற மதுரைமா நகரில் தமிழ்ச் சங்கத்தை நிறுவித் தமிழ்ப் பணிபுரியுங்காலத்தில், கல்வியும் செல்வமும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற இராசாளியார் அவர்கள்

மதுரைத் தமிழ்ச்சங்க ஆண்டுவிழாக்களிற் கலந்து கொண்ட தேவரவர்களுடனும் புலவர் பெருமக்களுடனும் அளவளாவி மகிழ்ந்து தமிழ் வளர்ச்சிக்கு ஊக்கமும் ஆக்கமும் நல்கி வந்தார் என்று அறிகின்றோம்.

தன்னேரிலாத தமிழ்மொழியைப் பேணி வளர்க்கும் நன்னோக்குடன் பாண்டிய நாட்டின் தலை நகரமாகிய மதுரையில் நிறுவப்பெற்ற தமிழ்ச்சங்கத்தின் தமிழ்ப்பணி தமிழ்நாடு முழுவதும் பரவிப் பயன் தருதல் வேண்டும் என்னும் விரிந்த நோக்குடன் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஆண்டு விழா சோழரது தலைநகரமாகிய தஞ்சையில் பாண்டித்துரைத் தேவரவர்கள் தலைமையில் சிறப்பாக நிகழ்ந்தது. அப்பொழுது பாண்டித்துரை அவர்கள் மதுரையில் பிறந்த தமிழ்ச் சங்கமாகிய குழந்தையைச் சோழநாட்டு மக்களும் பேணி வளர்க்கும் பொறுப்புடையர் என்பதனைத் தமது விழாவிற் சிறப்பான பங்குகொண்டு உழைத்தவர்கள் நம் போற்றுதலுக்குரிய இராசாளியார் அவர்கள் எனவும் பாண்டித்துரைத் தேவர் அவர்கள் தஞ்சையில் நிகழ்ந்த ஆண்டு விழாவில் சோழநாட்டு மக்களுக்கு உருக்கமுடன் கூறிய அம்மொழியே தஞ்சையில் தமிழ் வளர்க்கும் நிலையமாகிய கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தது எனவும் அவ்விழாவிற் கலந்துகொண்ட முதியோர் வாயிலாகக் கேட்டு மகிழும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

நாடாள் வேந்தர்க்கும் படைத்துணையாய் வாழ்ந்த பழங்குடி மக்களாகிய முக்குலத்தோர் ஆங்கிலேயரது ஆட்சியில் குற்றபரம்பரையினராகக் குறிக்கப்பட்ட இழிநிலையினை மாற்றுதற்பொருட்டு எதிர்த்து வாதாடிப் பழையவுயர்வினை மீண்டும் பெறவுழைத்து வெற்றிதேடித் தந்த பெருமக்களுள் இராசாளியார் அவர்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர். ஞாயிறுமறையாப் பெருநிலப் பரப்பினை ஆளுந் தகுதி வாய்ந்த இங்கிலாந்து மன்னர் ஐந்தாம் ஜார்ஜ்



[illegible]யவர்கள் தில்லிமாநகர்க்கு வந்தபொழுது அவர்களை நேரிற் காணும் பெருமைபெற்ற பெருமக்களுள் இராசாளியாரும் ஒருவர். இச்சிறப்பினை எண்ணும் பொழுது இவருக்கு அரசியலில் இருந்த செல்வாக்கு நன்கு புலனாகும்.

பாண்டித்துரையவர்கள் இவ்வுலகவாழ்வை நீத்த நிலையிற் கூட்டப்பட்ட இரங்கற்கூட்டம் இராசாளியார் அவர்கள் தலைமையில் நிகழ்ந்தமையும், தேவர்களுடன் மதுரைத் தமிழ்ச் சங்கப்பணியில் ஈடுபட்ட இராசாளியார் தேவரது பிரிவுக்குப்பின் கரந்தைத் தமிழ்ச்சங்க வளர்ச்சியிற் பெரிதும் ஈடுபாடுடையவராய்த் தமிழ் வளர்ச்சிக்கு ஆதரவு நல்கிவந்தமையும் இங்க குறிப்பிடத்தக்க வரலாற்று நிகழ்ச்சிகளாகும்.

பண்டைக் காலத்தில் மன்னர்களாலும் குறுநில மன்னர்களாலும் வள்ளல்களாலும் ஆதரிக்கப்பெற்றுத் தமிழ் வளர்த்த புலவர் பெருமக்களைப் போற்றிப் பயன்கொள்ளும் நற்பேறு அயலவர் ஆட்சியில் தமிழ்மக்களிடையே நிலைபெறா தொழிந்தது. இத்தகைய இடர்நிலையில் 'நிழலில் நிளிடைத் தனிமரம் போலப் 'புலவர் பெருமக்களுக்குப் புகலிடமாயிருந்து அவர்களுக்கு வேண்டும் உதவிகளை ஆர்வமுடன் செய்த மகிழும் பரந்த உள்ளம் வாய்ந்தவராக இராசாளியார் திகழ்ந்தார்கள் என்பதனை எண்ணும் பொழுது தமிழன் நெஞ்சம் வீறு பெற்றுயரும் என்பது திண்ணம். இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பண்டைச் சங்கப் புலவர்களை ஒத்து ஆழ்ந்த பெரும் புலமையும் தாம் கண்ட உண்மையை அஞ்சாது கூறும் நெஞ்சத்திண்மையும் எப்பொருளையும் கூர்ந்துணர வல்ல நுண்ணுணர்வும் பெற்ற பொருளைப் பேணாது ஆற்றார்க்கு உதவும் ஈகைத் திறமும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற இலக்கணக் கடலனார் சோழவந்தான் அரசஞ்சண்முகனாரை அன்பினால் ஆதரித்துப் பிணி தீர்த்துப் பேணிப் பொருட்கொடை நல்கியதிறத்தால் அப் பெருந்தகையார் தம் கூர்த்த மதிகொண்டு தொல்காப்பியப்

பாயிரத்திற்கு எழுதிய சண்முக விருத்தியைத் தமிழ்ப் புலவருலகிற்கு நல்கியபெருமை புலமைச் செல்வர் இராசாளியார் அவர்களுக்கே யுரியதென்பதனைத் தமிழுலகம் நன்குணரும். சங்கத் தொகை நூலாகிய நற்றிணைக்குத் தமிழ்ப் பொருளிலக்கண மரபு வழாது உரை வரைந்து வெளியிட்ட பெரும் புலவர் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்களும் நம் இராசாளியார் அவர்களது பேரன்புக்கும் போற்றுதலுக்கும் உரிய புலமைச் செல்வர்களுள் ஒருவர் என்பதும் இங்கு நினைவு கூறத்தகுவதாகும்.

தமிழ் நலம் பேணும் இராசாளியார் அவர்கள் தமிழின் பயனாகிய தெய்வநலத்திலும் அள்ளூறித் திளைக்கும் பத்திப்பெருஞ் செல்வராகத் திகழ்ந்தார்கள். தமது வழிபடு தெய்வமாகிய திருமால் திருவடியிலே இடையறாப் பேரன்புடையவராய் வாழ்ந்த இவர்கள், அரியும் சிவனும் ஒன்றே என்னும் தெளிவுடைய சிந்தையராய்ச், சைவமும் தமிழும் வளர்க்கும் திருவாவடுதுறை ஆதீனத்தின் குருமகாசந்நிதானம் அவர்களை அன்புடன் வணங்கி அவர்களை அரித்துவாரமங்கலத்திற்கு எழுந்தருளச் செய்து வழிபாடு செய்து மகிழ்ந்தார்கள். குரு மகாசந்நிதானம் அவர்கள் இராசாளியார் அவர்களுடைய பேரன்பினையும் கல்வித் திறத்தையும் எண்ணியுவந்து அவர்களது நூல் நிலையத்தைக் கண்டு வியந்து அதற்குச் சரசுவதிமகால் எனச் சிறப்புடைய பெயர்சூட்டிப் பாராட்டி இராசாளியார் அவர்களுக்குப் பச்சைக்கல் மாலையைப் பரிசாக அளித்துச் சிறப்புச் செய்தருளினார்கள் என அறிகின்றோம். இதனால் இராசாளியார் நிறுவிய நூல் நிலையத்தின் சிறப்பு இனிது புலனாதல் காணலாம். இந்நூல் நிலையத்தில் சேமிக்கப் பெற்றிருந்த பழஞ்சுவடிகளில் ஒன்றாகிய வீர சோழிய ஏடு பிறகாலத்தில் வீரசோழியம் அச்சில் வெளிவருவதற்கு உதவியாய் இருந்தது எனத் தெரிகிறது.



இவ்வாறு தாம் தோன்றிய குலத்திற்கும் தமிழ் மொழிக்கும் தமிழ்ப் புலவர்களுக்கும் மக்களது கல்வி உடல் நலம் முதலிய சமுதாய வளர்ச்சிக்கும் உறுதுணையாய் வாழ்ந்த செந்தமிழ்ப் பெருமகனார் திருவாளர் கோபாலசாமி இரகுநாத ராசாளியார் அவர்கள் தமிழ் மக்களது தவக்குறைவால் தமது ஐம்பதாம் ஆண்டிலேயே இவ்வுலகை விட்டு மறைந்தமை ஈடு செய்ய வொண்ணாத பேரிழப்பாகும். ஆயினும் தோன்றிற் புகழொடு தோன்றுக என்னுந் தமிழ் மறைக்கு இலக்கியமாக வாழ்ந்த அவர்களது ஆருயிர், திருவமர்மார்பன் சேவடிக் கீழமர்ந்து தமிழ் மக்கள் உள்ளத்தில் புகழுருவில் நிலைபெற்றுத் தமிழ் மக்கள் வளர்ச்சியிலும் பொது நலத் தொண்டுகளிலும் நிறைந்த ஆர்வத்தைக் கிளர்ந்தெழச் செய்யும் என்பது திண்ணம்.

***

## கவர்னர் லாலி துரையும் ராஜாளியாரும்

லாலி துரை அவர்களும் ராஜாளியாரும் அன்போடு பழகிவந்தனர். குன்னூருக்கு (நீலகிரி மாவட்டம்) அடிக்கடி சென்று லாலி துரையோடு, உறவாடி தமிழுக்கும், இனத்திற்கும் பலவகைத் தொண்டுகளைச் செய்தவர் ராஜாளியார்.

அரித்துவாரமங்கலம், ஸ்ரீவரதராஜப் பெருமாள் கோயில் தர்மகர்த்தரும், கிராமாதிகாரியும், மதுரைத் தமிழ்ச் சங்க அங்கத்தினரும், பிரபுகுல சிகாமணியும், பெருங் கொடை வள்ளலுமாய, ஸ்ரீமான் வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் அவர்கள் நீலகிரியைச் சார்ந்த உதகமண்டலத்தில் சென்னைக்கவர்னர் His Excellency Sir Aurther Lawley K.C.M.G., G.C.I.E., அவர்களையும் Her Excellency Lady Lawley அவர்களையும் சீப் செக்டெட்டேரி, பிரைவேட் செக்ரட்டேரி முதலானவர்களையும் (18.07.1911)ல் சந்தித்துச் சம்பாஷித்தமையோடு, குன்னூரில் ''யோகம்'' என்னும் விஷயப் பிரசங்கமுஞ் செய்தார்.

# பாழி நிகர்ப் பாரி

(ஆய்வு கட்டுரை)

**அ. தட்சிணாமூர்த்தி,** M.A., B.Ed., M.Phil.,
தமிழ்த்துறை
அ.வீ.வா.நி. திரு புட்பம் கல்லூரி, பூண்டி.

இன்று தெருவெல்லாம் தமிழ் முழக்கம் கேட்கின்றது. ''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு'' என்னும் பாவேந்தரின் சங்கநாதம் விண்ணதிர முழங்குகின்றது. தமிழ் நலம் காக்கத் தம் இன்னுரையே வழங்கிய இளஞ்சிங்கங்களை நம்காலம் கண்ணது இந்த உணர்ச்சியெல்லாம் கிளையும் இலையும், காயும் பழமுமேயாம். ஆணிவேரையும் அதற்கு உயிரளிக்கும் உரத்தையும் நீரையும் நாம்காண வில்லை ஏன்? மறதி தமிழர்களின் பாட்டன் சொத்து! அரியணையமர்ந்து அரசோச்சிய அருந்தமிழ் அயலவராட்சியென்னும் வெந்தீயால் வாடி, வலியிழந்து, நாடிதளர்ந்த நலமிழந்து அரவணைப்பார் யாருமின்றி அலறித் துடித்தபோது எடுத்து நிறுத்தி ஏற்றமளித்தவர்களை நாம் மறந்து விட்டோம்! ஆம்! மறக்கக் கூடாதவர்களை மறந்தோம், அங்ஙனம் மறக்கப்பட்டவர்களில் ஒருவரே நம் அமரர். அரதைச் செல்வர் கோபாலசாமி இரகுநாத இராசாளியார்.

நாம் எல்லோருமே வாழ்ப்பிறந்தவர்கள். அதனால் வாழத் துடிக்கின்றோம். நம் இதயங்கள் நமக்காக - நமக்காக மட்டுமே துடிக்கின்றன. ஆயிரத்திலொருவர் இதயம் மட்டுமே பிறர் வாழத் துடிக்கின்றது. நம் இராசாளியாரின் இதயம் நாளும் துடித்தது. அத்துடிப்பின் வெளிப்பாடுதான் குன்றூரில் தொல்காப்பியன் சிலையாகி நின்றது. கொடைமடம் பட்ட பாழிமன்னன் பாரி அவர். எனவே தான் நிலமலையில் நினைப்பவர் மருளுமாறு தம் பெயராலமைந்த நூலகத்திற்குப் பத்தாயிரம் வெண் பொற்காசுகளை வாரி



வழங்கினார். சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்க்குரியது. அப்பெருமையைத் தட்டிப்பறித்துத் தமதாக்கிக்கொண்கிலர் நம் இராசாளியார். தஞ்சைதான் தலைநகர்! ஆனால் இராசாளியாரின் புலிக்கொடி தென்னகம் முழுவதும் பட்டொளி வீசிப் பறந்தது. அங்ஙனமே அரித்துவாரமங்கலத்திலிருந்த இராசாளியார் கரந்தை, சென்னை, நாகை, மதுரை, பட்டுக்கோட்டை முதலிய பல இடங்களிலும் அமைந்த தமிழ்ச் சங்கங்களின் புரவலராக விளங்கிப் புகழ் கொண்டார். அன்றுதமிழ் நலம் காத்த உ.வே.சாமிநாதய்யர். மறைமலையடிகள், இராகவ அய்யங்கார், அரசன் சண்முகனார், பின்னத்தூர் நாராயாணசாமி அய்யர், பண்டாரத்தார் போன்ற சான்றோர் அனைவரும் இவர் உதவி பெற்றுத் தொண்டாற்றினர், இவர் உதவியால் நற்றிணை நலமுற்றது! வீரசோழியம் வீறுபெற்றது! தொல்காப்பியப் பாயிர விருத்தியும் துலக்க முற்றது! தம் பிறந்த நாளைத் தாமே கொண்டாடி மகிழும் உலகத்தில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவினைத் தஞ்சையில் எட்டு நாட்கள் கொண்டாடினார்.

உடல்நோய் தீர்க்க மருத்துவக் கூடமும் உள்ள நோய் போக்கக் கல்விக் கூடமும் நூல் நிலையமும், நீர்வேட்கை தவிர்க்கத் தண்ணீர்த் தொட்டியும் கண்ட பிறர்க்குரியாளர் அவர். ''குடிசெய்வார்க்கு இல்லை பருவம்'' என்னும் நாயனார் கருத்தை மெய்யாக்கினார். தமிழினத்திற்கே சொந்தமானவர் தான் அவர் எனினும் தாம் பிறந்த குடியை மறவாமல் அதன் பெருமைக்காக உழைத்தார். சங்க காலந்தொட்டு நாடாண்ட பெருமைக்குரிய கள்ளர் குடியை வரலாறுணராத ஆங்கிலேயர் குற்றப் பரம்பரையென இழிவு செய்தது கண்டு கொதித்தெழுந்தார். குமுறினார். சான்றுகளை அள்ளி வீசினார். சரித்திரத்தைப் புதுப்பித்தார். ஐந்தாம் ஜார்ஜ் மன்னரிடம் அழுத்தம் திருத்தமுடன் வாதாடி அவ்விழிவினைப் போக்கினார். கள்ளர் மறுவாழ்வுச் சங்கத்தின் தலைமைப் பொறுப்பேற்றுக் கடுமையாக உழைத்தார்.

அரசறிய வாழ்ந்த அவரை ஆங்கில அரசர் தம் முடிசூட்டு விழாவிற்கு அழைத்துப் பெருமை செய்தார்.

இச்செயல்களைக் காண்கையில் அவர் நம்மில் ஒருவராகத் தோன்றவில்லை. ஓர் அரசராகவே நம்முள்ளத்தில் நிமிர்ந்து நிற்கின்றார். அவர் காலத்தவர், அவரை 'இராசா' என்றும் அவர் இளவலைச் சின்ன ராசா என்றும் அழைத்தனர். இது வெறும் முகமனுக்காக ஏற்பட்ட பட்டமன்று. வரலாற்றுண்மையுமாகும். அவர் பிறந்த குடி நாடாண்ட பெருங்குடியாம். சங்கநாளில் வேங்கட மலைப் பகுதியை ஆண்டவன் கள்வர் கோமான் புல்லி அவன் ''மழுபுலம் வணக்கிய மாவண் புல்லி'' எனவும் புலவர்களால் பாராட்டப்பட்டவன். அப்பகுதியெல்லாம் பின்னாளில் சோழர்களின் ஆட்சிக்குட்பட்டது. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஆண்ட சிறற்றரச மரபினர் இக்குடியினோடு தொடர்புடையவர்க எனத் தெரிகின்றது. எட்டாம் நூற்றாண்டில் திருமுனைப் பாடி நாட்டை ஆண்டவன் நரசிக்க முனையரையன். செந்தமிழ்ச் சுந்தரரின் வளர்ப்புத் தந்தை இவரே. சேதிநாட்டை ஆண்ட மெய்ப்பொருள் நாயனார் இன்றைய சேதிராயர்களின் முன்னோரல்லரோ! தொண்டை நாட்டையாண்ட பல்லவர்கட்கும் கள்ளர் குலத்தவர்கக்கும் தொடர்புண்டு. கச்சிராயன், காடவராயன், காடு வெட்டி, பல்லவராயர், பல்லவாண்டான் முதலிய பட்டமுடையார் பலர் சோழர்கட்குப் பேரதிகாரிகளாக விளங்கியுள்ளனர். தொண்டை நாட்டின் பகுதிகளான அருவா நாட்டுக்கும் அருவா வடதலை நாட்டுக்கும் கள்ளர் குடியினரோடு உள்ள உறவினை அருவா நாட்டார் அருவாத் தலைவர் என்னும் பட்டங்கள் மெய்ப்பிக்கும். வடக்கே பாயும் பாலியாற்றாங்கரையை ஆண்டவர்கள் மாவலி வாணதிரையர்கள். மாவலியார், வாணாதிராயர் என்னும் பட்டமுடையார்ல கள்ளர் மரபில் உள்ளனர். மேலும் பாலியார், பால்ராயர், பால் நாட்டார் என்னும் பட்டங்கள் அவர்கட்குரிய நாட்டையும் சுட்டுதல் காணலாம்.



திருக்கோயிலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர்கள் மலையமான்கள். அவர்கட்குக் கோவலராயர் என்னும் பட்டமும் உண்டு. கிளியூர் மலையமான்கள் என்றும் கூறுவர். மலையமார், கோபாலர், கிளியுராயர் என்னும் பட்டமுடையவர். இவர்கள் மரபினராகலாம். இங்ஙனமே கொடும்புராயர், இருங்களார் என்னும் பட்டங்கள் சான்றாகும். கொடும்பை என்பது கொடும்பாளூரின் சுருக்கப்பெயர். இருங்கோ வேளிர் என்பது மரபுப் பெயர் அண்ணவாசல் இராயர் என்னும் பட்டத்தை நோக்குக. இவ்வேளிர்கள் சோழர்கட்குப் பெண் கொடுத்தோராவர். சோழன் கிளையார் என்பதன் பொருள் சோழரின் உறவினர் என்பதாகும். கண்ட ராதித்தரின் மனைவி செம்பியன் மாதேவியார் பழுவூர் மழவராயன் மகள் இவர்கள் அதியமான் மரபினர். சேரர் குடியினர். அதியமான்கள் தகடூரை ஆண்டவர். அதியமார் பட்டமும் கள்ளர்க்கு உண்டன்றோ! குமறண்டைக் குறும்பராதித்தனும் வெட்டிவடியரயனும் பல்லவர் காலத்து அரசர்கள் குமறண்டாரும், வெட்டுவாரும், வடியராயரும் இவர்களின் வழியினர் எனலாம். இச்சிற்றரச மரபினரெல்லாம் சோழர் காலத்தில் அவர்கட்கு அமைச்சராகவும், படைத் தலைவராகவும், நாட்டுக் காவலதிகாரிகளாகவும், வட்டாரத் தலைவர்களாகவும் விளங்கியுள்ளனர். இவர்கள் கையொப்பமிட்ட நூற்றுக்கணக்கான கல்வெட்டுகள் கிடைக்கின்றன. இராசராசன் கொல்லம், குடமலை நாடு, ஈழம் கடாரம் முதலிய பகுதிகளை வெல்லத் துணை நின்ற இக்குலத்தவர் பலர். அவர்கள் வழியினரே கொல்லத் தரையர், கொல்லமுண்டார், ஈழத்தரையர், ஈழமுண்டார் போன்றோர். கடாரம் வென்ற காவலன் இராசேந்திர சோழன். கடாரம் தாங்கியார், கடாரத்தலைவர் என்ற பட்டமுடையாரின் முன்னோர் இப்பகுதிகளை மேற்பார்வை செய்தோர் எனலாம். அருமணதேசம் என்பது கடாரத்தில் ஒரு பகுதி. இப்பகுதியை மேற்பார்த்தவர் அருமண நாட்டார். இப்பட்டம் இப்போது அருமை நாட்டார் ஆகிவிட்டது. கங்கநாடு என்பது மைசூர்ப்பகுதி. இதனை வென்றவர்

கங்கநாட்டார், சோழகங்கநாட்டார் சோழகங்கர் என்போ ராவர். வைராகரத்தைக் கண்காணித்தவர் வையாரராயர் என் போராவர். கூர்ச்சரத்தினை வெல்லத் துணை புரிந்தவர் கூர்ச்சரராயர். அவர்களின் வழியினர் குச்சிராயர் ஆனார். மூன்றாம் இராசராசன் காலத்தில் வீரகங்கநாடாழ்வான் சீனத்தரையன் என்பவன் படைத்தலைவனாகப் பணியாற்றி யுள்ளான். திருமுனைப்பாடி நாட்டைக் கூடல் எழிசை மோகன் வாணிலே கண்ட பெருமாள் இராசராசக் காடவ ராயன் ஆண்டான். முதலாம் இராசேந்திரன் மண்ணைக் கடக்கம் என்னும் மானிய கேடத்தை வென்றான். இவ னுடைய படைத்தலைவன் கருணாகரத் தொண்டைமானின் அண்ணன். இவனுக்கு நந்திக் கொடியுண்டு. நத்தியராயர் ஆகியோர் இவனோடு உறவுடையோர் எனலாம். மான முத்தரையர், வங்காள முத்தரையர், செம்பிய முத்தரையர் களோடு இவர்களைத் தொடர்புபடுத்தும். இரண்டாம் இராச ராசன் காலத்தில் பெண்ணாடகப் பகுதியை ஆண்டவன் வங்கார முத்தரையனாவான். கூடகம் எனப்பட்ட கோவா வையும் அதனைச் சூழ்ந்த கொண்கானத்தையும் சோழர் வென்றுள்ளனர். கொங்கரையர், கொண்கணம், கூபகராயர் (கூவரையர்) என்னும் பட்டங்கள் இதற்குச் சான்றாகும்.

மேற்காட்டிய சில சான்றுகளே கள்ளர் குடியினர் வழி வழி அரசாட்சியில் ஈடுபட்டவர் என்பதனைக் காட்டப் போதுமானவை. சோழரும் பாண்டியரும் நிலை தளர்ந்த போது செல்வாக்குடன் ஆங்காங்கே இருந்தவர்கள் உரிமைப் பெற்றுச் சிறு சிறு பகுதிகட்குத் தலைவராயினர். விசய நகர வேந்தர்கட்கு இவர்களின் உதவி தேவைப்பட்டது. இவர் களின் உதவியின்றி அவர்கள் ஆண்டிருக்க முடியாது. விரைவில் அவர்களும் அவர்களின் பிரதிநிதிகளாய் மதுரை, தஞ்சை போன்ற பகுதிகளில் ஆண்டவர்களும் ஆர்க்காட்டு நவாப்புகளின் படையெடுப்பால் பாதிக்கப்பட்டனர். அப் போதெல்லாம் அரசரின் படைக்கு அஞ்சியதைவிட ஆங் காங்கே இருந்த கள்ளர்களின் படைக்கு மிகுதியாக அஞ்



சினர். முகமதியர்களை இவர்கள் ஓட ஓட விரட்டியுள்ளனர். பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சையின் வடக்கேயிருந்து ஆண்ட மாவீரன் மேல்கொண்டானைப் பாதிரியார்கள் பெரிதும் பாராட்டிக் கூறியுள்ளனர் அவனுடைய வழியினரே கூனன்பட்டிச் சமீன்தார்கள். மேல்கொண்டான் என்னும் பட்டம் பிற்பட்ட சோழர்களின் பட்டப் பெயரான கோனே ரின்மை கொண்டான் என்பதன் திரிபாகும். மிகவும் பிற் காலத்தில் காட்டுப்பகுதிகளில் இருந்து கொண்டு சிலபோது கொள்ளையிட்டவர்கள் உண்டு. இக்கொள்ளைகள் கூட அந்நியரின் ஆதிக்கத்தை ஒடுக்க மேற்கொண்ட முயற்சி யென்றே தோன்றுகின்றது. இவர்களின் செயலை அடிப் படையாகக் கொண்டு தொன்மை வரலாற்றை அடியோடு மறந்து இனம் முழுவதையுமே தாழ்த்தும் வகையில் சட்டமியற்றி ஒடுக்கிய ஆங்கிலேயர் செயலை வெறுத்தே நம் இராசாளியாரும் பிற இக்குலப் பெரியவர்களும் போர்க் கொடி உயர்த்தி வெற்றிக் கொண்டனர்.

நம் இராசாளியார் குடும்பம் தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்களோடு நெருங்கிய அரசியல் தொடர் புடையதாகத் தோன்றுகிறது. தஞ்சையை ஆண்ட செவ்வப்ப நாயக்கர் விசய நகர வேந்தர் அச்சுதராயரின் சகலர். இவருடைய மகனே புகழ்மிக்க இரகுநாத நாயக்கர் இவர் புலவர்களைப் பேணிய புரவலர், புலவர் இரகுநாதபுரம் என்ற பெயருடைய நம் மாவட்டத்து ஊர்கள் இவர் பெயரால் அமைந்தவை. இவருடைய மகனே மன்னர் கோயிலில் உள்ள இராசகோபாலசாமி கோயிலை விரிவாக்கியவர். மன்னார் என்பது பெருமாளின் பெயர். இப்பெருமாளின் அன்பராகிய விசயராகவர் தம் மகனுக்கு மன்னார் தாசன் என்னும் பேரனக்கு, அம்மனின் பெயரால் செங்கமலதாசன் என்னும் பெயரிட்டார். நம் இராசாளியார் பெயரோடும், அவர் தந்தையார் பெயரோடும் இணைந்துள்ள 'இரகுநாத' என்னும் பெயர் இரகுநாத நாயக்கனோடு தொடர்புடைய தாகத் தெரிகிறது. இஃதுண்மையானால் இராசாளியார்

குடும்ப முன்னோர் இரகுநாத நாயக்கன் ஆட்சியின்போது பெரும் பதவி வகுத்தவர்கள் என்றாகும். இராசாளியாரின் சாமி என்பதனையும் இணைத்துக்காணலாம். நாயக்க மன்னர்கள் போலவே இவர்களும் வைணவப் பற்றுடையவ ராய் இருப்பது இதற்கு வலிமை சேர்க்கிறது.

இதுகாறும் கூறியவற்றால் இராசாளியார் அவர்கள் வழி வழியே நாடாண்ட மரபினர் என்பது விளங்கும். விளங்கவே, அவருடைய சமூக நற்பணிகள் தொன்று தொட்டு வந்த பண்பின் விளக்கம் என்பதும் விளங்கும். இராசாளியாரின் புகழும் பெயரும் பல்லூழிக்காலம் நிலை பெறுமாக.

''ஆழிப் படையான் அடிசூடும் சென்னியான்
பாழி நகர்ப் பாரி பாவலர் கோன் - ஊழி பல
வாழி எனப்போற்ற வண்டமிழ்க்கு வாழ்வளித்தோன்
ஏழிசையாய் வாழ்வான் இனிது.''

***

## பல்லக்கில் பவனிவந்து ஓட்டுப்போட்டவர்

ராஜாளியார் தாலுகா போர்டு தேர்தலுக்கு நின்ற போது அவருக்கு வாக்களிக்க வந்த சிங்காரவேல் உடையார் அவர்கள் புற்றுநோயால் பாதிக்கப்பட்டு நடக்க இயலாது துன்புற்றார். இதனை அறிந்த ஆதீன கர்த்தர் உடையாருக்கு ஓட்டுப்போட பல்லக்கினை அளிக்க முன்வந்தார். தாலுகா போர்டு தேர்தலில் உடையார் அவர்கள் குடந்தை சப் - கலெக்டர் மாடியில் நடந்த தேர்தலுக்கு பல்லக்கில் பவனி வந்து ராஜாளியாருக்கு ஓட்டுச் செய்தார்.



# கலையோடு தமிழ் கமழும் இராசாளியார் பிறந்த பதி

### முனைவர் குடவாயில் பாலசுப்பிரமணியன்

தமிழனாகப் பிறந்து தமிழாக வாழ்ந்து தமிழாகவே அமரத்துவம் பெற்றவர் வா. கோபால்சாமி இரகுநாத இராசாளியார் ஆவார். அவர் பிறந்த பதியோ அரதைப் பெரும் பாழி என்னும் அரித்துவார மங்கலமாகும். ஆடல் சால உடையார் அழகாய பீடர் கோயில் அரதைப் பெரும்பாழியே பண்ணார் பாடல் உடையார் ஒருபாகமும் பெண்ணார் கோயில் அரதைப் பெரும் பாழியே நறைகொள் கொன்றை நயந்தார் தரும் சென்னிமேல் பிறையர் கோயில் அரதைப் பெரும் பாழியே; கணையினால் முப்புரம் செற்றவர் கையினில் பிணையர் கோயில் அரதைப் பெரும் பாழியே; அரிவை பாகம் அமர்ந்தார் அடியாரொடும் பிரிவு இல் கோயில் அரதைப் பெரும் பாழியே; கரிய மாலோடு அயன் காண்பு அரிது ஆகிய பெரியர் கோயில் அரதைப் பெரும் பாழியே சேண் உலா மும்மதில் தீ எழச் செற்றவர் பேணு கோயில் அரதைப் பெரும்பாழியே என்ற திருஞானப் பிள்ளையாரின் பண்ணார்ந்த சொற்கோவைகள் மலர்ந்த பீடுடைய அத்திருக்கோயில் கோச் செங்கட் சோழன் எடுத்த பெருமையுடையதாகும்.

''திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
பலகோடிப் பத்திமையாய் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண் கொடியும் இல்லா ஊரும்
அரும்போடு மலர் பறித்திட்டு உண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே''

என்பது திருநாவுக்கரசர் திருவாக்கு.

''அவ்வகையில் நோக்கும் போது எழிலார்ந்த கட்டடங்களோடு கலைநயம் மிக்க சிற்பங்களைத் தன்னுள் பொதித்துக் கொண்டு பெருந்திருக் கோயிலாக அரதைப் பெரும்பாழி சிவாலயம் பேரழகோடு காட்சி நல்குகின்றது.

திருக்கோயில்களின் வகைபாடுகளைக் கூறும் நாவுக்கரசு பெருமானார்,

''பெருக்காறு சடைக் கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோடு டெட்டு மற்றும்
கரக்கோயில் கடி பொழில் சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப் பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து
தாழ்ந் திறைந்த் தீவினைகள் தீருமன்றே''

என்று கூறி திருக்கோயில்களின் அமைப்பு முறைகளை விவரிக்கும் அப்பரடிகள் பெருங்கோயில்கள் எழுபதினோ டெட்டும் எனவும் குறிப்பிட்டுள்ளார். அப்பெருங் கோயில்கள் எழுபத்தெட்டில் எழுபது கோயில்கள் மாடக் கோயில் அமைப்பினைக் கொண்டவையாகும். குடவாயில், நன்னிலம் போன்ற ஊர்களில் உள்ள மாடக் கோயில்களை திருஞானசம்பந்தர் பெருங்கோயில் என்றே குறிப்பிட்டு பாடியுள்ளார். மாடக் கோயில் அல்லாத திருக்கோயில் சிவாலயத்தினை சுந்தரர் பெருங்கோயில் என்றே குறிப் பிடுகின்றார். அப்பர் பெருமான் கூறும் பெருக்காறு சடைக் கணிந்த பெருமான் சேரும் பெருங்கோயில் எழுபதி னோடெட்டில் திருமங்கையாழ்வார் கூறும் என் தோள் ஈசற்குரிய எழில்மாடம் எழுபதைக் கழிக்க திருக்கோளிலி போன்ற மாடக் கோயில் அல்லாத எட்டு பெருங் கோயில் களை நம்மால், தனித்து வகைப்படுத்த இயலும். திருஞான சம்பந்தர் ''பெரும்பாழி'' என திரு அரதைத் திருக்



கோயிலைக் குறிப்பதால் பீடுடைய அப்பெருங்கோயில்கள் எட்டனுள் பாழிவகையில் அமைந்த இத்திருக்கோயிலும் ஒன்றே என்பதில் ஐயமில்லை.

பாழி என்றால் கோயில், இடம், குகை, நகர், மருத நிலத்தூர், முனிவர் வாழிடம் எனப் பல பொருள்களைத் தமிழகராதி உரைக்கும். திருவாரூர் திருக்கோயில் வளாகத் தினுள் இரண்டு பாடல்கள் பெற்ற திருக்கோயில்கள் உண்டு. ஒன்று திருமூலட்டானம் என்னும் புற்றிடங் கொண்டார் திருக்கோயிலாகும். மற்றொன்று அரநெறி எனும் அசலேச மாகும். இங்கு அரநெறி என்பது அரனாகிய சிவபெருமான் உறைகின்ற இடம் என்பதைக் குறிக்கும் சொல்லாகும் அரதை என்ற சொல்லும் அரனாகிய சிவபெருமான் உறை கின்ற இடத்தையே குறிப்பதாகும்.

அரதை என்னும் ஊரில் உள்ள பாழியாகிய பொந் தினுள் ஈசன் திருவுருவம் இருந்தமையாலும், அந்தணர்கள் வாழும் திருவூரை மங்கலம் என்ற சொல்லால் குறிப்பதாலும் அரதைப் பாழி மங்கலம் என அழைக்கத் தொடங்கி பின்பு, பாழி அல்லது துளை (குகை) என்பதற்குரிய வட சொல்லான துவாரம் என்பதைக் கொண்டு அரதைத் துவாரமங்கலம் எனக் குறிப்பிடத் தொடங்கினர். பின்னாளில் அரண் என்பதை அரியெனவும், கண்ணனுக்குரிய துவாரகை என்பதை துவாரகை மங்கலம் எனவும் கொண்டு அரித்துவாரகை மங்கலம் என அவ்வூரினை அழைக்கத் தொடங்கியவர்கள் காலப் போக்கில் அரித்துவார மங்கலம் எனக் குறிப்பிட லாயினர். கி.பி. 1600-1645 வரை சோழ நாட்டை ஆட்சி செய்த இரகுநாத நாயக்கர் காலத்திய செப்பேட்டுத் தொகுதியில் மூவர் முதலிகளால் பாடல் பெற்ற அரதை பெரும்பாழி என்றும் அரிவீரராக மங்கலமாகிய சமிவனம் என்ற குறிப்பும் காணப்பெறுகின்றது. எனவே அரித்துவார மங்கலம், அரிவீர ராக மங்கலம் என்பதெல்லாம் காலப்போக்கில் ஏற்பட்ட பெயர் மாற்றங்களேயாகும்.

தமிழகத்தில் எந்த திருக்கோயிலும் காண இயலாத ஒரு தனிப்பெருஞ்சிறப்பாக மூவர் முதலிகளின் திருவுருவச் சிற்பங்கள் கருவறையின் புறச்சுவரில் காணப்பெறும் இட மாக விளங்குவது அரதைப் பெரும்பாழியாம் திருக் கோயிலேயாகும். கருந்திட்டைக்குடி சிவாலயத்தின், கரு வறை சுவரில் திருஞானசந்பந்தர் மற்றும் திருநாவுக்கரசரின் புடைப்புச் சிற்பங்களும், திருக்காமராசவல்லி கருவறை அதி டானத்தில் சுந்தரர் பரவையாருடன் திகழும் புடைப்புச் சிற்பக் காட்சியும், கள்ளப்பெரம்பூர் சிவாலயத்தின் கருவறை மாடமொன்றில் திருஞானசம்பந்தரின் புடைப்புச் சிற்பமும், உள்ளன.

சுந்தரர் பிறந்த பதியான திருநாவலூர் சிவாலயத்து மகாமண்டபத்து புறச் சுவரில் சேய்ஞாலூர் பிள்ளையாரின் வரலாற்றுத் தொடர் சிற்பக் காட்சித் தொகுதியின் நிறைவுப் பகுதியில் மூவர் முதலிகளின் திருவுருவங்கள் புடைப்புச் சிற்பங்களாகவுள்ளன. இதுபோன்றே தாராசுரம் மற்றும் மேலக்கடம்பூர் சிவாலயத்து கருவறை மற்றும் மகாமண்டப புறச்சுவர் சிற்றுருவ சிற்பக் காட்சி தொகுதிகளில் மூவர் முதலிகளின் வரலாற்றுச் சிற்பக் காட்சிகள் புடைப்புச் சிற்பங்களாகவே உள்ளன.

மேலே கண்ட சிவாலயங்களில் காணப்பெறும் தேவார மூவர் சிற்பங்களையெல்லாம் விஞ்சும் வண்ணம் அமைக்கப் பெற்ற மூவர் முதலிகளின் சிற்பங்களே அரித் துவாரமங்கலம் திருக்கோயிலின் தனிச் சிறப்பாகும். இத் தலத்திற்கு திருப்பதிகம் தந்தவர் திருஞானசம்பந்தர் என்ப தால் அவர் தம் திருவுருவம் மட்டும் புடைப்புச் சிற்பமாக இல்லாமல் முழுவுருவமாக செதுக்கப் பெற்று கூரை போன்ற ஒரு அமைப்பிற்கு கீழாக இடம்பெறுமாறு செய்யப் பெற் றுள்ளது. குழந்தையாக சீர்காழிக் குளக்கரையில் திருஞானப் பால் அருந்திய நிலையில் இருந்த ஞானசம்பந்தரை தந்தையார் யார் கொடுத்த எச்சில் பாலை உண்டாய் என வினவிய போது ஒருகாலை உயர்த்தி ஆடிய நிலையில்



சுட்டுவிரல் காட்டி தோடுடைய செவியனாம் தானியப் பதையும் உமையம்மையும் காட்டிய திருவடிவம் தான் இங்குச் சிற்பமாகக் காணப் பெறுகின்றது. திருஞானசம்பந்த ரின் திருவுருவச் சிற்பத்திற்கு அருகாக சுவரில் அரைச் செதுக்குருவாய் (புடைப்புச் சிற்பமாய்) உழவாரத்தை மார்பில் அணைத்த வண்ணம் ஈசனை வணங்கும் கோலத்தில் திருநாவுக்கரசரின் சிற்பம் இடம் பெற்றுள்ளது.

இத்திருவுருவங்களுக்கு அருகே சுந்தரர் தம் இரு தேவியரான பரவையார், மற்றும் சங்கிலியாருடன் நிற்கும் காட்சி அரைச் செதுக்குருவ சிற்பமாய் சுவரில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். புடைப்புச் சிற்பமாக விளங்கும் இக்காட்சியில் சுந்தரர் தன் இடக்கரத்தை வலப்புறம் நிற்கும் பரவையாரின் தோளின்மீது இறுத்திய நிலையில் வலக் கரத்தில் நீண்ட கோலொன்றின் ஒரு முனையைப் பற்றியுள் ளார். அக்கோலின் மறுநுனியை பரவையார் தன் வலக் கரத்தால் தாங்கிப் பிடித்துள்ளார். அழகராம் சுந்தரரின் காதில் கலைநயம் மிக்க தோடுகள் எடுப்பாக விளங்கி, மார்பில் புரிநூல் திகழ சுவர் தம் வலப்புறம் கை கூப்பிய நிலையில் சங்கிலியார் நிற்கின்றார். பொதுவாக சுந்தரர் பரவையாருடன் நிற்கும் சிற்பக் காட்சிகளிளெல்லாம் பரவையார் தோள்மீது ஒருகை இறுத்த மறுகரத்தில் செண்டு கோல் ஒன்றினை பற்றிய நிலையைத் தான் காணலாம். ஆனால் இங்கு திகழும் சிற்பக் காட்சியில் செண்டு கோல் இல்லை. மாறாக பிரம்பு போன்ற சிறுகோல் ஒன்றினை இருவரும் பற்றி நிற்கின்றனர்.

தமிழகத்தில் வேறு எங்கும் காண இயலாத சுந்தரரின் இக்கோலக் காட்சிக்கு விடை தேட முற்படும் போது சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணமே விடை பகர்கின்றது. சுந்தரரின் திருமணத்தைத் தடுத்து ஆட் கொண்ட பரமனார் அவருக்கு திருவாரூரில் பரவையார் துணைவியராகத் திகழ அருள்புரிந்தார். திரு மணம் முடிந்தவுடன் பரவையாருடன் ஆரூர் திருவீதிகளைக் காணப் புறப்பட்ட சுந்தரரின் அழகுக் கோலத்தை

''கையினிற் புனை பொற்கோலும் காதினில் இலங்கு தோடும்
மெய்யினிற் துவளும் நாலும் நெற்றியின் விளங்கு நீறும்
ஐயனுக்கு அழகிதாம் என்று ஆயிழை மகளிர் போற்ற
சைவ மெய்த் திருவின் கோலம் தழைப்ப வீதியினைச் சார்ந்தார்''

*(பாடல் எண். 185)*

என்று சேக்கிழார் பெருமான் கூறுவார். இங்கு காணும் சுந்தரர் கோலத்தினைத் தான் அரதைப் பெரும் பாழியில் நாம் காண்கிறோம். ஆதிசைவ மரபில் அவதரித்தவர் என்பதாலும், நரசிங்க முனையரையர் என்ற அரசரிடம் வளர்ந்தவர் என்ப தாலும் வைதீக திருவும், மன்னர்க்குரிய பொலிவும் அவரிடம் ஒருங்கே திகழ்ந்தன. மன்னவர் தம் மணவினைக் குரிய பொற்பிரம்பினைத் தம்பதியர் இருவரும் பற்றி நிற் கின்றனர். கையினிற் புனை பொற்கோல் காதினில் இலங்கு தோடுகள், மெய்யினில் புரளும் புரிநூல், நிறுதரித்த திரு மேனி ஆகியற்றோடு தேவியர் இருவரும் உடனிருக்க சுந்தரரை இங்கு நாம் தரிசிக்கலாம். கலைநயமும் தமிழ்ச் சுவையும் ஒருங்கே முழைக்கப் பெற்று இங்கு வடிக்கப் பெற்றுள்ள இச்சிறப்க் காட்சி மூன்றாம் குலோத்துங்க சோழனின் பெருங்கொடை என்பதைக் கல்வெட்டுக்கள் வழி அறியலாம். மூவர் முதலிகளின் இக்காட்சி சிற்பங்கள் தவிர இங்குள்ள இரண்டு கோஷ்ட தோரணங்களில் சிவ பெருமான் உமையன்னை முன்பு தாளம்தட்டி பாடும் சம்பந்தர், ஆடும் கோல சம்பந்தர் ஆகிய சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு திரு அரதை பெரும் பாழியாம் திருக்கோயில் கலை மணமும், தமிழ் மணமும் ஒருங்கே கமழ காட்சியளிக்கின்றது.

தமிழ் மணம் கமழும் இப்பதியில் தோன்றிய கோபால்சாமி இராசாளியார் தம் வாழ்நாள் முழுதும் தமிழ்ப் பணிக்காகவே உழைத்தவர். நற்றமிழ் புலவர்களுக்கு புரவலராகத் திகழ்ந்து வாரி வழங்கிய வள்ளல் பெருமானாக வாழ்ந்தவர். தமிழ்ச் சங்கங்கள் தழைக்கவும், நற்றமிழ் நூல்கள் நாடெங்கும் பரவவும் அயராமல் உழைத்தவர் அப்பெருமகனார் நினைவாக ஓர் அறக்கட்டளை நிறுவி,



முதலீட்டிலிருந்து கிடைக்கும் உருவாயின் உதவியால் மூவாண்டுகளுக்கு ஒரு முறையேனும் பிழையில்லாத தரமுடைய தமிழ் நூல் ஒன்றினை அமரர் ராசாளியார் நினைவு வெளியீடாக வெளியிட முனைந்தோமாயின் அதுவே அப் பெருமகனாக செய்யும், பொருத்தமுடைய நினைவாஞ் சலியாக அமையும்.

***

## செந்தமிழ் புரவலர் கோபாலசாமி இரகுநாத இராசாளியார்

புலவர் **சிங்காரவேல் சேதுராயர்.**

1. தமிழெடுத்த தமிழவேள் உமையடுத்த மாகேச
   னெனும் பேர்ச் சான்றோன்
   துளவடுத்த அரிப்பெயரான் கோபால சாமி
   ரகுநாதன் தூயன்,
   மலயமடுத் திருதலைய்ம் ஒருதலையா மங்கு
   மதிழ் வளர்ப்ப மென்னா,
   இலவரடுத் தொழில் சார்ந்த கரந்தை நகர் தமிழ்ச்
   சங்கம் எடுத்தார் காண்டும்.

2. தொன்று பெருந்தமிழ்க் குடியில் தூயலார்
   சிலர் தோன்றச் சுற்றம் மற்றும்,
   ஒன்றவுளம் வெதும்புகொடுஞ் சட்டமது வெள்ளை
   அரசியற்றி ஒவ்வாக்,
   கன்று பல கொடுத்தண்டம் விளைத்தி டலும்
   கனன்றெதிர்த்து கண்டித்தாங்கே,
   நின்றொழிய அருஞ்செயலும் நிகழ்த் தினான்
   எம்மண்ணல் புகழே நிற்க!

# இராசாளியாரும் நூலகமும்

-முனைவர் அ. கணேசன்
துறைத்தலைவர்,
நூலகம் மற்றும் தகவல் அறிவியல் துறை,
அ.வீ.வா.நி. திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி),
பூண்டி.

மறைந்த திருமிகு வா. கோபாலசாமி ரகுநாத இராசாளியார் அவர்கள் பிறந்த ஊர் திருவரதைப் பெரும்பாழி எனப்படும் அரித்துவாரமங்கலமாகும். இத்தலம் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரால் பாடப்பெற்றது. (ஆகத் திருப்பதிகம் 268) அவர் வாழ்ந்த காலம் 50 ஆண்டுகள் (1870 - 1920). ஐம்பது ஆண்டுகளே வாழ்ந்தாலும் அவரது தொண்டும், மனித சமுதாயத்திற்கு ஆற்றிய பணிகளும், ஈட்டிய புகழும் ஆயிரமாயிரம் ஆண்டுகள் ஒளிர்ந்து கொண்டேயிருக்கும்.

இவர் தமது சொந்த நூலகத்தில் எங்கு கிடைக்கப் பெறாத அரிய நூல்களையும், பழங்கால ஓலைச்சுவடி களையும் சேகரித்து வைத்திருந்தார். தமிழ்த் தாத்தா உ.வே.சா. அவர்கள் இராசாளியாரை அணுகி அவரிடமிருந்த புறநானூற்று ஓலைச்சுவடிகள் முழுமையையும் பெற்ற பின்புதான், முழுமைபெற்ற புறநானூற்றுச் சுவடிகளை அச்சேற்றினார். இந்த அற்புதமான தகவலை ஐயர் அவர்களே புறநானூற்று முதற்பதிப்பின் முன்னுரையில் கூறியுள்ளார்.

திருவாடுதுறைஆதீனத் தலைவர் இவரது நூல் நிலையத்தைப் பார்த்து வியந்துஅதற்கு சரசுவதி மகால் என்று பெயரிட்டுப் பாராட்டினார்கள். இந்த நூலகத்தில் இருந்த ஓலைச்சுவடிகளில் வீரசோழியம் என்ற இலக்கண நூலும், நற்றிணையும் சிறப்பு மிக்கது என்று இதனைக் கண்ட



பெரும்புலவர் வெள்ளை வாரணனார் அவர்கள் தமது நூல் ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்.

1912 ஆம் ஆண்டு மறைமலையடிகள் இவரது நூலகத்தைக் கண்டு வியந்து பின்பு பிரணவம் என்ற தலைப்பில் சிறந்த சொற்பொழிவாற்றினார். அடிகள் மறுத்தும் வற்புறுத்தி ரூ. 250/- நன்கொடையாகக் கொடுத்தார் வள்ளல் இராசாளியார்.

இராசாளியார் அவர்கள் தமிழ் மொழிப்பற்று காரண மாக தமிழ் நூல்களைச் சேகரித்ததோடு மட்டுமல்லாமல் 1912இல் 'கரந்தைத் தமிழ்ச் சங்கக் கலா நிலையம்' என்ற கரந்தை தமிழ்ச் சங்க நூலகத்திற்குத் தம் நூல் நிலையத் திலிருந்த நூற்றுக்கணக்கான அரிய நூல்களை வழங்கினார்.

குன்னூரில் ஒரு நூலகத்தை அமைத்துக் கொடுத்தார். அங்கு 10.09.1911இல் இராசாளியார் நூல் நிலையத்தின் முன்பு தொல்காப்பியரின் உருவச்சிலைதனை நிறுவித் திறந்து வைத்து அந்நூலகத்திற்கு ரூபாய் பத்தாயிரம் (இன்றைய மதிப்பு அறுபது லட்ச ரூபாய்) நன்கொடையாக வழங்கினார்.

இராசாளியார் இறந்த பின்பு 1940இல் அவரது குடும்பத்தினர் பெருந்திரளான அரிய நூல்களை தருமபுரம் ஆதீனத்திற்கு நன்கொடையாக வழங்கிவிட்டனர். பெரும் புலவர் அரசன் சண்முகனார் அவர்களைக் கொண்டு தொல்காப்பிய பாயிர விருத்தி என்னும் நூலை வெளியிடச் செய்துள்ளார்.

இராசாளியார் அவர்கள் நூலகப் புரவலராகவும் பல்வேறு தமிழ்ச்சங்க அமைப்புகளில் தொடர்புடையவராக வும் இருந்தார் என்கிற பல நிகழ்வுகளை நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் தம் கள்ளர் சரித்திரம் என்னும் நூலில் இராசாளியாரைப் பற்றி குறிப்பிடுகிறார்.

மறைந்த முன்னாள் மத்திய அமைச்சர் திரு ஆர்.வி. சாமிநாதன் தஞ்சை கூட்டுறவு சங்கத்தில் பேசும்பொழுது

வாண்டையாரும் இராசாளியாரும் சமூகத்தின் இரண்டு கண்கள் என்றும் இழிவான குற்றப் பரம்பரையை நீக்கியதும் கல்விக்கண்ணைத் திறந்ததும் இருவரையே சாரும் என்று பாராட்டினார்.

> வாழ்ந்து பார்க்க வேண்டும் என்கிற ஆசை - பலருக்கு
> வாழ்ந்து காட்ட வேண்டும் என்கிற வேட்கை -
> சிலருக்கு

திரு இராசாளியார் அவர்கள் வாழ்ந்து காட்டியவர். தம் சமூகமே வாழ வழிகாட்டியவர். அவர் தம் புகழ் உலகுள்ளவரையும் வாழும்.

***

*(தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபை உப அக்கிராசனபதி,*
**ஸ்ரீமான் : பொ. முத்தையா பிள்ளை** அவர்களியற்றியது)

**நிலமண்டிலவாசிரியப்பா**

ஒருபரம் பொருளி னுண்மையை நாடி
இருவளி யியங்கு மியல்புளத் துன்னி
ஒருவழி யரக்கி யோங்குபே ரொலிகண்
டன்ன நாதந் தொருகுறி கண்டு
பின்ன மான சோதிகண் டதுகடந்
தன்னவ னடியிணை யன்புடன் பேணும்
மன்னவன் மன்னுயிர்க் கருளுஞ் சீலன்
கோபால சாமி ரகுநாதப் பேரோன்
அரித்வார மங்கல மாகிய தன்னூர்
அதனி லறிவின் மிக்கோ ருய்யப்
புந்தி தெளியப் புத்தக சாலையுங்
கல்விச் சாலையு மாணவர்க் காக
ஔஷத சாலையு மமைத்தான் வாழ்க
அன்ன சாலைக ளென்றும் வாழ்க
அவ்வூர் வாழ்க ஆலயம் வாழ்க
எல்லாம் வல்ல இறைவற் பேணு
நல்லோர் நாளும் வாழ்க வாழ்கவே.



# கொடைவள்ளல் கோபாலசாமி

பெருங்கவிக்கோ
வா.மு. சேதுராமன்
உலக அமைப்பாளர்,
பன்னாட்டுத் தமிழுறவு மன்றம்.

கொடைவள்ளல் அந்நாள்வா கோபாலசாமி
நடைவள்ளல் சரித்திரம் நாட்ட - தடையின்றி
பேரன்கோ பாலசாமி பீடுறு பாட்டனுக்கே
ஆரதமிழ் மாலைசூடும் அன்பு!

ஊட்சிகுன் னூரில்ஒல்காப் புகழ்பெருமான்
ஈட்டுதமிழ் வேந்தர் இணையில்லாப் பாட்டுடைத்
தொல்காப்பி யர்க்குத்தான் தோன்றுமலை மீதுசிலை
வல்லஅன்று வைத்தாரை வாழ்த்து!

வேந்தர் இரகுநாத எனும் இராசாளியார்
தீந்தமிழ் வாழ்விக்கச் செய்பொருள்கள் - ஈந்தீந்தே
உன்னதம் செய்வித்த ஒப்பிலார் யாமறவோம்
தன்னேரில் ஆற்றல் தவம்!

செந்தமிழ் வித்தகர்கள் சீரார் உ.வே.சாவும்
நந்தா மறைமலை நல்லடிகள் - விந்தை
அரசன்நம் சண்முகனார் ஆன்றகவி வாணர்
சிரமேற்கொண்டே மூட உதவும்சீர்!

வியப்புக்கும் மேல்வியப்பாம் வேந்தர்சேர் பாலர்
நயத்தமிழ் செம்மொழி நாட்ட - செயல்கண்ட
அன்னாள் அறிஞருள் ஆழ்ந்து தடம்பதித்தார்
மன்னர் சாதனையை வாழ்த்து!

அரித்துவார மங்கலம் ஆய்ந்த புகழ்த் தோன்றல்
விரிந்தமனம் கொண்ட வினைஞர் - உரிமைக்
களத்தமிழ் போராட்டம் காணுதமிழ்க் காத்தோர்
வளமீந்த வள்ளல்கோ வாழ்!

பேறுபெற்ற வள்ளல் பெயர்நிலைக்கப் பேரனார்
வீறுதமிழ் தேர்ப்புலவர் வெற்றிதரு - ஏறுநடை
கொண்டுகுறி யெல்லாமே கோர்த்திந் நூல் தந்தாரை
காண்டு தமிழர் போற்றல் காப்பு!

***

## 'கரந்தை தமிழ்ச் சங்கம்' இராசாளியார் அவர்கட்கு அளித்திட்ட பாராட்டுக்களில் சில

வழக்கறிஞர் **வீ. தங்கதுரை**

கரந்தை தமிழ்ச் சங்கம் தோன்றிய நாள் தொட்டு இதனைப் பேணிப் புரந்தாருமாகிய பெருமகனார் இராசாளியார் அவர்கள் செந்தமிழ், ஆரியம், ஆங்கிலம் முதலிய மொழிகளைக் கற்றுணர்ந்து அடங்கியவரும், தமிழ் மொழி வளர்த்தலே தம் கடனாகக் கொண்டவரும் நன்னெறி யொழுகிய இன்னிசைச் செல்வருமானவர் இராசாளியார்.

(ஆண்டு அறிக்கை, ப. 15)

கார்வண்ணங் கொடைப்பெருமான் கருணையால் அரித்துவாரமங்கலம் வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார், அவர்கள் நீடு வாழ்வார்களாக! நமது சங்க ஆதரிப்பாளரும் தமது கொடைத்திறம், நடைத்திறம், புலமைத் திறங்களால் தமிழகம் முழுவதும் தம் புகழ் பரப்பியவர் இராசாளியார்.

(ஆண்டு அறிக்கை, ப. 12)



### செந்தமிழ் கைத்தொழில் கலாசாலை

நமது சங்கத்தை தோற்றுவித்தவரும், ஆதரிப்பாளரு மான இராசாளியார் அவர்கள் நல் ஆசி மொழிகள் அளித்து *(6.10.1916)*ல் விஜயதசமியன்று துவக்கப்பட்டது.

*(சங்க ஆண்டு அறிக்கை, ப. 7)*

### இரங்கலில் சங்கம் கூறிய மொழி :

இராசாளியார் அவர்கள் உடலொழிந்து இறைவனடி சேர்ந்தமை தமிழ்நாட்டிற்கும் சிறப்பில் இச்சங்கத்திற்கும் பெரும் இழப்பே ஆகும். இராசாளியாரின் அன்பு உள்நின்று தமிழர்களை எல்லாம் ஆட்டி வைக்கும் என்றே சங்கம் கருதுகிறது.

### தமிழவேள் உமாமகேசுவரனாரின் உன்னத தீர்மானம் :

இராசாளியார் பெரிய திருவுருவப் படம் சங்க வளா கத்தில் நிறுவப்பட வேண்டும். அவரது நினைவு போற்றத் தக்கதாகும் என்று செயற்குழுவில் திரு உமாமகேஸ்வரனார் அவர்களால் தீர்மானம் முன்மொழிந்து நிறைவேற்றப் பட்டது.

பின்னர் இராசாளியாரின் திருவுருவப் படமும் திறந்து வைக்கப்பட்டுள்ளது.

*(சங்க ஆண்டு அறிக்கை, ப. 20)*

*பின்குறிப்பு :*

இன்று படமும் இல்லை இராசாளியாரின் நினைவாக எதுவுமே இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

# இராஜாளியார் புகழ் வாழியவே!

டாக்டர் **A. சீனிவாசன்**, M.D.,D.C.H.,

சூரியனே அஸ்தமிக்காத சாம்ராஜ்யத்தின் சக்கர வர்த்தி ஐந்தாம் ஜார்ஜ் அரசரின் அழைப்பினை ஏற்று முடி சூட்டும் விழாவில் பங்கேற்றும் அல்லாது ஐந்தாம் ஜார்ஜ் பேரரசரோடும் மேன்மைதங்கிய மகாராணி மேரி அம்மை யாரிடமும் நேரில் பேசி நமது இனத்தின் இழிவினைப் போக்கியவர் இராசாளியார். குற்றப் பரம்பரை கொடிய சட்டத்தினை எதிர்த்து முதல் முழக்கமிட்டவர் இராஜாளி யார்! வெற்றி கண்டவரும் இராஜாளியார்.

ஆங்கிலப் பேரரசரோடு நட்புறவு கண்டு அந்த செல் வாக்கை சொந்த நலனுக்குக் கிஞ்சித்தும் பயன்படுத்தாமல் தமிழ்மொழிக்கும், இனத்திற்கும் பாடுபட்ட பண்பாளர் இராசாளியார்.

கவர்னர் லாலி மற்றும் ஆஸ்டின் துரையும் இராசாளியாருக்கு நெருங்கிய நண்பர்களாகத் திகழ்ந்தார்கள். அரித்துவாரமங்கலத்தில் ''கார்னேஷன்'' கட்டிடம் முடி சூட்டு விழா நினைவு கட்டிட அடிக்கல் நாட்டு விழா மற்றும் திறப்பு விழாவிலும் பங்கேற்றுச் சிறப்பித்துள்ளனர்.

கவர்னர் லாலி துரை அவர்களிடம் கொண்ட நட்பின் காரணமாகவே ஊட்டி, குன்னூரில் தொல்காப்பியனுக்குச் சிலை அமைத்து நூல் நிலையத்திற்குப் பத்தாயிரம் ரூபாயும் அளித்திட்டார். கவர்னர் பெருமானின் நட்பே ஐந்தாம் ஜார்ஜ் அரசரின் முடிசூட்டும் விழாவில் பங்கேற்க வாய்ப்பு மற்றும் அவர்களோடு பேட்டி காண்கின்ற பேறும் இராசாளியாருக் குக் கிட்டியது. கரந்தை, மதுரை தமிழ்ச் சங்கத்தினைத் தோற்றுவித்து தமிழ்ப் புலவர்கட்கு அள்ளி அள்ளிக் கொடுத்திட்ட இராசாளியார் புகழ் வாழியவே!



# மானம் காத்த மாவீரர் இராசாளியார்!

**ம.வை. கணேசத்தேவர்**
மாநிலத் தலைவர்,
இராசராசன் கல்வி பண்பாட்டுக் கழகம், சென்னை.

அரித்துவாரமங்கலம் வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார். இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழிகளிலும் தேர்ச்சி பெற்று புலமை பெற்றவராகத் திகழ்ந்தார். தமது ஊரிலும், குன்னூரிலும் நூல் நிலையங்கள் அமைத்து க்ல்வி வளர அரும்பணி ஆற்றினார். தமிழின் பெருமையை உலகிற் குணர்த்த தமிழ் மொழியின் முதல் இலக்கண நூலான தொல்காப்பியத்தை இயற்றிய தொல்காப் பியருக்கு குன் னூரில் சிலை நிறுவியுள்ளார். குன்னூர் நூல் நிலையத்திற்கு அன்றைய நாளிலேயே ரூபாய் 10,000/- நன்கொடை வழங்கியுள்ளார். பெரும்புலவர் அரசஞ் சண்முகனார் அவர்களைக் கொண்டு, ''தொல்காப்பிய பாயிர விருத்தி'' என்னும் நூலை வெளியிடச் செய்துள்ளார். புறநானூறு போன்ற சங்க கால நூல்கள் இன்று நமக்கு கிடைக்கப் பெற்றுள்ளதற்கு மூல காரணம் இராசாளியார் அவர்கள். டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள் இராசாளியார் அவர்களிடமிருந்துதான் புறநானூற்றின் முழு ஓலைச் சுவடிகளை பெற்று அச்சேற்றி நூலை வெளியிட்டி ருக்கிறார்கள். அவரது காலத்தில் வாழ்ந்த பல புலவர்களைப் பொருள்கள் வழங்கி ஆதரித்துள்ளார்.

கள்வர் என்ற சொல் பண்டைய நாளில் பெருமை பொருந்திய சொல்லாக வழங்கப்பட்டு வந்தது. எனவேதான் ஆழ்வார் ஒருவர் கடவுளாகிய திருமாலை ''உள்ளம் கவர் கள்வன்'' எனப் பாடியுள்ளார். ஆங்கிலேய ஆட்சிக்காலத்தில் இவ்வினத்திற்கு ஏற்பட்ட இழுக்கான குற்றப் பரம்பரை சட்டத்தை எதிர்த்து ஆட்சியாளரிடம் தமக்கிருந்த செல் வாக்கைப் பயன்படுத்தி இவ்விழுக்கைப் போக்கி சமூக மக்கள் மேன்மைபெறச் செய்தார்.

# தாய்வழித் தாத்தாவின் தமிழ்த் தொண்டு!

டாக்டர் **V. வரதராஜன்** (V.V.R.)

என்னுடைய ஆரம்பக்கல்வி தொடங்கப்பட்டது அரித்துவாரமங்கலமே. தாத்தாவின் கல்லறையைச் சுற்றி பூந்தோட்டம் அமைந்திருக்கும். ''சமாதி பாட்டி'' என்று நாங்கள் அழைப்பது பெரிய தாயகத்தம்மையார் அவர்கள் தாத்தாவின் இல்லத்தரசி ஆவார்கள்! இளமைக் கால நினைவுகள் என்றென்றும் நெஞ்சகத்தில் நீங்காத இடம் பெற்றவை!

இன்று நான் மருத்துவத் துறையில் பணியாற்றி வருகிறேன். மருத்துவத்துறை எங்களுக்கு மரபு வழித் துறையாகும். தாத்தா இராசாளியார் அவர்கள் அரித்துவார மங்கலத்தில் ''ஔஷதசாலை'' என்ற மருத்துவ மனையைத் தோற்றுவித்தார். ஏறத்தாழ 50க்கு மேற்பட்ட கிராமவாசிகளுக்கு அதுவே மருத்துவமனையாகும். மருத்துவம் செய்து மகத்துவம் பெற்றதாகும். அத்தோடு தாத்தா இராசாளியார் அவர்கட்கும் மருத்துவ அனுபவம் உண்டு. அவரே பலருக்கு சிகிச்சையளித்தும் உள்ளார்.

தமிழ்த்தொண்டு ஒன்றா இரண்டா! இன்று தமிழ் விளம்பரப் பொருளாக, வியாபாரப் பொருளாக உள்ளது. தாத்தா காலத்தில் தமிழ்ப் புலவர்கள் பட்ட துன்பத்திற்கு அளவே இல்லை. ஓலைச்சுவடிகளை ஒருங்கு சேர்த்தார். பல புலவர்களிடம் தந்தும் அதனை அச்சிட உதவியும் அளித்திட்டார். உ.வே.சா. போன்றவர்கட்கு உற்ற துணையாக இருந்தார். அவரது இல்லத்தில் புலவர் பெருமக்களுக்கு அடைக்கலம் தந்து ஆதரித்து வந்துள்ளார். மதுரை 4ஆம் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச் சங்கம் தோன்ற அச்சாணியாய், ஆணிவேராய் இருந்துள்ளார். ஒல்காப் புகழ் தொல்காப்பியருக்கு ஊட்டியில் சிலை நிலை நிறுவி நூல் நிலையத்திற்கு பத்தாயிரம் வழங்கி (இன்றைய மதிப்பு 60 லட்சம்) பரிமளித்தார். அவரது பொன்னார் திருவடி வணங்கி மருத்துவப் பணியினைத் தொடர்கின்றேன்.



# எங்கள் தாத்தாவின் இலட்சிய வரலாறு

**சிவ முத்துக்குமரசுவாமி அவர்கள் ராசாளியார் அவர்களின் மகள்வழி பெயரன்**

*(மாவட்ட வேலைவாய்ப்புத்துறை அலுவலர் சென்னை)*

இவ்வுகில் கோடானுகோடி மக்கள் கோடானுகோடி இன்பதுன்பங்களையும் ஏற்ற இறக்கங்களையும், கவலை குழப்பங்களையும் அனுபவித்து வாழ்ந்தாலும் அவர்களிடையே சிலரேனும் நமக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் சான்றோர்களாக விளங்குவதால்தான் இவ்வுலகமும் உயிர்களும் நீடித்து நிலவுகின்றன என்பது ஆன்றோர் கூற்று. இவ்வாறே எத்தனையோ தடைகள், இடையூறுகள் அழிபாடுகளுக்கு இடையிலும் தமிழுலகம் இற்றைய வாழ்வு நீடித்து விளங்குவதற்குக் காரணம், இதனைக் கை கொடுத்து தாங்கி, முன்னாளில் நடத்திவந்த தமிழ்ச் சான்றோர்களே ஆவர் என்பது வரலாறு கூறும் உண்மை.

இந்தச் சான்றோர் வரிசையைச் சேர்ந்தவர் எங்களின் அன்புத் தாத்தா அரித்துவாரமங்கலம் கோபாலசாமி இரகுநாத இராசாளியார் அவர்கள். இராசாளியார் மிகச்சிறந்த கல்வியாளர், தமிழ், ஆங்கிலம், வடமொழி முதலிய மொழிகளில் புலமை மிக்கவர். செல்வச் சிறப்பினர். நல்லவற்றுக்கு உதவும் வள்ளல். பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகையாளர் கடந்த 60 ஆண்டுகட்கு முன்பு தமிழகத்தில் சான்றோர்க்குச் சான்றோராகவும், புரவலராகவும் விளங்கிய பெருமகனார். தமிழுக்கும் தமிழுலகிற்கும் என்றும் மறக்கவியலாது. இக்கட்டுரை அந்நினைவாகவே எழுதப் பெறுகின்றது.

அரித்துவாரமங்கலம், தஞ்சை மாவட்டத்தில் பாபநாசம் வட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர், அவ்வூரில் 1870-இல் தோன்றியவர் கோபாலசாமி இரகுநாத

# தாய்வழித் தாத்தாவின் தமிழ்த் தொண்டு!

டாக்டர் **V. வரதராஜன் (V.V.R.)**

என்னுடைய ஆரம்பக்கல்வி தொடங்கப்பட்டது அரித்துவாரமங்கலமே. தாத்தாவின் கல்லறையைச் சுற்றி பூந்தோட்டம் அமைந்திருக்கும். ''சமாதி பாட்டி'' என்று நாங்கள் அழைப்பது பெரிய தாயகத்தம்மையார் அவர்கள் தாத்தாவின் இல்லத்தரசி ஆவார்கள்! இளமைக் கால நினைவுகள் என்றென்றும் நெஞ்சகத்தில் நீங்காத இடம் பெற்றவை!

இன்று நான் மருத்துவத் துறையில் பணியாற்றி வருகிறேன். மருத்துவத்துறை எங்களுக்கு மரபு வழித் துறையாகும். தாத்தா இராசாளியார் அவர்கள் அரித்துவார மங்கலத்தில் ''ஔஷதசாலை'' என்ற மருத்துவ மனையைத் தோற்றுவித்தார். ஏறத்தாழ 50க்கு மேற்பட்ட கிராமவாசிகளுக்கு அதுவே மருத்துவமனையாகும். மருத்துவம் செய்து மகத்துவம் பெற்றதாகும். அத்தோடு தாத்தா இராசாளியார் அவர்கட்கும் மருத்துவ அனுபவம் உண்டு. அவரே பலருக்கு சிகிச்சையளித்தும் உள்ளார்.

தமிழ்த்தொண்டு ஒன்றா இரண்டா! இன்று தமிழ் விளம்பரப் பொருளாக, வியாபாரப் பொருளாக உள்ளது. தாத்தா காலத்தில் தமிழ்ப் புலவர்கள் பட்ட துன்பத்திற்கு அளவே இல்லை. ஓலைச்சுவடிகளை ஒருங்கு சேர்த்தார். பல புலவர்களிடம் தந்தும் அதனை அச்சிட உதவியும் அளித்திட்டார். உ.வே.சா. போன்றவர்கட்கு உற்ற துணையாக இருந்தார். அவரது இல்லத்தில் புலவர் பெருமக்களுக்கு அடைக்கலம் தந்து ஆதரித்து வந்துள்ளார். மதுரை 4ஆம் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச் சங்கம் தோன்ற அச்சாணியாய், ஆணிவேராய் இருந்துள்ளார். ஒல்காப் புகழ் தொல்காப்பியருக்கு ஊட்டியில் சிலை நிலை நிறுவி நூல் நிலையத்திற்கு பத்தாயிரம் வழங்கி (இன்றைய மதிப்பு 60 லட்சம்) பரிசளித்தார். அவரது பொன்னார் திருவடி வணங்கி மருத்துவப் பணியினைத் தொடர்கின்றேன்.



# எங்கள் தாத்தாவின் இலட்சிய வரலாறு

**சிவ முத்துக்குமரசுவாமி அவர்கள் ராசாளியார் அவர்களின் மகள்வழி பெயரன்**

*(மாவட்ட வேலைவாய்ப்புத்துறை அலுவலர் சென்னை)*

இவ்வுகில் கோடானுகோடி மக்கள் கோடானுகோடி இன்பதுன்பங்களையும் ஏற்ற இறக்கங்களையும், கவலை குழப்பங்களையும் அனுபவித்து வாழ்ந்தாலும் அவர்களிடையே சிலரேனும் நமக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் சான்றோர்களாக விளங்குவதால்தான் இவ்வுலகமும் உயிர்களும் நீடித்து நிலவுகின்றன என்பது ஆன்றோர் கூற்று. இவ்வாறே எத்தனையோ தடைகள், இடையூறுகள் அழிபாடுகளுக்கு இடையிலும் தமிழுலகம் இற்றைய வாழ்வு நீடித்து விளங்குவதற்குக் காரணம், இதனைக் கை கொடுத்து தாங்கி, முன்னுளில் நடத்திவந்த தமிழ்ச் சான்றோர்களே ஆவர் என்பது வரலாறு கூறும் உண்மை.

இந்தச் சான்றோர் வரிசையைச் சேர்ந்தவர் எங்களின் அன்புத் தாத்தா அரித்துவாரமங்கலம் கோபாலசாமி இரகுநாத இராசாளியார் அவர்கள். இராசாளியார் மிகச்சிறந்த கல்வியாளர், தமிழ், ஆங்கிலம், வடமொழி முதலிய மொழிகளில் புலமை மிக்கவர். செல்வச் சிறப்பினர். நல்லவற்றுக்கு உதவும் வள்ளல். பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகையாளர் கடந்த 60 ஆண்டுகட்கு முன்பு தமிழகத்தில் சான்றோர்க்குச் சான்றோராகவும், புரவலராகவும் விளங்கிய பெருமகனுர். தமிழுக்கும் தமிழுலகிற்கும் என்றும் மறக்கவியலாது. இக்கட்டுரை அந்நினைவாகவே எழுதப் பெறுகின்றது.

அரித்துவாரமங்கலம், தஞ்சை மாவட்டத்தில் பாபநாசம் வட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர், அவ்வூரில் 1870-இல் தோன்றியவர் கோபாலசாமி இரகுநாத

இராசாளியார். பறவைகளுக்குக் கூற்றுவன் போன்ற பருந்தினப் பறவையினை இராசாளி என்பது தமிழ்வழக்கு. மன்னர்க்கு களத்தில் ஆற்றிய பேராண்மையைப் பாராட்டி முன்னோர் இவர் குடிவழியினர்க்கு ஆண்மைச் சிறப்பால் வழங்கிய விருதுப் பெயர் இராசாளியார் என்பது.

இவர் இளமையில் தஞ்சையில் விளங்கிய எஸ்.பி.ஜி. கல்லூரியில் கல்வி பயின்றார். தந்தையார் உற்ற உடல்நலக் குறைவால் குடும்பப் பொறுப்புக்களை சுமைகளை ஏற்க வேண்டி படிப்பை முற்றவும் முடிக்க மாட்டாமல் இடையிலேயே முறித்துக்கொள்ள நேர்ந்தது. எனினும் தமது சொந்த முயற்சியாலும் அயராதுழைப்பாலும் தமிழ், வடமொழி, ஆங்கிலம், ஆகிய மொழிகளைக் கற்று அவற்றில் தேர்ச்சியும் ஆராய்ச்சியும் பெருகும் அளவிற்குத் தம் புலமையை வளர்த்துக் கொண்டவர். புத்தகங்களை சேகரிப்பதிலும் தமிழ்ச்சித்த மருத்துவத்தைப் போற்றுவதிலும் ஆராய்வதிலும் ஆர்வமிக்கவர். கோபால்சாமி புத்தகசாலை, கோபால்சாமி மருத்துவச்சாலை என கல்விக்கும் மருத்துவத்திற்கும் பொது நிலையங்களும் இவரால் நிறுவப்பட்டன.

வடுவக்குடி வேலு வாண்டையர் என்னும் தம் மாமன் மகள் பெரியநாயகியம்மையைத் திருமணம் புரிந்தார். அவரது ஒரே மகன் ஆராவமுதன், 12 வயதிலேயே காலமானார். அவர்தம் முதல் மகள் ருக்மணியம்மாள். இரண்டாவது மகள் ஆண்டாளம்மாள், தம் தாய் மாமன் சிவசாமி வாண்டையாரை மணந்தார். ஆண்டாளம்மாளுக்கு கோதண்டபாணி, முத்துக் குமாரசாமி, கனகசபாபதி என மூன்று புதல்வரும் குமுதவல்லி, யோகநாயகி என இரு புதல்வியரும் பிறந்தனர். இவர்களுள் இரண்டாவது மகனார் திரு. முத்துக்குமாரசுவாமி (இராசாளியாரின் பெண் வழிப் பேரன்) மூன்று ஆண்மக்களையும் மூன்று பெண் பிள்ளைகளையும் கொண்ட தந்தையராய் இன்று த்மிழக அரசின் வேலைவாய்ப்பு பிரிவில் மாவட்ட வேலைவாய்ப்பு அலுவராய்ப் பணியாற்றி வருகின்றார்.



எங்கள் தாத்தாவின் ஒன்றுவிட்ட சகோதரர் தான், சுதந்திரப்போரில் ஈடுபட்டு சிறை சென்ற தியாகியும், மாவட்டக்கழக தாலுகா கழகங்களின் உறுப்பினராக இருந்தவரும், சிறந்த பக்திமான் ஆனவரும், ஆயிரம் பிறைகண்ட அண்ணலுமான, திரு.ந. வேங்கடாஜல ரகுநாத ராஜாளியார் ஆவார்கள்.

நண்பர்களாலும் சுற்றத்தாலும் 'சின்னராஜா' என்றழைக்கப்படும் என் சின்ன தாத்தா அவர்கள், பொன்னிற மேனியும், வெண்ணிற ஆடையும், பெரிய தாத்தாவின் வாரிசு என்று அழைக்கத்தோன்றும் எண்பதாம் ஆண்டு எய்திய சின்ன தாத்தா அவர்கள் சீரும் சிறப்புடன் வாழ இறைவனை இறைஞ்சுகின்றேன்.

தஞ்சையின் புகழ்பெற்ற மருத்துவ அறுவைச் சிகிச்சை வல்லுநர் திரு.வி.வி.ஆர். அவர்கள் ஆண்டாளம்மாளின் பெண் வயிற்றுப் பேரராவார். வழக்குரைஞர் திரு. கண்ணுசாமி அவர்களும் (சட்ட ஆலோசகர் - பாங்க் ஆப் தஞ்சாவூர்) திரு. இராமானுசம் அவர்களும் (ஆலோசகர் தேசிய நுகர்வோர் கூட்டுறவு நிறுவனம், புது தில்லி) இராசாளியார் மரபினர் என்பது குறிப்பிடத்தக்கது.

இராசாளியார் அவர்கள் தமிழ்ப்புலவோர் கூடிய புலமை அரங்குகளை நடத்துவதிலும், புலவர்கள் ஆதரிப்பதிலும் மிக்க ஆர்வமுடையவர். மதுரையில் 1901 - செப்டம்பர் 14ஆம் நாள் சேதுபதி உயர்நிலப்பள்ளி மண்டபத்தில் சேது சமஸ்தான மன்னர் முன்னிலையில் தொடங்கப் பெற்றது. மதுரைத் தமிழ்ச்சங்கம் சங்கத்தைத் தோற்றுவித்த பாலைவனத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவரோடு உடனிருந்து அச்சங்கத்தைத் தோற்றுவிக்க உதவிய பெரியோர்களுள் இராசாளியார் அவர்களும் ஒருவராவார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் செயற்குழு உறுப்பினராய் திகழ்ந்து சங்கத்தின் வளர்ச்சிக்கென அயராது பாடுபட்டார். மதுரைச் சங்கத்தில் - புலவர் பயிற்சிக் கல்லூரி துவங்கு வதற்கு அச்சாணிபோல் அமைந்து பணியாற்றியவர் இராசாளியார் அவர்களே!

பணத்தினை அள்ளி இறைத்தாலும் போக்குவரத்து வசதி பெருகாத அந்நாளில் உதகமண்டலத்தில் உள்ள குன்னூருக்குச் சென்று அவ்வூரில் தமிழ்ச் சங்கத்தைத் துவக்கி (1911இல்) யது. அவர்கள் தமிழன்மேல் கொண்டிருந்த மாறாத அன்பினையும் வற்றாத பாசத்தினையும் பறைசாற்றும் மற்றுமொரு நிகழ்ச்சியாகும்.

இராசாளியார், திருவரங்கம் வைணவ சபைக்குத் தலைவராக விளங்கியதோடு மட்டுமல்லாது வைணவ சமயாச்சாரியாராகிய மத்துவாச்சாரியின் விசிஷ்டாத்துவை தத்திலும் அன்னி பெஸண்ட் அம்மையாரின் பிரம்மஞான சபையிலும் மிக்க, ஈடுபாடு கொண்டு விளங்கியவர். அக் காலத்தில் இவை தோன்றிப் பெரும் புகழுடன் செயலாற்றி வந்ததை அறிஞர் யாவரும் அறிவார்கள்.

ஒருசமயம் திருவாவடுதுறை ஆதீனத்துச் சன்னி தானம் மறைத் திரு. அம்பலவாண தேசிகர் அவர்க்ள் அரித் துவாரமங்கலத்தில் பட்டினப் பிரவேசம் சென்ற காலை இராசாளியார் தம் புலமை, சமய ஈடுபாடு சமயப்பணிகள் ஆகியவற்றையறிந்து பாராட்டி அன்னாருக்கு மரகத கண்டி வழங்கிச் சிறப்பித்தார்கள். அவரது இல்லத்தில் அவர் அமைந்திருந்த நூலகத்தின் சிறப்பினையுணர்ந்த அடிகளார், அதற்கு சரஸ்வதிமகால் எனத் தம் திருவாக்கால் பெயர்சூட்டி, வாழ்த்தினார்கள். இத்தகைய சிறப்புப்பெற்ற சான்றாண்மை யாளர் இராசாளியார் அவர்கள்.

மேலும் தஞ்சை மாவட்ட ஆட்சியிலும் கோட்ட ஆட்சியிலும் அக்காலத்தில் *(1913)* நிறுவப்பெற்ற குழுக் களில் (Taluk Board. District Board Councils) தொடர்ந்து பல்லாண்டுகள் உறுப்பினராகப் பணிபுரிந்த பெருந்தகை யாளர். கள்ளர் மரபினரை குற்றப்பரம்பரையினராகச் சித்தரித்து ஆங்கிலேயர் ஆட்சியில் ஏற்படுத்திய சி.டி.ஆக்ட் என்னும் குற்றப்பரம்பரைச் சட்டத்தின் இழிநிலையை அரசாங்கத்திற்கு எடுத்துணர்த்தி, அவற்றை நீக்குவதற்குப் பாடுபட்ட வல்லாளர் நம் இராசாளியார்.



குடந்தை வட்டக் குழுக்களிலிருந்து (Taluk Board), (District Board) உறுப்பினராய்த் தெரிந்தெடுக்கப்படும் தேர்தலில் வள்ளல் இராசாளியாரை எதிர்த்து வழக்கறிஞர் போட்டியிட இருவரும் சம வாக்குகளைப் பெற்றுள்ளனர். இத்தருணத்தில் ஒருவர் வட்ட ஆட்சிக் குழு தலைவியராய்ப் பணி புரிந்த திரு. ஆஸ்டின் காஸ்டின் I.C.S., அவர்கள் தமது வாக்கினை இராசாளியார் அவர்களுக்கு நல்கியதும் தேர்தலில் வாகை சூட உதவியதும் அந்நாளில் நிகழ்வுற்ற சுவையான பரபரப்பூட்டும் நிகழ்ச்சியாகும்.

*1911*-இல் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் டில்லியில் முடிசூட்டிக் கொண்டபோது, அவ்விழாவிற்கு இராசாளியார் அவர்கள் தஞ்சை மாவட்டத்தின் தனிப்பிரதிநிதியாக அழைக் கப்பெற்று, அவர்கள் அதிற் சென்று கலந்து கொண்டதோடு அங்கு மன்னர் தம்பதிகளைப் பேட்டிக் கண்ட சிறப்பினை யும் பெற்றுத் திரும்பினார்.

மதுரைத் தமிழ்ச்சங்கம் தோன்றியதன் பின், தஞ்சை யிலும் தமிழ்ச்சங்கம் தோன்றுவதாயிற்று. அவ்வினிய வரலாறும் அறியதக்கது. மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் 9-ஆம் ஆண்டுவிழா தஞ்சையில் கொண்டாடப்பெற்றது. இதனைக் கண்டு களித்த தஞ்சைத் தமிழன்பர்கள், தஞ்சையிலும் இவ்வாறு ஒரு தமிழ்ச்சங்கம் தோற்றுவிக்க வேண்டும் என ஆர்வங்கொண்டு, 'தஞ்சைத் தமிழ்ச்சங்கம்' என்ற பெயரால் ஒரு தமிழ்ச்சங்கம் கண்டனர். அச்சங்கத்தினர் சார்பில் 'தமிழகம்' என்னும் ஓர் ஆராய்ச்சி மலரும் நடத்தப் பெற்றது. எனினும் போற்றுவாரும் புரவலரும் போதாமையால் அச்சங்கம் சிலகாலமிருந்து மறைந்து விட்டது. எனினும் அந்தத் தமிழுணர்வு மறைய வில்லை. இந்நிலையில் தொல் காப்பியத்திற்கு பாயிரவிருத்தி எழுதிய ஆசிரியர் அரசஞ் சண்முகனார் அவர்கள், தம் நூலைப் பதிப்பிக்க ஒருமுறை தஞ்சை வந்தபோது அங்குத் தோன்றிய தமிழ்ச் சங்கம் மறைந்துவிட்டதை அறிந்தனர். அப்புலவர் பெருமானும் அவரது நண்பர்களும் தூண்டியதின் பயனாய், கரந்தையில் மீண்டும் ஒரு புதிய தமிழ்ச்சங்கம் தோற்றுவிக்கப்பட்டது.

வடவாற்றின் கரைமீதுள்ள பஞ்சநதிப் பாவா மடத்தில்தான் இச்சங்கம் தொடங்கப்பெற்றது. அப்போது வங்காளத்தில் இரவீந்திர நாத் தாகூர் 'சாந்தி நிகேதனம்' என்னும் பெயரால் தோற்றுவித்த அந்நிலையத்தின் பெயரினையொட்டி, தமிழுக்கு 'வித்தியா நிகேதனம்' என்ற பெயரால் அச்சங்கத்தை நிறுவினர். இச்சங்கத்தின் தலைவர் அரித்துவார மங்கலம் கோபாலசாமி இரகுநாத இராசாளி யார் அவர்களே. இலக்கணக்கடல் திரு வி. சாமிநாதப் பிள்ளை அதன் செயலாளர்.

ஆசிரியர் அரசஞ் சண்முகனுர், கவியரசு வேங்கடா சலம் பிள்ளை பின்னத்தூர் நாராயண சாமி ஐயர், நீ. கந்தசாமி பிள்ளை, த.வே. இராதா கிருட்டிணப்பிள்ளை முதலியோர் இச்சங்கத்தின் தமிழ்ச் சான்றோர்களாக விளங்கினர். டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் முதலிய பெரும்புலவோர் இச்சங்கத் திற்கு வந்து அவ்வப்போது விரிவுரையாற்றினுர்கள். பாண்டித்துரைத் தேவர் இச்சங்கத்திற்கு ஒரு தோன்றுத் துணையாக விளங்கினுர்.

ஆயினும் சங்கத்தின் தலைவராக விளங்கிய சான் றோர் இரகுநாத இராசாளியாரும் செயலாளர் சாமிநாதப் பிள்ளையும் மிகவும் கடுமையான ஒழுங்கு விதிகளைப் பின்பற்றியதால் இளம்பருவத்தினர் பலர், அதனின்று விலகித் தங்களுக்கென்று வேருெரு சங்கத்தை அமைத்துக் கொண்டனர். இக்குழுவின் தலைவர் திரு.த.வே. இராதாக் கிருட்டினப் பிள்ளை அவர்கள் நிறுவிய சங்கம் தான் இன்றையகரந்தைத் தமிழ்ச் சங்கமாக அன்று உருவெடுத்தது. இச்சங்கம் தோன்றிய பின்னர், 'வித்திய நிகேதனம்' என்ற முன்னைய சங்கம் வீழ்ந்துவிட்டது. இருப்பினும் பெரியார் இரகுநாத இராசாளியார் அவர்கள் சிறிதும் வெறுப்படை யாமல் தமிழின்மீதும் அதன் வளத்திலும் கொண்டதணியாத ஆர்வத்தினுல் இந்தப் புதிய சங்கத்திற்கும் தம்முடைய எல்லா உதவிகளையும் தந்து வரலாயினர். புதிய சங்கத்தின் தலைவ ராகப் பொறுப்பேற்று செயல் புரிந்த தமிழவேள் உமாமகேசு



வரனுருக்கு இராசாளியார் பல்லாற்ருலும் துணையாகவும் நண்பராகவும் தமிழுக்குப் புரவலராகவும் இருந்து விளங் கினார்.

அந்நாளில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தையும் அதனை நிறுவிய வள்ளல் பாண்டித்துரைத் தேவர் அவர்களையும் புலவர் பெருமக்கள் கண்ணென மதித்துப் போற்றிவந்தனர். தேவர் அவர்கள் 1912இல் காலமானுர். நாவலர் பண்டிதர் ந.மு.வே. நாட்டாரய்யா அவர்களும் பிற்றைய நாளில் கவியர சாக விளங்கிய அரங்க வேங்கடாசலம் பிள்ளை அவர்களும் தமிழகத்தின் பல சான்றோர்களும் தேவர் மறைவு குறித்து மதுரையில் 2 நாட்கள் இரங்கல் கூட்டம் நிகழ்த்தினர். அக்கூட்டங்களில் அச்சான்றோர் எழுதிய கையறுநிலைச் செய்யுட்கள் படிக்கப்பெற்றன. அவை பின்னர் ''செந்தமிழ்'' இதழிலும் வெளியாயின. இந்நிகழ்ச்சி யில் இரண்டாம் நாள் கூட்டத்திற்குத் தலைமைதாங்கிச் சிறப்பித்த பெரியார் கோபாலசாமி இரகுநாத இராசாளியார் அவர்களேயாவர்.

தமிழில் புலமையும் வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பாண்டித்தியமும் தமிழ்ச் சித்த மருத்துவத்தில் ஈடுபாடும் இவ்வெல்லாவற்றிலும் இடையருத ஆராய்ச்சி யும் கொண்டு, இவற்றையெல்லாம் தம் ஆர்வமிகுதியால் ஒரு விளையாட்டாகவே தம்மேல் இட்டுக்கொண்டு, அரும்பணி புரிந்தவர் இராசாளியார் அவர்கள்.

1913இல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு ஒரு நூல் நிலையம் திறக்கப்பெற்றது. 'கரந்தைத் தமிழ்ச் சங்கக் கலா நிலையம்' என்பது அதன் பெயர். நூல்நிலையம், நூலகம் முதலிய இக்காலப் பெயர்கள் தோன்ருத காலமது. (இந் நூலகத்திற்கு இராசாளியார் அவர்கள் பெருந்திரளான 'நூல் களை வழங்கினார்கள். அவருக்குப் பிறகு எஞ்சியிருந்த நூல் களை 1940இல் அவரது குடும்பத்தினர் தருமை ஆதீனத்திற்கு வழங்கி விட்டனர்.) இந்நூல் நிலையத்தை திறந்து வைத்துச் சிறப்பித்த பெரியார் நம் இரகுநாத இராசாளியார் என்பதை அறியும்போது நம் உள்ளம் இறும்பூதடைகின்றது. இந்நூல

கம் அப்போது தமிழவேள் உமாமகேசுவரனார் இல்லத்திலேயே அமைக்கப்பெற்றது. ஏனெனில் சங்கத்திற்கு அப்போது கட்டிட வசதிகள் உண்டாகவில்லை.

அன்றைய தமிழ்ச் சான்றோர் எல்லோரும் வள்ளல் இராசாளியார் அவர்களின் நண்பர்களின் நண்பர்களாக விளங்கினார்கள். மதுரையில் நான்காம் சங்கம் நிறுவிய துங்கன் பாலைவனத்தம் பாண்டித்துரைத் தேவர், இலக்கணக்கடல் சாமிநாதப்பிள்ளை, கரந்தை தமிழ்ச்சங்கம் நிறுவிய துங்கன் இராதாகிருட்டிணப்பிள்ளை நாவலர் வேங்கடசாமி நாட்டார், தமிழவேள் உமாமகேசனார் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, வள்ளல் பெத்தாச்சிச் செட்டியார், நீ. கந்தசாமி பிள்ளை அரசஞ் சண்முகனார், பரிதிமாற் கலைஞர் எனப்படும் சூர்ய நாராயண சாஸ்திரி ராகவையங்கார் முதலியோர் இராசாளியார் அவர்களின் தமிழகத்து நண்பர்கள். இதனை எண்ணும்போது தமிழகத்தில் இராசாளியார் அவர்கள் கொண்டிருந்த மாறுத பாசமும், இராசாளியார் பால் தமிழகம் வைத்திருந்த மாபெரும் மதிப்பும் எளிதில் புலனாகும். அன்னூர் 6-04-1920இல் காலமானார்.

இந்நாளில் இராசாளியாரை நினைவுகூர்ந்த கரந்தைப் புலவர் பாவலரேறு பாலசுந்தரனார் தாமியற்றிய கரந்தைக் கோவையில் வள்ளல் இராசாளியாரைக் குறித்துச் சிறப்பித்து குறிப்புகளும் இங்குக் காணத்தக்கது.

'பிராவுறு மாமலர் போற்றிசெய்
　　பைந்தமிழ் பண்புறுசீர்
கோபாலசாமி இரகுநாத
　　இராசாளியார் வளர்க்க
விராவிறுமுத் தமிழ்மேவுங்
　　கரந்தையை வேண்டவர்போல்
ஓரோவழி யன்றியெப் போதும்
　　வுனையை ஒளிப்பதென்னே.



# வாழ்ந்திடுவோம்! வணக்கம் செய்வோம்!

**க. மீனாட்சிசுந்தரம்**, எம்.எல்.சி.,
(பொதுச் செயலாளர் - ஆசிரியர் மன்றம்)

தமிழ்மீது தணியாத காதல் கொண்டே
　　தளராமல் எந்நாளும் உழைத்த சன்றேர்!
அமிழ்தான சொல்விருந்து படைத்த வள்ளல்
　　அவர்வாழ்க்கை யாவர்க்கும் எடுத்துக் காட்டு!
கமழ்மலராய்க் கரந்தைத்தமிழ்ச் சங்கம் கண்டார்!
　　காப்பியரின் சிலைகுன்னூர் தனியே வைத்தார்!
அமிழ்தத்தமிழ் மதுரைநகர் சங்கத் திற்கே
　　ஆற்றல்சால் தலைவரெனத் திகழ்ந்தார், வாழ்ந்தார்!

மன்னர்ஐந் தாம்ஜார்ஜால் போற்றப் பட்ட
　　மாமேதை! புறநானூ றுய்வாழ் கின்றூர்!
அன்னைமொழி இலக்கணநூல் வீரசோ ழியமாய்
　　அவரென்றும் வாழ்கின்றூர் தமிழ்நெஞ் சத்தில்!
தன்னல்தமிழ்ப் பெரும்புலவர் மருத்துவத் துறையின்
　　கல்வெட்டாய் அமைந்திட்டார்! அன்னூர் தொண்டால்,
இன்னல்பல விலகிற்று நம்மோர்க் கெல்லாம்!
　　இரவிஅவர்! அவர்புகழைப் பாடி நிற்போம்!

இராஜாவெனத் திகழ்ந்தவிவர் எதிர்த்த தாலே
　　இவண்குற்றப் பரம்பரைசட் டம்போ யிற்று!
''இராஜாளி யார்'' என்றூல் கோபால சாமி
　　ரகுநாதர் ஒருவரையே குறிக்கும் அந்நாள்
''இராஜாளி யார்''என்றூல் இந்நாள் சின்ன
　　ராஜா வை யும் குறிக்கும் வண்ணம் நாட்டில்
இராஜாளி யார்மரபிற் கிசைசேர்த் திட்ட
　　இருவரையும் வாழ்ந்திடுவோம்; வணக்கம் செய்வோம்!

## "இருபெருஞ் செல்வத் தொருபெரும் வள்ளல்"

நாகை புலவர் C.S. **முத்துசாமி ஐயர்**

பொன்பூத்த பூமகளும் புகழ்பூத்த பாமகளும்
பொருந்த வாழ்வோன்
தென்பூத்த மணிமார்பிற் சீர்பூத்த நாரணார்
திருத்தாட் கன்பன்
இன்பூத்த மொழியாள னியல்பூத்த பாவாணர்க்
கெந்த நாளு
மின்பூத்த முகிலெனவே மிகப்பூத்த கரதலத்தான்
மேன்மை யாளன்
நிலவளமு நீர்வளமு நெல்வளமும் பலவளமும்
நிறைந்து சான்ற
தலவளமும் படைத்தொழில்சேர் அரித்துவார மங்கலத்திற்
றகைமை பூண்ட
குலவளமுங் கலைவளமுங் கொடைவளமும் நடைவளமுங்
குலவி வாழு
நலவளஞ்சேர் கோபாலசாமிரகு நாதனெனு
நரேந்த்ரன் மாதோ
துதியோங்கு வடமதுரை வாசுதேவற் கந்நாளிற்
றுகளி லாத
மதியோங்கு மதியோங்க கோபால சாமியுதித் தாற்போல
வாசு தேவப்
பதியோங்கு சுதனாக விந்நாளி லுதித்தனனிப்
பாரு ளோர்க்கு
நிதியோங்கு கோபாலசாமிரகு நாதனெனு
நிருப ரேறே



## வான் பிறந்த கொடைக்காரத்தான்! வாசுதேவ மைந்தன்!

நாகைத் தமிழ்ச்சங்க வரவேற்பில் (17.02.12) பாடியது.
புலவர் C.S. **முத்துசாமி ஐயர்**

நிலத்தழைக்கும் நிதிதழைக்கும் நெடியகடற் பூதலத்து
நேர்மை யான
குலந்தழைக்குங் குணந்தழைக்குங் குணமிகுந்த
கொடைதழைக்குங் கோதி லாத
நலந்தழைக்கும் நயந்தழைக்கும் நளினமுக நகைதழைக்கும்
நாவ லோரைக்
கலந்தழைக்கும் கோபால ஸாமியுனைக் கனிந்தழைத்தேன்
களித்து வாழ!

விஞ்சுபுகழ் மலையாளம் பியன்மைசூர் கொச்சிநகர்
வேந்தர் சூழத்
தஞ்சைநகர் ராஜாளி தனதெனப் புகழ்படைத்த
தகைமை யாளி
பஞ்சவர்க்கு முடிபுனைந்த வசுதேவப் புண்ணியன்கோ
பால ஸாமி
அஞ்சான ஜார்ஜரச ரணிமகுடக் காட்சிகண்ட
தழகி தாமே

தஞ்சமென வருவோரைத் தாங்குசடை யன்மரபோர்
தரக்கொண் டந்நாள்
அஞ்சவித்த வசிட்டமுனி யணிமகுடம் ரகுநாதற்
கணிந்திட் டானால்
மஞ்சுநிகர் கொடைத்தடக்கைக் கோபால ஸாமிரகு
நாத வள்ளல்
செஞ்சொன்மிகு ஜார்ஜரசர் மணிமகடக் காட்சிதனைச்
சிறப்பித் தானே

கார்பிடித்த காராளர் கைப்பிடித்த செல்வமெனக்
கவின்பெற் றோங்கும்
ஏர்பிடித்த பாக்கியமே இறைபிடித்த செங்கோலுக்
கேற்ற மென்பார்
தார்பிடித்த தடம்புயத்தான் கோபால ஸாமிகற்ப
தருவை யொப்பான்
பேர்பிடித்த ஜார்ஜரசர் பெருமையுட னிவர்பெருமை
பேசலா மே

நாச்செய்த பாக்கியமோ கைசெய்த பாக்கியமோ
நாகை சேரப்
பூச்செய்த புண்ணியமோ புலஞ்செய்த கண்ணியமோ
புலவர் பாடும்
பாச்செய்த பதிவியலோ கோபால ஸாமியென்னப்
பகரும் பண்பாம்
பேச்செய்த வுடல்புளகம் பிறக்குமெனிற் பெரும்புகழைப்
பேச லாமோ

மடைவாயிற் பெருக்கெடுத்து வழிந்தோடும் மதுப்பருகி
மதர்த்து வாவிப்
புடைவாளை கிடந்துகளும் அரித்துவார மங்கலநற்
புரியின் மேவி
அடைவார்க்கோ ராதாரவா யருநிதிய மள்ளியளித்
தன்பு செய்யுந்
தொல்லைவாய்ந்த பொற்புயத்தான் கோபால ஸாமிதுரை
சுகுண வாழி

திருமாலுக் கன்புசெய்யென் றுரைத்தமொழி சிரந்தாங்கித்
தேடிச் சென்று
பெருமாளைப் பெருமாட்டி யுடனிந்த்ரப் பிரத்தமதிற்
பேட்டி கண்டு



பெருமாளைத் தெரிசித்தாய் கோபால ஸாமிதமிழ்
பெருகுஞ் செஞ்செற்
றருமாலை பூமாலை தடம்புயத்திற் கொண்டூழி
தழைத்து வாழி!

உதகமா மண்டலம்போ யுயல்லாலிக் கவர்னரைநீ
யுறவு கொண்டே
இதமுறவே திரும்பிடுங்கா லெழில் ராஜப் பிரதிநிதி
யேற்றிக் கொள்வார்
பதம்பெறுஞ்சக் கரவர்த்தி தரிசனபாக் கியங்கிடைக்கும்
பண்பா யென்று
சதம் பெறநா னெழுதியதைச் சரதமாச் செய்தவவருள்
தழைத்து வாழி

சக்கரவர்த்தி ஜார்ஜரசர் நாமத்தால் மாளிகையைச்
சமைக்கு முன்னே
சக்கரவர்த்தி ஜார்ஜரசர் தரிசனமுந் தண்ணளியுந்
சார்ந்தா யன்றோ
திக்கெட்டும் புகழ்நிறையுங் கோபால் சாமியெனுஞ்
செழுமை வேந்தே
பக்குவஞ்சேர் விதைவிதைத்த வஞ்ஞான்றே
பலன் கொண்ட

வாயாரப் பெரும்புலவர் வாழ்த்துகின்ற புண்ணியமே
வழங்கும் வள்ளல்
ஓயாத பெருங்கீர்த்தி கோபால சாமியெனு
முயர் கோமானே
காயாவை நிகர்மேனி கோபாலசாமியருள்
கவினப் பெற்று
வேயாந் தோண்மனைவி மக்களுடன் மிகுசெல்வம்
விளங்க வாழி!

# தண்டமிழ்க் காவலர்

**ச. சுவாமிநாதன்**
தலைமை நிருபர், சட்டமன்ற மேலவைத் துறை.

'தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா' என்றார் பாரதி. தாயைப் போலப் பிள்ளை, நூலைப் போல சேலை என்பது முதுமொழி. தாய்க்கான இயல்பு பிள்ளைக்கு வரும். பெற்ற, தாயும் பிறந்த மண்ணும் ஒன்றுதானே! தாயின் குணத்தைப் பிள்ளை பெறுவதைப் போல பிறந்த மண்ணின் இயல்பையும் மைந்தர் பெறுவது இயற்கை. நான் பிறந்த மண், அந்த வணக்கத்திற்குரிய தண்டமிழ்ச் சங்கம், தன்மைப் புரவலர், அறத்தைப் பெரும் பாழி என்று நால்வரால் பாடப்பெற்ற அரித்துவார மங்கலம் என்ற சிற்றூர் பெற்ற ராஜாளியார் அவர்கள் பிறந்து வாழ்ந்த மண். அவர் ஆற்றிய தமிழ்த்தொண்டை நுகர்ந்த மண். அவர் அழைத்துப் பாராட்டிய புலவர் ஏறுகளின் திருவடி சார்ந்து புளகாங்கிதம் அடைந்த மண், இரவலரும் புரவலரும் குழுமி தமிழாய்ந்த மண், தமிழுக்குச் சங்கம் எழுப்பும் என்று அவரைத் தட்டி விட்டு அவர் கண்ட கரந்தைத் தமிழ்ச்சங்கத்துப் பெருமையைக் கேட்டுப் பூரித்து மகிழ்ந்த மண் நாடாண்ட மன்னரையும் தமிழாண்ட புரவலர் கண்டார், உரையாடினார். உடனிருந்து உணவருந்தினார் என்று உலகம் வியந்து பாராட்டியதைக் கேட்டு ஈன்ற பொழுதிற் பெரிதுவந்த மண். சிங்கநோக்கும் சீரிளமைத் திறனும் குற்றாத தமிழ் உணர்வும் இன எழுச்சியும் இனிமைப் பண்பும் புரவலத் தன்மையும் ஒருங்கே ஒருருவாகத் திகழ்ந்த பெருந்தகை ராஜாளியார் அவர்கள் அரித்துவாரமங்கலத்தை உலகத்திற்கு தெரியச் செய்தார்.

சங்ககாலத் தமிழ் இலக்கியத்தை இன்றைய உலகிற்கு தெரியச் செய்த பெருமை தமிழ்த்தாத்தா என்று செல்லமாக அழைத்துப் பாராட்டப்பெறும் டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர் அவர்களைச் சாரும். அய்யர் அவர்கள் மிகுந்த சிரமத்தை மேற்கொண்டு நாடெல்லாம் அலைந்து திரட்டிய புறநானூற்று சுவடிகளை அச்சாக்கியபோது, அவர் உள்ளம் நம் அரித்துவாரமங்கலம் ராஜாளியாரை நன்றியுணர்வோடு நினைந்து மனம் கசிந்து உருகியதை அவர் பதிப்பித்த புறநானூறு முதல் பதிப்பின் முன்னுரையில் காணமுடிகிறது. அதிலே, பழந்தமிழ் நூல்களின் அருமை தெரியாமல் நம் மக்கள் பழைய ஓலைச் சுவடிகளை எப்படியெல்லாம் பாழாக்கி விட்டார்கள். விணாக்கிவிட்டார்கள் என்று எண்ணி மனம் வெதும்பி இந்த முயற்சியில் தளர்ச்சியடைந்தபோது அரித்துவாரமங்கலம் ராஜாளியார் அவர்கள்தான் எனக்கு புத்துயிர் அளித்தார் என்று குறிப்பிட்டு அவர் தன்னிடம் இருந்த புறநானூற்று ஓலைச் சுவடிகளைத் தம்மிடம் தந்து உதவியதாகவும் அதை பதிப்பிக்க உறுதுணை புரிந்தார் என்றும் அதனால்தான் தன் முயற்சி துவளாமல் மேற்சென்று அந்த இலக்கியம் தமிழகத்திற்குக் கிடைத்தது என்றும் கூறியிருப்பதில் இருந்து நமது ராஜாளியார் எந்த அளவுக்கு வெளியே தெரியாமல் ஒரு பெரிய சாதனையை தமிழகத்திற்குச் செய்திருக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது. ஆனால் அப்படிப்பட்ட பெரியவரின் பெயர் அடுத்த தலைமுறையிலே மறைக்கப்பட்டிருப்பதுதான் நமக்கெல்லாம் வேதனையைத் தருகிறது. அதன்பின்னே வெளியான டாக்டர் உ.வே. சா. அவர்களின் வாழ்க்கை சரிதத்தில் நமது ராஜாளியார் பெயர் எந்த இடத்திலும் குறிப்பிடபடவில்லை. அது தான் இந்த தமிழ்ச்சமுதாயத்தின் மேல் ஏறியிருக்கும் நன்றி கொண்ட தன்மை, இனி மேலாவது தமிழ் அறிஞர்கள் தமிழுக்கு புத்துயிர் தருவதில் குறையாத பணி செய்த ராஜாளியார் போன்ற பழந்தமிழ் காவலர்களின் பெயரை வளரும் தலைமுறைக்கு அறிவித்து அவர்களையும் ஊக்கு விக்க முன் வரவேண்டும்.

அவர் பிறந்த மண் இன்று மணக்கிறது. அந்த மணம் தமிழகம் முழுவதும் பாவப் போகிறது என்ற நினைவு மலரும்போது எங்களைப் போன்ற இளைஞர்கள் உள்ளமெல்லாம் வானிலே பறந்து உலவுவதைப் போன்ற உணர்வு பெறுகின்றது. அவரால் புகழ்பெற்ற இந்த மண் அவர் வழித்தோன்றல்களால் மேலும் புகழ் எய்துவதாக.

*நாடாகொன்றோ காடா கொன்றோ*
*அவலாகொன்றோ மிசையா கொன்றோ*
*எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே*

-ஔவையார்.

'நிலமே, நின்பால் எவ்வழி நற்புண்பும் நற்செயலும் உடையராய் விளங்குகின்றனரோ, அவ்வழி நின்னை நன்னாடெனச் சான்றோர் பாராட்டுகின்றனர்.'



# "கன்னல் சூழும் அரித்துவாரமங்கலக் கர்ணனாம் ரகுநாதன்"

**[illegible], பொ. முத்தையா பிள்ளை அவர்கள்**
*(சைவ சித்தாந்த சபைத் தலைவர்)*

ஒருகுடைக்கீ ழுலகமெலாம் புரக்கும் வேந்தன்
உயிர்களிடத் தருணிறைந்த கருணை வாரி
திருநெடுமா லம்சமெனச் செப்புஞ் சீலன்
செங்கோன்மை வழாதுபுரி சீர்த்தி மக்கோன்
திருவளரும் ஜார்ஜ்சக்ர வர்த்தி யெங்கோன்
திருவெனும்வர்த் தினிமேரி சகிதமாகத்
தருமரா சாட்சிபுரி டில்லி யென்னுந்
தலைநகரிற் றருமரெனு முரிமை தன்னால்.

வந்துநமை முறைமையா லாள்வே மென்று
மகிழ்ச்சிமிக மருடாபி கங் கொண்டான்
அந்தமில்சீர் விழாவதனை யமர்ந்து காண
அரிபக்த சிரோமணிந லன்பின் மிக்கான்
இந்தவுல கிற்கீர்த்தி செல்வ மீகை
யாவையினு மேலானெம் முயிர்க்கு நேயன்
செந்தமிழும் வடசொல்லும் பயின்று மேலாந்
தேசபா ஷையுந் தெரிந்த திறமை யுள்ளான்.

கோபால சாமிரகு நாத னென்னுங்
குணக்குன்றா னிறைவனரு ளுரிமை நோக்கி
மாபாக்கி யந்நிறையத் தலத்திற் சென்று
வைபவங்கண் டானந்தம் நிரம்பப் பெற்றுப்
பூபால னெனவுவந்து பெற்ற வின்ப
பூரணத்தை நமக்குரைத்த புனதி னென்றும்
பூபாலித் தருள்பெருகி வாழ முன்னோன்
புகாமலர்ச்சே வடிகளையாம் போற்று வோமே.

# “தேர்தல் ஸ்டண்ட்டில் ராஜாளியார்”

“தியாகச் செம்மல்” - செம்மங்குடி
**G. சாமி ஐயா கூருயார்**, Ex. M.L.A.,

தன்னல் சூழ் அரித்துவார மங்கலத்தின் கர்ணனாம் ராஜாளியார் அவர்கள் அனைத்துத் துறையிலும் வல்லவ ராகவும், நல்லவராகவும் திகழ்ந்தார்.

அரசியலிலும், பொதுத்தொண்டிலும் ஈடு இணை யற்றவர். ஐந்தாம் ஜார்ஜ் மன்னரும், கவர்னர் லாலி துரையும், கலெக்டர் ஆஸ்டின் துரையும், இவரது வேண்டுகோளை ஏற்றுச் சிறப்பித்தது குறிப்பிடத்தகுந்தது!

அக்காலத்தில் தேர்தல் களத்தில் பலமுறை குதித்து வாகை சூடி உள்ளார். மாவட்டக் கழக உறுப்பினராகவும், தாலுகா போர்டு தலைவராகவும் பணியாற்றி உள்ளார்.

தாலுகா போர்டு தலைவராக, தேர்தலுக்கு நின்ற போது நிகழ்ந்த சுவையான தகவலை ஈண்டு காண்போம்.

தாலுகா போர்டு தலைவர் பதவிக்கு ராஜாளியார் போட்டி இட்டபோது அவரை எதிர்த்து குடந்தையில் பெரும் வாக்கறிஞர் ஒருவர் போட்டியிட்டார்.

தாலுகா போர்டு உறுப்பினராக் காலஞ்சென்ற திரு. சிங்காரவேலு உடையார் அவர்கள் இருந்தார். உடையார் ராஜாளியார் தேர்தலில் வெற்றி அடைய வாக்களிக்கவும் விரும்பினார்!

அப்போது உடையார் அவர்கள் 'புற்று நோயால்' உயிருடன் போராக்கொண்டு இருந்தார். அவரால் வாக்களிக்க வரும் நிலையில் உள்ளம் இருந்தாலும், உடல் நிலை இல்லை.



இந்தச் சூழ்நிலையில் ராஜாளியார் வெற்றி கேள்விக் குறி ஆகிவிட்டது.

உடையார் அவர்கள் தன்னை எப்படியேனும் வாக்குச் சாவடிக்கு அழைத்துச் செல்லவேண்டும் என்று பிடிவாதமாக இருந்தார்.

இதிலும் ஓர் சிக்கல் தோன்றியது.

வாக்குச்சாவடி குடந்தை டிப்டி கலெக்டர் அலுவலகத்தில் அமைக்கப்பட்டு இருந்தது. மாடியில் தேர்தல் நடைபெற இருந்தது. உடையார் அவர்களைக் கலெக்டர் அலுவலக மாடிக்கு அழைத்துச் செல்வது பெரும் பிரச்சினை ஆகிவிட்டது.

இதனை அறிந்த ஆதினகர்த்தர் ஒருவர் தாம் செல்லும் பல்லக்கினைக் கொடுத்து உதவ முன்வந்தார்.

வாக்களிக்க வந்த உடையார் அவர்களை ஆதீனத்தின் பல்லக்கில் அமர்த்திக் குடந்தை சப் கலெக்டர் மாடிக்கு அழைத்துச் சென்றது அனைவர்க்கும் வியப்பினைத் தந்தது!

உடையார் வாக்களித்தார். வாக்குகள் உடன் எண்ணப் பட்டன. ராஜாளியாரும் - எதிர்த்துப் போட்டியிட்ட வக்கிலும் சமமான வாக்குகளைப் பெற்றனர்.

மீண்டும் சிக்கல் உருவானது. கலெக்டர் ஆஸ்டின் துரைக்கும் (Special) ஓட்டு உண்டு. அவர் தனது ஓட்டினை ராஜாளியாருக்குச் செலத்தி ராஜாளியார் அவர்களை வெற்றி அடையச் செய்தார்! ஆஸ்டின் துரை ராஜாளியார் இடத்தில் வைத்திருந்த அன்பிற்கு இந் நிகழ்ச்சி எடுத்துக் காட்டாகும்.

தேர்தல் 'ஸ்டண்ட்டில்' ராஜாளியாரை வெல்வதற்கு யாரும் இல்லை என்றே கூறலாம்.

# சீர்மையைச் செயலில் காண்போம்!

க. இராமையன், M.A.
(தமிழ்த்துறை)
அ.வீ.வா.நி.திரு. புட்பங் கல்லூரி, பூண்டி.

1. வண்டமிழ் மூவர் தம்மன்
வன்படை தலைமை யேற்றத்
தண்டமிழ் முக்கு லத்தோர்
தம்முளே கள்ளர் என்பார்
மண்டமர் சோழர்க் காக
மாண்படை தலைமை கொண்டார்
பண்டவர் இனத்தைச் சார்ந்தார்
பல்புகழ் இராசா ளியய்யார்.

2. அப்புகழ் மரபில் வந்தார்
அரதைப்பெரும் பாழி யென்றே
அப்பர்சார் சைவர் சாற்றும்
அரித்துவார மங்க லத்தே
ஒப்பருந் தொண்டென் நாளும்
ஒண்டமிழ்க் காற்றும் மேலோன்
செப்புகோ பால சாமி
சீரினை ஈண்டு காண்போம்.

3. பன்னரும் தமிழ்சால் சங்கம்
பல்புகழ் மதுரை தன்னில்
உன்னரும் புகழி னோடு
உருப்பெறப் பாண்டித் தேவர்
தன்னொடு உழைத்த செம்மல்
தமிழ்தனித் தத்துப் பிள்ளை
அன்னவர் கரந்தைச் சங்கம்
ஆக்கிய பான்மை காண்போம்.



4. மாண்தமிழ்ச் சங்கம் தன்னை
மதுரையில் கண்ட தேவர்
வான்தொடு சோழன் கோயில்
வயங்குசீர் தஞ்சை வந்து
தான்புகழ் இராசா ளிய்யார்
தலைமையில் மதுரைச் சங்கம்
தோற்றுசிர் விழாக்கொண் டாடி
தோமறு தமிழ்த்தேன் ஈந்தார்.

5. அத்திரு விழாவில் தேவர்
அருந்தமிழ் மொழிக்கோர் சங்கம்
வித்தகர் பலரைக் கொண்ட
விளைபுகழ் சோழ நாட்டில்
மெத்தவே தோற்று வித்கும்
மேன்மையாம் வழியைச் சொன்னார்
ஒத்திடு கருத்தைக் கொண்ட
ஒண்தமிழ் இராசா ளியய்யார்.

6. தஞ்சையில் தமிழ்க்கோர் சங்கம்
தகவொட தோன்றச் செய்தார்
விஞ்சுசீர் உமாம கேசன்
விள்ளலில் விருப்பத் தோடு
எஞ்சலில் புகழ்சால் சங்க
ஏற்றத்திற் கேது செய்தார்,
மஞ்சினை விஞ்சும் வண்மை
மாண்புகோ பால சாமி.

7. பெருந்தமிழ் நூல கத்தைப்
பேணினார் தமது வீட்டில்
அருந்தமிழ்ப் புலவர் ஏறு
அரசஞ்சண் முகனார் தோழர்,
இருந்தமிழ் நாட்டில் மன்னர்
எழிற்றமிழ் காத்த தேபோல்
திருத்தமிழ் புரந்த வள்ளல்
சீர்மையைச் செயலில் காண்போம்.

# பண்டாரத்தார் பாராட்டிய சிங்கம்

V. ராமானுசம், B.Com., H.R.D.C., நியூ டெல்லி

டெல்லிப்பட்டணத்தின் மண்ணில் கால் வைத்த வுடன், நினைவு அலைகள் நெஞ்சில் மோதுகின்றன. எந்த டெல்லியில் என் அன்புப் பெரிய தந்தை கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் அவர்கள் குடும்ப சகிதமாய்ச் சென்று, செங்கோட்டையில் வீரபவனி வந்து, ஐந்தாம் ஜார்ஜ் மாமன்னருடன் அளவளாவி மகிழ்ந்து, கார்னேஷன் விழா வினைக் கண்டுகளித்து, குற்றப் பரம்பரைச் சட்டத்தை நீக்க வாதாடி வென்று வந்தாரோ, அதே டில்லியில் கூட்டுறவுத் துறையில் பணியாற்றும் வாய்ப்புக்கிட்டியதை எண்ணி எண்ணிப் பூரிப்படைகின்றேன்.

பெரும்புலவனாய், புரவலனாய், பேராசிரியருமாய்த் திகழ்ந்த பெரியதந்தை அவர்கள் 50 வயதுக்குள்ளே ஆற்றிய பணிகள்! குவித்திட்ட வெற்றிகள் கொஞ்சம் அல்ல! நெஞ்சார நினைத்து அவரது திருவடிக்குத் தலைசாய்த்து வணக்கஞ் சொல்லிக் கட்டுரைதனைக் காணிக்கையாக்குகின்றேன்!

குடந்தை பாணாதுரை உயர்நிலைப் பள்ளியில் பெரும்புலவர் சதாசிவ பண்டாரத்தார் பணியாற்றிய காலம்! அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் முன்பு பண்டாரத்தார் குடந்தையில் பணியாற்றி வந்தார்கள்.

பத்தாம் வகுப்பில் பண்டாரத்தார் தமிழ்ப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். வகுப்பில் ஒரு மாணவன் தினமும் குறும்பு செய்துவந்தான்! ஆசிரியரோடும் துணிந்து பேசுவான்! அன்றைக்கும் வகுப்பில் குறும்பு மாணவன் தன் ங்கை வரிசைதனைக் காட்டினான்!

பண்டாரத்தாருக்குக் கோபம் வந்துவிட்டது. குறும்பு செய்யும் மாணவனை அழைத்து, ''உன் பெயர் என்ன,'' என்று கோபமாகக்கேட்டார். மாணவன் சிரித்துக்கொண்டே ''சிங்கம்'' என்று பதில் கூறினான்.



பண்டாரத்தார் கேட்டார், ''எந்தக் காட்டிலிருந்து இந்த சிங்கம் வந்தது?'' என்று. சிங்கம் பதில் கூறியத ''காட்டில் இருந்து வரவில்லை. அரித்துவாரமங்கலம் வீட்டி லிருந்து வந்தேன்'' என்று.

புலவர் சொன்னார் ''செஞ்சிக்கோட்டையில் பிறந் தவர் எல்லாம் ராஜாதேசிங்காக இருக்கமாட்டார்! அரித் துவாரமங்கலத்தில் பிறந்துவிட்ட தாலே ராஜாளியார் என்ற எண்ணமா?'' என்று கோபமாகக் கேட்டார்!

குறும்புக்காரச் சிங்கம் கூறினான் ''ராஜாளியின் பெயரன்தான் நான் என்று''

பண்டாரத்தார் பதறிப்போனார்! உள்ளம் உருக மாண வனைப் பார்த்தார். குறும்பு செய்த சிறுவன் கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் அவர்களின் அன்பு மகள் ஆண்டாள் அம்மாளின் செல்வன் என்பதை அறிந்தார். மாணவனை அழைத்து வாழ்த்தி, பிறகு இல்லத்திற்கு அழைத்துச்சென்று, அறிவுரை நல்கி அனுப்பிவைத்தார்.

தாத்தாவின் பெயரினை எடு என்று கூறிய பண்டாரத் தார் ''சிங்கத்தோடு தான் மோதியுள்ளேன்'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்! ஆனந்தக்கண்ணீர் மல்கச் சிறுவனை அரவணைத்து வாழ்த்துச் சொன்னார்.

அந்தக் குறும்புக்காரச் சிறுவன் சிங்கம் யார் தெரி யுமா? இன்றைய தினம் சென்னையில் மாவட்ட வேலை வாய்ப்புத் துறை அதிகாரியாகப் பணியாற்றும் திருவாளர் முத்துக்குமாரசுவாமி ஆவார்கள்.

ஸ்ரீ

இருபெருஞ் செல்வத் தொருபெரும் வள்ளலாயுள்ள

# ஹரித்வாரமங்கலம்

# ஸ்ரீமான் : வா. கோபாலசாமி

# ரகுநாத ராஜாளியாரவர்கள்

நடைத்திறனுங் கொடைத்திறனும் பிரசங்கவாற்றலும்,
பிறவுந்தோற்றிய அவ்வக் காலங்கடோறும்,
புலவர் பாடிய சிறப்புக்கவிகள்.

## துதிவெண்பா

**கோபால சாமி ரகுநாதக் கோமான்மேற்**
**பூபாலர் மெச்சும்புலவர்பலர் - சார்பாகச்**
**சொன்னகவி யெல்லாந் தொகுத்தச் சிடத்துணையாந்**
**தன்னிகரி லாத்தலைவன் முன்.**

**வடுவூர், அட்டாவதானம்,**
**ஸ்ரீமத்: அரங்கசாமி ஐயங்கார் அவர்கள் இயற்றியது.**

திருவளர் சகாத்தமொ ராயிரத்தெழுநூறு
சேர்ந்ததொண் ணூற்றிரண்டு
திகழ்கலியி னுலா யிரத்துத்தொ ளாயிரஞ்
செப்புமெழு பத்தொன்றினிற்
றிசைபுகழ் பிரமோதூத வாண்டுவிர்ச் சிகமதியி
னிற்றேதி பதினேழினிற்
றிதிநவமி நாழிகையொர் முப்பத்தெண் முக்கால்
சிறந்தமுற் பக்கமோது
பருவில்குரு வார்நாள் பன்னுபூ ரட்டாதி
பகரிருபத் தொன்பதரைமேற்
யிலுத்தி ரட்டாதி யறுபத்துமூன்றுபரி
நாமமிரு பத்தேழரை



[illegible]வா கரணமோ ரெட்டரையி னிரவினிற்
பங்கிலிரு பத்தேழின்மேல்
[illegible]பிர்த கடிகையுத யாதியைம் பத்தைந்து
பரசுநா லரையின் வீசம்
கருவதில் விருச்சிகத் தோரையிற் கேட்டைநாள்
கருதொன்றி னிற்சூரியன்
கவைவுத்தி ரட்டாதி யோரிரண் டிற்றிங்கள்
காண்பூர நாலிற்குசன்
கம்பமதின் மூலமொன் றிற்புதன் காரியுங்
காசிலா மிருகசீரிடங்
கனிதமூன் றிற்குருவு மனுடநா லிற்பிருகு
கனியுமா திரைநாளினில்
அருகுட லிராகுபூ ராடம திரண்டினி
லானதொருகேதுசேரும்
அலகில்புகழ் சுபயோக சுபகரண நாளினி
லரித்வார மங்கலத்திற்
கரகஸ்ரீ தரயோகி ராமா நுஜதாஸ
னுனபெயர் மேவுதூய்மை
யமையுமுயர் கோபால சாமிரகு நாதரா
ஜாளியவ தாரநாளே.

# முடிமன்னன் தலைசாய்ந்தான்

**அருந்தவபுரம் தி. உலகையாத் தேவர்**

வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த ராசாளியார் அவர்கள்
6-4-1920ம் நாள் இயற்கை எய்தினார்கள்! அவரது இறுதி நாட்
களை இக்கட்டுரையில் காண்போம்!

ஐந்தாம் ஜார்ஜ் அரசனோடும், அவரது துணைவியார்
மேன்மைதங்கிய இங்கிலாந்து நாட்டு அரசியலோடும்,
ஒன்றாக அமர்ந்து விருந்துண்ட கரங்கள் வெறிச்சோடிக் கிடந்
தன! சாதாரணகரமா அது! சரித்திரம் கண்டகரம்! அந்தத் திருக்
கரங்களுள் சோர்ந்து கிடந்தன! ஈன்று சிவந்த கரம் நிரந்தர
ஓய்வு பெற்றது!

பொன் மன உடல் பூமிதனில் சாய்ந்தது! கோடி நிலா
வின் அழகினை ஒன்றாக்கிய திருமுகம்! புன்னகையோடு
மௌனமாக இருந்தது! ராசாளியார் அவர்கள் புலித்தோலில்
அமர்ந்து திருநாமம் இட்டு, பூஜை அறையில் அமரும்
காட்சிதனைக் காணக் கண்கோடி வேண்டும். இவரது
இல்லம் திருக்கோவிலாகவே காட்சிதரும்! அவர் அமரும்
இடம் இறைவனின் சன்னிதானமாகவே இருக்கும். வெளி
யில் செல்லும்போது அவரது உடையும், நடையும், மிடுக்
கும், மீசையும் நெஞ்சிலே நிலைத்து நிற்கும் அவர் இயற்கை
எய்தியதாக யாரும் எண்ணவில்லை. ''எம்பெருமான்
பள்ளிக்கொண்டானோ'' - என்று எண்ணும் அளவிற்கு -
இந்த காட்சி நெஞ்சை விட்டு அகலாது!

வாயாரப் பெரும்புலவர் வாழ்த்துகின்ற புண்ணியம்
வாய் மூடிக்கிடந்தது! குருசில் என்றார் ஓர் புலவர்! குஞ்சரம்
என்றார் மறுபுலவர் கோவேந்தன் என்றார் ஒருவர்! கோக்
குருசில் என்றாரும் உண்டு! நிலந்தனிலே ராஜாளி! நிதி



தனிலே ராஜாளி குலந்தனிலே ராஜாளி! கொடைதனிலே
ராஜாளி கோபாலசாமி ராஜாளி நீதான் என்றாரும் உண்டு!

கொற்றவன்! எமக்குற்றவன்! குற்றப் பரம்பரை என
எம்குலத்தவரை! ஆண்ட இனத்தினை! கள்ளர் மரபினை
ஆங்கிலேய அரசு குற்றம் சுமத்தியது! காவல் நிலையம்
சென்று நித்தம் கையொப்பமிட வேண்டும்! கிராமத் தலை
வரிடம் அனுமதி பெற்றுத்தான் வெளியூர் செல்லவேண்டும்!
குறித்த நேரத்தில் வராவிட்டால் தண்டனை தயாராக
இருக்கும்!

சில கிராமங்களில் வயது வந்த ஆண்கள் அனைவரும்
போலீஸ் நிலையத்திலேயே இரவு முழுதும் தங்கவேண்டும்!
அதிகாலையில் ஏட்டு ஐயாவின் விசில் சப்தம் கேட்டு
எழுந்து அவரவர் இல்லம் திரும்ப வேண்டும்! நமது சமு
தாயத்தின் நிலை எவ்வளவு மோசமாக இருந்தது என்பதற்கு
மேலேகண்ட செய்திகளை உங்கள் சிந்தனைக்கு வைக்
கின்றேன்!

இந்நிலை குறித்து யாவரும் வருந்தவில்லை! இது
நமது இனத்தின் தலை எழுத்து என்று எண்ணி வாளாய்
இருந்து விட்டனர்!

ராசர்ளியார் தான் இந்த இழிநிலை போக்க உரிமை
முழக்கமிட்டார்! நமது இனத்தின் இழிநிலை போக்க உறுதி
பூண்டார் வெற்றியும் கண்டார்!

முக்குலத்தோரைக் குறிப்பாக கள்ளர் இனத்தோரை
வாழ்விக்க வந்த வள்ளல்தான் ராசாளியார் ஆவார்! நமது
மானம் காத்து! மரபு காத்து! சுயமரியாதையையும் காத்த
சுடரொளி அணைந்துவிட்டது!

ஐந்து நூற்றாண்டில் ஆற்ற வேண்டிய பணிகளை அரை நூற்றாண்டில் ஆற்றிவிட்டு அமைதி கொண்டு விட்டது! அவரது வாழ்நாள் 50 ஆண்டுகளே!

அவரது மறைவு கேட்டு அரதைப் பெரும்பாழி உறையும் அன்னை அலங்காரமும் வருத்தமுற்றாள்! தமக்கு ராசகோபுரம் எழுப்பிய ராசாளியார் மறைவு அறிந்த வரத ராசப்பெருமாளும் வாட்ட முற்றான். தமிழன்னை தலை மகனை இழந்து தவித்தாள்! புலவர்கள் புடைசூழ்ந்து கண்ணீர்க் கடலில் நீந்தினார்கள்!

ஆலய கதவுகட்கு தாழ்ப்பாள் உண்டு! அரண்மனை கதவுகளுக்கும் தாழ்ப்பாள் உண்டு! ராசாளியார் இல்லக் கதவுகளுக்கு தாழ்ப்பாளே இல்லை. அவரது இல்லம் மாணிக்கதவம் திறந்தே இருக்கும்! இல்லமும் உள்ளமும் என்றும் திறந்தே இருக்கும்!

தமிழ்ப்புலவர் பெருமக்கட்கு ஆதரவு அளித்திட்ட சான்றோன் விடைபெற்றான். உள்ளச் சுமையை குறைக்க அழுதாவது துயரை ஆற்றலாம் என்று எண்ணவும் இடம் இல்லை.

ராசாளியார் இறப்பதற்கு முன்பு தம் மனைவியரையும் மற்றும் நண்பர்களையும் அழைத்தார்! தாம் இறந்ததால் யாரும் கண்ணீர் சிந்தக்கூடாது. மாறாக இறைவனைத் 'தமிழால்' - பாடித்துதிக்க வேண்டும் என்பதே அவரது கட்டளை ஆகும்!

பட்டத்தரசியார் கூட அழவில்லை. மாறாக இறைவனை எண்ணி எண்ணி நாமவளி பாடி, மலரால் அர்ச்சனை செய்தார்கள்! தேவாரம், பிரபந்தங்கள் ஓதப்பட்டன. சங்கொலிகள் முழங்கின! ஆற்றொண்ணாத் துயரினை அறிந்த உள்ளம் மெல்ல அழுதது! உதடுகள் திருப்பதிகங்களை



[illegible] ராசாளியார் உடல் எரியூட்டப்படவில்லை. முடி [illegible] தலையில் முற்றிய தேங்காய்களால் அடித்து கபாலம் தெரிந்த பிறகு கல்லறையில் வைக்கப்பட்டார்.

அரித்துவாரமங்கலத்தில் அவரது இல்லத்திற்கு எதிரே அந்தக் கல்லறை இன்றும் உள்ளது.

கபாலம் திறக்கும்போது கூட ராசாளியார் பட்டத் தரசியார் கண்ணீர் சிந்தவில்லை! இறைவனை எண்ணி எண்ணித் தொழுதார்கள்!

அந்தோ! ஒல்காப்புகழ் தொல்காப்பியனுக்கு சிலை எழுப்பியவர் சிலையாக அமர்ந்து விட்டார்! 'நற்றிணை' இலக்கியத்தை நாட்டுக்கு அச்சிட்டு அளித்திட்டவர் இறைவனடி சேர்ந்தார்!

ராசாளியார் அவர்கள் எங்கள் நெருங்கிய உறவினர் ஆவார்கள். எனது சிறிய தந்தை சாமி ஐயாத்தேவர் அவர்கள் இல்லத்திற்கு அடிக்கடி புலவர் பெருமக்கள் புடைசூழ வருவார்கள், சாமி ஐயா தேவர் அவர்கள் கரந்தைத் தமிழ்ச் சங்க நிறுவனக் குழுவின் உறுப்பினர் ஆவார்கள்.

ராசாளியாரை எண்ணிப் போற்றி அவரது மலரடி வணங்கி, பெருமூச்சைக் காணிக்கையாக்கி, முடிக்கின்றேன்! வணக்கம்.

# "சேதுராயர் பார்வையில் ராஜாளியார்"

பழம் பெரும் புலவர் **சிங்காரவேல் சேதுராயர்**

1. அறமிகுந்த தமிழ்நாடு அறிஞர் பலர் தம்புகழை அவனிமீதே
விறல் சார்ந்து நிலைநிறுத்தி விண்ணுலக மெய்தினார் மென்மைசேர
திறளுன்ற கோபாலசாமி ரகுநாதனவன் செல்வன் செம்மல்
மிடல் சான்றேனினிப்பிறந்ததேனின் மெலிவு நீக்கவென விறுகொண்டான்.

2. மாசுவடி சுவடி பல மறைந்தமையின் மனம் வெதும்பி மறுக்கமெய்தித்
தேசுபெறுமச்சுவடி தேடரியபல தேடிச்சிறக்கச் செய்தான்
ஆசில் பல் நூல் தேடி அவைதொகுத்துப் பேழையிடு மறிஞர் போலாது
ஏசுறுமுக் குறையகற்றி இனிதுணர்ந்து நிறைமதியுமேய் ந்தானென்ப.

3. பாம்பறியும் பாம்பின்கால் என மொழியும் பழமொழியும் பார்த்துத் தம்மோடு
எய்ந்த தமிழறிஞர் தமை இடந்தேடி அழைத்துப் போந்தினிய கூறி
ஆய்ந்த அவர் நல்லுரை கேட்டக மகிழ்ந்து தன்சுவை சேர் அருத்தங்காட்டிச்
சூழ்ந்த தமபொருளாய்ந்தங் குளமுவக்கும் தனி நிலையும் சொல்லற்பாற்றோ,

4. நன்னுலோடு பன்னூலும் தொன்னூலும் நலவுணர்ந்து நன்குநோக்கி
எம்மொழியும் எம்மொழிக்கிங்கினை நிலையாம் எனவுரைக்க எங்கள் கம்பன்
சொன்மொழியும் பாத்திலீரோ பார்த்தவழிஎன் சொலுவீர் சுருங்குமுள்ளம்
இம்மியுமங்கில்லாதே எனவுரைத்தே எமாக்கும் இயல்தான் என்னே.

5. இவுலரும் இவர் தன்னின் இனியாரும் இனியாரே என்று கூறதிப்
புலமையரும் இவர் தன்னின் மதியாரும் மதியாரும் புவிஇல்லென்ன
புரவலரும் இவர் தன்னின் இலை இலை என்றுரைப்பர் இப்பூவில் லென்ன
அனல் வயல் சூழ் அரித்துவார் மங்கலத்துத் தோன்றுமெமதறிஞர் கோவே.

6. புகழ் நிலைசேர் சோணாட்டிலிகல் மறவோர் பொலிவெய்தும் தஞ்சை போர்த்த
இகழ்வறு நல்லரித்துவராமங்கலத் தங்கிசைக்குடியில் தமிழோன்ற
துகளறு பேர்க்கோபாலசாமி ரகுநாதனவன் பொறப்பத்தாயே



திகழுற்று தவனிருகணெனப் போற்றினான் பேணினான் பொம்மைதீர்ந்தான்.

7. இளங்காட்டிற் சிறந்த நலவுளங்காட்டும் பெரியர் பலர் இவைஎண்ணி
நிலங்காட்டும் கீர்த்தியினற்றமிழ்ச் சங்கம் காட்டினார் அவணீ சொற்ற
புலங்காட்டும் பூமகள் காட்டுன்னுரை காண் இனிது
அரிதுஎன் பொய்திர்வார்த்தை
இன்னும் நீட்டி மகிழ்வூட்டி நிற்குமால் நின்னறிவின் ஏற்றமென்னே!

8. அவ்வைபாடிய அதிகனும் அறிஞனாம் கபிலன்
வெல்லப் பாடிய பாரியும் வேறுளவளவர்
எள்ளல் தீர்ந்திடும் எனைவரும் இகழறு நின்னிற்
கொள்ளத் தக்கரே இற்றிது குறையதோ அறியேன்.

9. மூன்று சங்கமும் முறைமையின் மதுரையின் ஒழியச்
சான்ற சீர்த்துரைத் தேவாரம் தகவுடை வள்ளல்
என்று கண்டிட சங்கம் நான் காவதற் கிறைமை
பூண்டநீ நின்ற புகழினுக் குலகிடம் போதா,

10. தாய் மொழியே நின்னுயிரென்றுரைத்திட்டாய் தகவுடையோய்
தாய்மொழியே நின்செல்வமென்பதுவுங் சாற்றினாய்
தாய்மொழிதேர் புலவரே நின்னட்பாத தாங்கினாய்
தாய்மொழியே இன்புதரும் மகவேனவும் சமைந்திட்டாய்;

11. ஐந்து முகன் நான் முகனே ஆயினான் ஆஊவத்தால்
நைந்தங் குளமுருக நன்றரோ – ஐந்தியலும்
செஞ்சொனினூல் நுண்ணுணர்வி னாங்கறிவு சூம்பலால்

12. வாழ்க அவன் வள்ளன்மை வாழ்க தமிழ்ப்பற்று
வாழ்க அவன் நுண்ணுர்வு வாழ்கவே – வீழ்வீல்
வரிமைத் தமிழ் வாழ்க வே.

***செ. சிங்காரவேலச் சேதுர்ராயர்,***

19-12-80. இளங்காடு.

## கரந்தைத் தமிழ்ச் சங்க, செந்தமிழ்க் கல்விச்சாலைதனைத் துவக்கி வைத்த ராஜாளியார் அவர்கட்குச் சங்கம் நல்கிய வரவேற்பு

(கரந்தைத் தமிழ்ச்சங்க 'வெள்ளி விழா' - மலரில் இடம் பெற்றது)

1. திருவளர் சீர்த்திச் செம்மா லரதைப்
பதிவள ரித்ர குலாதிப யோகப்
பயிற்சி யான நன் முயற்சி யாள!
மூத்தமிழ் தன்னையு நத்திப்படித்த
மூதறி வாளவெப் போதும் புலவர்க்
காதரித் தளிக்கு மண்ணா லெவர்க்கு
மடமை, நோய்பசி மற்றும் மூன்றுந்
தொடரிற் றொல்லை படருமென் றோர்ந்தாங்
கடைந்தவர்க் கன்னவை யணுகா வண்ணமோர்

2. மாணவர்கழகம் மருந்தருள் சாலை
இவ்ணு மன்ன சத்திர மிவற்றைப்
புதுக்கிய புண்ணிய! புனிதமா தவனே!
நிலமதை யளந்த நெடுமுடி யண்ணறன்
மலர்ப்பத மறவா மாண்பமை மனத்தோய்

3. வாசுதேவப் பெயர் வள்ளல் செய் தவத்தான்
வந்த நற்றூய மனத்தகோ பால
சாமி ரகு நாத ராஜா ளிப் பெயர்
பெற்ற பெரியோய் பேணினம் ஈண்டு
வருக! வருக! மகிழ்ந்தனை வருக!
கருணையொ டெங்கணற் கரந்தை வாழ்தமிழ்ச்
சங்கத் தனைந்தவிச் செந்தமிழ்க் கல்விச்
சாலையை திறக்கச் சம்மதித் துவந்து
வுந்தனை பெரும வந்த நல் லோரையுள்
உரை பிறழ் கல்லா வுயர்வுறு வாயாற்
பெருமை பெற்றோங்கிப் பிறங்குக வென்று பல்



பாசி மொழிகளைப் பேசிக் காரெனக்
காவா தளிக்குங் கவின்பெறு கையாற்
சிறப்பை மற் றதனாற் செல்வி யோயிஃ
துன்னரு ளோடு மற் றேனைச் செல்வர்த
மின்னரு டன்னையு வெளிதினிற் பெற்றே
யென்று முயர்ந்தோ ரிசை யெனப் பொலிந்து
மேன்மே லோங்கி வளருக வென்னா
வாலமர் செல்வன தடியைச்
சீலமார் மனத்திற் றினமும் வேண்டுவமே!

***

## வீரையா ராஜாளியார் "வெதர்னேயான" கதை

டில்லி மகுடாபிஷேகம் கண்டும், பல புண்ணியத் திருக்கோயில்களைக் கண்டும் திரும்பிய ராஜாளியாருக்கு அரித்துவாரமங்கலம் கிராம மக்கள் தந்த வரவேற்பு வரலாற்றுச் சிறப்புக் கொண்டது.

நீடாமங்கலம் புகைவுண்டி நிலையத்தில் இருந்து அரித்துவாரமங்கலம் வரை பர்லாங்கிற்கு மூவர் வீதம் 'கொம்பு' ஒலி எழுப்ப ஆட்கள் நிறுத்தப் பட்டனர். கொம்பு ஒலியோடு, முரசமும் முழங்கின. ராஜாளியார் நீடாமங்கம் வந்து இறங்கிய உடன் புகைவண்டி நிலையத்தில் முதல் ஆள் கொம்பு ஊதினார். இதன் ஒலி கேட்ட மற்றவர்களும், கொம்பை ஒலிக்கத் துவங்கினர். ராஜாளியார் நீடாமங்கலம் வந்த செய்தியினை 5 நிமிடத்தில் அரித்துவார மங்கலம் மக்கள் அறிந்து குதூகலித்தனர். இவ்வாறு 7 மைல் எங்கும் மங்கள இசை, கொம்பொலி, முரசு முழங்க, அணி தேர்ப் புரவியில் ராஜாளியார் அழைத்துச் செல்லப்பட்ட காட்சி வியக்கவைத்தது!

இந்த வரவேற்பு ஏற்பாட்டினை வெற்றிகரமாகவும், புதுமையாகவும் செய்துகாட்டியதற்காக 'வெதர்னை' என்று எல்லோராலும், சிறப்பாக அழைக்கப்பட்டார் திருவாளர் வீரையா ராஜாளியார்அவர்கள்.

# அரித்துவாரமங்கலம் இராசாளியார்

திரு **டி.கே. நடராஜன்** அவர்கள்,
தலைமைப் பொறியாளர்,
மின்வாரியம் (ஓய்வு)

ஞானசம்பந்தரால் பாடப்பெற்ற திருத்தலம் அரதைப் பெரும் பாழி எனப்படும் அரித்துவாரமங்கலம். இவ்வூர் கும்பகோணத்திலிருந்து 20 கி.மீ. தொலைவில் தெற்கிலும், தஞ்சாவூரிலிருந்து 30 கி.மீ. வடகிழக்கிலும் உள்ளது. நீர்வளமும் நிலவளமும் உடைய இவ்வூரின் புகழுக்குப் புகழ் சேர்த்தவர் திருமிகு வா. கோபாலசாமி இரகுநாத இராசாளி யார் அவர்கள். 1870ஆம் ஆண்டு பெருநில்க்கிழார் குடியில் தோன்றி 1920இல் மறைந்தவர். 50 ஆண்டுகளே வாழ்ந்தாலும் அவர் ஆற்றிய பணிகளும் ஈட்டிய புகழும் போற்றற்குரியன.

இவருடைய நூல் நிலையத்தைக் கண்ட திருவாடு துறை ஆதீனத் தலைவர் அதற்கு சரசுவதி மஹால் என்று பெயரிட்டுப் பாராட்டினார். அங்கு பழைய ஓலைச் சுவடிகள் இருந்தன. அங்கு ஓலைச் சுவடியில் வீரசோழியம் என்ற இலக்கண நூலும் நற்றிணையும் இருந்தன என்று பெரும் புலவர் வெள்ளை வாரணனார் குறிப்பிடுகிறார். டாக்டர் உ.வே.சா. அவர்கள் புறநானூற்று ஓலைச் சுவடிகள் முழுமை யாகக் கிடைக்காதிருந்தபோது, அரித்துவார மங்கலம் வந்து இராசாளியாரிடமிருந்து புறநானூற்றுச் சுவடிகள் அனைத்தை யும் பெற்றுச்சென்று பின்பு அச்சேற்றினார். இச்செய்தியினை உ.வே.சா. புறநானூற்று முதற்பதிப்பின் முன்னுரையில் கூறியுள்ளார்.

மறை திருநாவுக்கரசு தம் தந்தையார் மறைமலை அடிகளாருக்கு இராசாளியாருடன் இருந்து தொடர்பு பற்றி, "18.3.1912இல் அடிகளை அரித்துவாரமங்கலத்துக்கு வருவித்



தான் முன்பே அடிகளிடம் நட்புக் கொண்டவர் ராஜாளியார். சிறந்த ஒப்புரவு ஆற்றி அடிகளைப் பெரிதும் மகிழ்வித்தார். "பிரணவம்" என்ற அடிகள் அறிவு சான்ற சொற்பொழிவினை நடத்துவித்து மகிழ்ந்தார்.

அடிகள் மறுத்தும் வற்புறுத்தி ரூ. 250 கொடுத்தார். (1912இல் ரூ. 250 பெரிய தொகையாகும்) அன்பை மறுக்க எண்ணாமல் அடிகள் அதனை ஏற்றுக்கொண்டார். அடிகள் பிறர் இந்த அன்புக் காணிக்கையை ஏற்றுக் கொண்டது இதுவே முதல் தடவையாகும். முதற்கொடை அளித்திட்ட பெருமை ராஜாளியாரைச் சேரும்.

இராசாளியார் ஆற்றிய தமிழ்ப்பணி மிகச் சிறப்புடை யது. அவர் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தார். கரந்தை தமிழ்ச் சங்க நூல் நிலையத்திற்குத் தம் நூல் நிலையத்திலிருந்து நூற்றுக்கணக்கான புத்தகங்களை வழங்கினார். குன்னூரில் ஒரு நூல் நிலையம் அமைத்துக் கொடுத்தார். அங்கு தொல் காப்பியருக்குச் சிலை நிறுவினார் என்று அறிகிறோம். அச்சிலை திறப்பு விழாவில் ராஜாளியார் அந்நூலகத்துக்கு ரூ. 10,000/- நன்கொடை வழங்கினார். இச்சிலை திறக்க கவர்னல் லாலி உதவினார் என்று தெரிகிறது.

ஓராண்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவைத் தஞ்சையில் மிகவும் சிறப்பாக நடத்தி வைத்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் நிறைவேற்றுக் கழக உறுப்பின ராகவும், எம் சங்கத்தின் புரவலராகவும் மற்றும் பல சங்கங் களின் தொடர்புடையவராகவும் இருந்திருக்கின்றனர் என்று நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் தம் கள்ளர் சரித்திரம் என்னும் நூலில் இராசாளியாரைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

இராசாளியார் திருவரங்கம் வைணவர் அவையின் தலைவராக இருந்தார். ஆனாலும், வைணவ சமயாசாரியா ராகிய மாத்துவாச்சாரியாரின் விசிஷ்டாத்வைதத்திலும்

அன்னிபெசண்ட் அம்மையாரின் பிரம்ம ஞான சபையிலும் ஈடுபாடு கொண்டு விளங்கினார். ஒருமுறை அன்னி பெசண்ட் அம்மையாரைத் தஞ்சைக்கு அழைத்து வந்து மூன்று நாட்கள் தம் செலவில் சொற்பொழிவாற்றச் செய்தார்.

1911ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 12ஆம் நாள் தில்லியில் நடைபெற்ற ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் முடிசூட்டு விழாவிற்கு அழைக்கப் பெற்று இராசாளியார் அங்கு சென்று விழாவில் கலந்துகொண்டு திரும்பினார். அவ்விழாவிந் நினைவாக *19.11.1911*இல் அரித்துவாரமங்கலத்தில் "The Coronation Rest House" ஒன்றும், "The Coronation Well" ஒன்றும் அமைப்பதற்குக் கும்பகோணம் சப் கலெக்டர் திரு சி.ஜி. ஆஸ்டின், ஐ.சி.எஸ். அவர்களைக் கொண்டு அடிக்கல் நாட்டப்பட்டது.

அரித்துவாரமங்கலம் ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோயில் தர்மகர்த்தரும், கிராமாதிகாரியும், மதுரைத் தமிழ்ச் சங்க அங்கத்தினரும், பிரபுகுல சிகாமணியும், பெருங் கொடை வள்ளலுமாகிய ஸ்ரீமான் வா.கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் அவர்கள் நீலகிரியைச் சார்ந்த உதகமண்டலத்தில் சென்னைக் கவர்னர் His Excellency Sir Arthur Lawley KCMG. GCIE, அவர்களையும், Her Excellency Lady Lawley அவர்களையும் சீப் செக்ரட்டரி, பிரைவேட் செகரட்டரி முதலியவர்கள் *18.07.1911*இல் சந்தித்து சம்பாஷித்தார்.

இவ்வாறு இலக்கியம், சமயம், அரசியல் ஆகிய துறைகளில் ஈடுபட்டார். அரசியலாரால் சிறப்பிக்கப் பட்டார். குற்றப் பரம்பரை சட்டத்துக்கு எதிராகக் குரல் கொடுத்துத் தம் சமூக மக்களின் மேன்மைக்கு வழி செய்தார். செல்வத்துப் பயனே ஈதல் என்பதற்கிணங்க வள்ளன்மை மிக்க நல்நிதிச் செல்வராகத் திகழ்ந்தார். புகழ் மலிந்த அவர் வாழ்வு போற்றுவதற்கும் பின்பற்றுவதற்கும் உரியது.



## ஹரித்வாரமங்கலம்
## ஸ்ரீமான் வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் அவர்கள் ஜேஷ்ட குமாரி திருமண ஸமயத்தில் தமிழ் வித்வான்கள் ஆசீர்வதித்துக் கூறியவை.

(நாகபட்டினம் : வெஸ்லியன் மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் பிர்ம்மஸ்ரீ **C.S. முத்துசாமி ஐயர்** அவர்கள் இயற்றியது)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொன்பூத்த பூமகளும் புகழ்பூத்த பாமகளும்
பொருந்த வாழ்வோன்
தென்பூத்த மணிமார்பிற் சீர்பூத்த நாரணனூர்
திருத்தாட் கன்பன்
இன்பூத்த மொழியாளனியல்பூத்த பாவாணர்க்
கெந்த நாளு
மின்பூத்த முகிலெனவே மிகப்பூத்த காதலத்தான்
மேன்மை யாளன். (க)

நிலவளமு நீர்வளமு நெல்வளமும் பலவளமு
நிறைந்து சான்ற
நலவளமும் படைத்தெழில்சேர் அரித்வார மங்கலத்திற்
றகைமை பூண்ட
குலவளமுங் கலைவளமுங் கொடைவளமு நடைவளமுங்
குலவி வாழு
நலவளஞ்சேர் கோபால சாமிரகு நாதனெனு
நரேந்த்ரன் மாதோ. (உ)

துதியோங்கு வடமதுரை வசுதேவற் கந்நாளிற்
றுகளி லாத

காவேறு முகிற்றுறைசை யம்பலவா ணக்குருவுங்
கலைப்பொன் சீராற்
றேவேறு தமிழ்ப்பாண்டித் துரையும்போ லாசிசொலத்
திறனின் றேனும்
நாவேறு கலைதெரிநம் புத்திரியி னலம்பெருக
நணுகன் பாலிப்
பாலேறு சொற்கலையான் மங்களா சாசனநான்
பகர லுற்றேன். (ச)

வில்லாண்ட நுதற்சீதை பட்டாபி ராமனொடு
விளங்கல் போலுஞ்
சொல்லாண்ட நாமாது பூமேவு தேமருவிச்
சுகித்தல் போலுங்
கல்லாண்ட மலைமகள்கண் ணுதனேரித் தம்பதிகள்
கலந்தெந் நாளும்
பல்லாண்டு பல்லாண்டாய்ப் புத்ரசுக பாக்யவதி
பதியாய் வாழ்க. (ரு)

எத்தானங் களினுமுயர் கன்னிகா தானபல
மேற்ற மென்பர்
அத்தானங் கோபால சாமிரகு நாதரா
ஜாளி செய்தான்
சத்தான புத்திரரோ டெண்ணிரண்டு சந்தான
சம்பத் தெய்த
கைத்தானக் கரிபரிவா கனம்பெருக பல்லாண்டு
களித்து வாழ்க. (சு)



(மதுரைத் தமிழ்ச்சங்க நூற்பரிசோதகர் ஸ்ரீமான்
மு. ரா. அருணாசல **கவிராயர்** அவர்களெழுதி விடுத்த கவிகள்
வருமாறு)

## ஆசிரிய விருத்தம்.

நன்புதலோர் கோபால சாமிரகு நாதமதி
நன்கு பெற்றோய்
முன்புதமிழ் பாராட்டு நம்போலும் புலவர்கவி
முழுதுந் தேர்நீ
நின்புதல்வி மணங்காணற் கெழுந்துவரு கெனவிடுத்த
திருபங் கண்டுள்
என்புதழை யிருதயத்திற் காண்டலே காண்டலென
வறிந்த நன்றி. (க)

★மெய்த்துணையா லுங்காண்டல் காண்டலென வுந்தெளிந்த
விதத்தா லென்னெஞ்
சுய்த்துணர்ந்து களிகூர்ந்தே னினி அரசஞ் சண்முகனு
ருவப்புற் றுங்க
ளித்துணைமன் றற்சிறப்பென் றறியவந்த தாலவர்பா
லெல்லா மன்பு
வைத் துணர்ந்து மகிழநின்றே னின்புதல்வி வரனுடனே
வாழி வாழி. (உ)

(கும்பகோணம், **கவிகுஞ்சரம் : சாமிநாத பிள்ளை** அவர்கள் இயற்றிய வெண்பா வருமாறு)

தனையள் கலியாண சம்ப்ரமத்தைப் பார்த்த
வனைவரொடும் யானுமகிழ் வானேன் - மனைமகிழுங்
கோபால சாமி ரகுநாத குஞ்சரமே
பூபால வித்வப்ரபு.

சாதாரண-ஞு கார்த்திகை-மீ 26உ ஞாயிற்றுக்கிழமை உத்திரட்டாதி நட்சத்திரம் விருச்சிக லக்னங்கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகைக்குள் அரித்துவாரமங்கலம் ஸ்ரீ கோபாலஸ்வாமி மடத்தில் உச நாழிகைக்குள் அரித்துவாரமங்கலம் ஸ்ரீ கோபாலஸ்வாமி மடத்தில் ஸ்ரீகோபாலஸ்வாமி கலாசாலை, ஸ்ரீகோபாலஸ்வாமி புத்தகசாலை, ஸ்ரீ கோபாலஸ்வாமி ஔஷதசாலை என்னு மூன்று சாலைகளையுந் தாபித்த போது சொல்லிய வாழ்த்துக் கவிகள்.

(நாகை நீலலோசனிப் பத்திராதிபர், ஸ்ரீமான் : ஜி. சதாசிவம் பிள்ளை அவர்கள் இயற்றியது.)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பூபாலன் புகழ்ப்பாலன் புண்ணியமே வடிவுகொண்ட
புனித பாலன்
ஆபால விருத்தர்முத லவனியோர் கொண்டாடு
மருமைப் பாலன்
மாபால னரித்வார மங்கலநன் னகர்வாழு
மகிமைப் பாலன்
கோபால சாமியெனுங் குணபாலன் கலாசாலை
குலவி வாழ்க. (க)

அருளாளன் அன்பாளன் யாவரையு மாதரிக்கு
மருமை யாளன்



திருளாளன் கோபால சாமியெனுந் திருநாமச்
சீர்த்தியாளன்
மருளாண்ட மாணவர்கள் மதியாண்டு வாழ்ந்திடவே
மகிழ்த்துச் செய்த
பொருளாளுங் கலாசாலை புகழாண்டு பல்லாண்டு
பொலிந்து வாழ்க. (உ)

எத்தானத் திலுமேன்மை வித்தியா தானமென
விசைப்பர் நல்லோர்
அத்தானம் புத்தகத்தா லாகுமெனக் கோபால
சாமி யண்ணல்
சத்தான புத்தமுத சாலையெனப் புத்தகநற்
சாலை வைத்தான்
இத்தானப் புலவரெலா மினிதருந்தி யெந்நாளு
மினிது வாழ்க. (ங)

அறமுதலா நான்கினையு மடைவதற்கே யாதார
மான தேக
மறமுறுதி நோய்களான் மடியாமற் சஞ்சீவி
மருந்தை யொத்த
நிறமுறுநன் மருந்தளிக்கு நேயமுறு சாலையொன்று
நியமித் தான்மெய்த்
திறமுறுசீர்க் கோபால சாமியிவண் பல்லூழி
சிறந்து வாழ்க. (ச)

தங்குகரை யற்றகரு ணைக்கடலான் கோபால
சாமி யென்னு
மெங்கள்குலக் குரிசிலிந்தக் கோபால சாமியெனு
மெழிற்பேர் பூண்ட
துங்கமிகு திருமடத்திற் கல்லூரி ★முறைமருந்துத்
தூய சாலை
சங்கமுறத் தாபித்தே தன்புகழைத் தாபித்தான்
தகுதி தானே. (ரு)

*(தஞ்சை டிஸ்டிரிக்ட் முன்சீப் கோர்ட்டு கிளர்க்கு, தஞ்சை* **ஸ்ரீவித்தியா நிகேதனசபை** *கௌரவ அங்கத்தினர்* **M.A. ஜோஸப் பிள்ளை** *அவர்கள் கூறியது)*

### வெண்பா

ஒப்புரவு தேர்ந்தோற் குறுஞ்செல்வம் வள்ளுவனு
ரப்புமர மௌடதம்போ லாகுமென்றுர் - இப்புவியிற்
கோபால சாமியெனுங் கோமான் படைத்தநிதி
மாபாற் பயன்குறித்தே மற்று.

(யாழ்ப்பாணத்துநல்லூர் **ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்** அவர்கள் மாணுக்கருந் தஞ்சை ஸெயிண்ட் பீட்டர்ஸ் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமாயிருந்த **விசுவலிங்கம் பிள்ளை** அவர்கள் குமாரருந் தஞ்சை ஸ்ரீ வித்தியா நிகேதன சபைக் காரியதரிசியுமாயுள்ள **ஸ்ரீமாந்: வி. சாமிநாத பிள்ளை** அவர்கள் இயற்றிய வாழ்த்துப் பாக்கள்)

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

நீர்வளமு நிலவளமு நீங்காநற் பலவளமு
 நிறைந்து மேலாஞ்
சீர்வளமும் பொலிந்திலகு சோணுட்டின் றலைநகராய்த்
 திகழுந் தஞ்சைச்
சேர்வளவாய்க் குமுதமலர்த் தேன்மாந்திப் பாண்மிழற்றுஞ்
 சிறைசேர் வண்டின்
கார்வளரும் பொழிலரதைப் பெரும்பாழி யெனுமூதூர்
 கவினு மாறே. (க)

கொண்டிருக்கும்பசிநோயான் மனநொந்துமனம் வேண்டிக்
 குறுகி ஞர்க



அண்டிருக்கும் படியொருசத் திரமுன்ன ரேயமைத்து
 புடற்க ணுற்ற
வண்டிருக்கு முதற்பலநோய் கண்மாறச் செய்யுமொரு
 கழகத் தோடு
பண்டிருக்கு முதல்வேத மோதிடவு மஞ்ஞானம்
 பாறுதற்கும் (உ)

பொன்னுட்டுத் தேவர்தமிற் புலவரெனு மோர்பெயரைப்
 போற்ற லாலித்
தென்னுட்டு மிடையுறுவோர் கற்றறிவாற் புலவரெனச்
 சிறந்து தன்னூர்
முன்னுட்டு முரைபெறவே வேண்டுமென மனத்திடையே
 முன்னிச் சீர்சால்
பன்னுட்டு முவமையில்புத் தககல்விச் சாலையையும்
 பண்பிற் செய்தான். (ங)

அத்தகையோ னியாரென்னி லருள் வாசு தேவனெனு
 மபிதா னத்து
வித்தகன்செய் தவமெல்லா மொருபடிவ மாயுதித்து
 விளங்கிற் றென்னக்
கொத்தளகக்களபமுலைக் கொவ்வைவாய்க்கோதையர்பாற்
 கொழுந்து காமப்
பித்தரும்பார் மதிபரந்த தெனப்பரந்த திருமார்பான்
 பெரிய தோளான் (ச)

நன்னகர வாசமுளா னம்மில்விசு வாசமுளா
 னயந்த மாலைத்
தென்னகரு வாசமுளான் சாதுசக வாசமுளான்
 சிறந்த காவே
மன்னகர வரமதியா னருள்புரியத் தாமதியா
 னருச்சு னற்கு
முன்னகர மாமதியா னென்றவன்போன் மாமதியா
 முகம்பெற் றுள்ளான். (ரு)

மைபயிலுங்கண்ணியர்க்கோர்மதனுவோன் மறையோர்க்கு
மற்றோர்க் கும்மீ
கைப்பயிலுங் கரதலத்தான் பாவாணர்க் கிருநிதியங்
களிப்பி னீவோன்
நெய்பயிலுங்கூர்வேன் மன்னவன்போன்மென்றேயெவரு
நினைவிற் கொள்ள
மெய்பயிலும் வாசகத்தான் கண்ணனடி மறவாத
மேன்மை யாளன் (கூ)

புலமுயர்ந்தவிலக்கணமுமிலக்கியமுமொருங்குணர்ந்தோன்
புலவர் நித்தம்
பலமுயர்ந்த நாற்கவிகள் புனைந்தணியப் பரிசீவோன்
பண்போ டென்று
நலமுயர்ந்த பரஞான மெளியோர்க்கு மளியோடு
நவிலு நாவான்
வலமுயர்ந்த வுலகுபுகழ் கோபால சாமியெனும்
வள்ள லேறே. (எ)

இப்பெரிய கொடையாள னிலங்குபெரும் புகழாள
மென்வர்க்கு மேலாய்ச்
செப்புமிரு நிதியாளன் றிக்கற்றூர்க் கருளுபெருஞ்
சீரா ளன்மே
லொப்புயர்வில் லாதபெரும் பேராளன் பாராள
னுவகை யோடுந்
தப்பிகந்த நல்லறங்க ளுலெட்டுந் தடையறச்செய்
தகவான் மாதோ. (அ)



[illegible] மெச்சிட நற் புலவோர்க ளெக்காலும்
புகழ்ந்து பாடக்
[illegible] யமரரதைப் பெரும்பாழி தனிலமைத்த
கழகத் தோடுங்
[illegible] சாமிரகு நாதரா ஜாளிப்பேர்க்
குரிசில் வாழக்
[illegible] னடிப்போதெம் முடிப்போதா யெப்போதுங்
கொள்ளு வோமே. (கூ)

## நேரிசை வெண்பா

சீர்பெறுசா தாரணத் திற் றேளிருபத் தாருநாட்
பார்புகழு நல்ல பகனுளி - லேர்பெறமுச்
சாலைதனைக் கோபால சாமியமைத் தான்வாழி
வேலையுல குய்யும் விதம்.

*11.12.1910.*

# புறநானூறும் இராசாளியாரும்

–நாகூர் தி. சோமசுந்தரத்தேவர்

தஞ்சை மாவட்டத்தில் இன்றும் ஓர் உட்கடை சிற்றூரான அரித்து வாரமங்கலத்தில் பிறந்த இராசாளியார் அவர்கள் தன் 30 வயதுக்குள்ளாகவே பாலவனத்தம் குறுநில மன்னர் பாண்டித்துரைத் தேவர் போன்ற பெருமக்களுடன் நட்பு கொண்டு மதுரையில் தமிழ்ச் சங்கம் தோன்றத் துணைநின்றதும் தன் 40 வயதுக்குள் அரசன் சண்முகனார் டாக்டர் உ.வே.சா. போன்ற பெருமக்களோடு தொடர்பு கொண்டு தஞ்சையில் கரந்தையில் தமிழ்ச்சங்கங்கள் தோற்று வித்து புரந்தருளினார் என்பதுவுமே வியப்பாக இருப்பின் அந்நாளில் உதகமண்டலத்தில் உள்ள குன்னூரில் தமிழ்ச் சங்கம் தோற்றுவித்து அங்கு முதல் முதலாக தொல்காப் பியருக்கு சிலை வைத்தவர் என்பது எவ்வளவு பெருமிதத் துக்குரிய நிகழ்வாகும். அரித்துவார மங்கலத்தில் பிறந்தவர் களில் இன்றும் கூட குன்னூருக்கோ உதகமண்டலத்துக்கோ செல்லாதவர்கள் பலர் இருப்பர். ஆனால் 90 ஆண்டுகளுக்கு முன்பே 1911இல் குன்னூரில் ஓர் தமிழ்ச் சங்கம் நிறுவி அங்கு தொல்காப்பியருக்கு சிலைவைத்த பெருமைக்குரியவர் இராசாளியார்.

அரித்துவார மங்கலத்திலிருந்து சுமார் 500மீ. தொலை வில் உள்ள குன்னூரில் எத்தனை நாள் மாதம் தங்கி எவ்வளவு பேருடன் பழகி பேசி எண்ணத்தை சொல்லி இசைவு பெற்ற ஓர் அமைப்பை உருவாக்க முடியும் என்று சிந்தித்தால் ...... உள்ளூரில் ஒரு கூட்டம் நடத்தவே விழி பிதுங்குகிறதே இதை 500 கி.மீ. அப்பால் 90 ஆண்டுகளுககு முன் சாதித்தவரை போற்றாமல் இருக்க முடியுமா? ஆங்கிலப் பேராசரின் முடிசூட்டு விழாவுக்கு அழைக்கப்பட்டதுடன் பேரரசர் அரசியாரின் தனி விருந்தினராக கௌரவிக்கப்பட்ட இராசாளியார் அவர்களுக்கு மாவட்ட ஆட்சிக்குழு (Dt.Bd) தேர்தலில், குடந்தை வட்டக் குழுவிலிருந்து (Taluk Bd.)



தேர்ந்தெடுக்கப்பட்ட இராசாளியார் அவர்களும் அவர்தம் [illegible] சமவாக்கு பெற்றபோது, குடந்தையின் தஞ்சை ஆட்சியராக தலைமையேற்றிருந்த ஆஸ்டின் I.C.S. இராசாளியாருக்கு வாக்களித்து அவரை வாகை சூட வைத்தா ராம். இவ்வாறு ஆங்கில துரைமார்களிடமும் அதிகாரி களிடமும் ஏற்பட்ட செல்வாக்கால் நட்பால், அவர்களைப் போலவே இவரும் கோடையிலே இதமான காற்றில் [illegible] உதகமண்டலம் குன்னூர் ஆகிய இடங்களுக்கு ஆண்டுதோறும் சென்று ஓரிரு மாதங்கள் தங்கும் பழக்கத் தால் அங்கும் பல நண்பர்களைப் பெற்று, அவர்களில் தமிழார்வலர்களைக் கண்டு பிடித்து 1911இல் குன்னூரில் ஒரு தமிழ்ச்சங்கம் ஏற்படுத்தியதுடன், தமிழின் கொன்மைக்கு சான்றாக விளங்கும் தொல்காப்பியருக்கு சிலையும் வைத் துள்ளார் என்றால் அவரின் தமிழார்வமும் மொழிப்பற்றும் செயல்திறமும் வியந்து வணங்கத்தக்கன அல்லவா?

ஆங்கிலப் பேரரசில் தனக்கிருந்த செல்வாக்கினை, தன் தாய்த் தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்திட்ட தமிழ்ப் புலவன் தொல்காப்பியனுக்கு சிலைவைக்க பயன்படுத்திக் கொண்ட அவரது தமிழ்ப்பற்றுக்கு தமிழ் கூறு நல்லுலகமே தலைவணங்கக் கடமைப்பட்டதில்லையா? இச்சிலை அமைக்க இவருக்கு உதவியாக இருந்த ஆங்கில லார்டு லாலீ (lawley) என்ற துரைமகன், 10-09-1911ல் குன்னூரில் நடந்த சிலைதிறப்பு நிகழ்ச்சியின் தமிழ்ச்சங்க நூலகத்திற்கு ரூபாய் பத்தாயிரம் நன்கொடை வழங்கியுள்ளார் இராசாளியார். அக்காலத்தில் பதினைந்து ரூபாய்க்கு 1 பவுன் கிடைத்த காலத்தில் ரூபாய் பத்தாயிரம்! அதாவது 666பவுன், இன்றைய மதிப்பில் 666 X 7000= ரூ. 46,62,000/- இராசாளியாரின் வள்ளண்மைக்கு இது சான்று.

இராசாளியார் அவர்களது வள்ளண்மைக்குச் சான்றாக புலவர் அரசன் சண்முகனார் தன் நூலில் குறித்திருப்பதும், தமிழ்க்கடல் மறைமலையடிகளாருக்கு வழங்கியது பற்றி அவர் மகன் மறை. திருநாவுக்கரசு எழுதியிருப்பதும்

குன்னூரில் தொல்காப்பியர் சிலை நிறுவியபோது ரூ. 10,000/ அச்சங்கத்திற்கு அளித்ததும் முன்பு கண்டோம். அதேபோல் தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்கள் தமிழகத்தில் பல இடங்களில் அலைந்தும் கிடைக்காத வீரசோழியம் என்ற இலக்கண நூலுக்கு ஒரே படி இராசாளியாரின் நூலகத்தில் இருந்ததை அங்கேயே தங்கி படி எடுத்துக் கொண்டபோது, தன்னிடமிருந்த புறநானூற்று ஓலைச் சுவடிகளையும் பதிப்பிக்கக் கொடுத்ததுடன் ஒரு தட்டில் ஓராயிரம் வெண் பொற்காசுகளை வைத்து உ.வே.சா. அவர்களிடம் நீட்ட அவர் மறுக்க இவர் வற்புறுத்தலுக்கு இணங்க அவர் பெற்றுக் கொண்டார். உ.வே.சா. அவர்கள் தமிழ்ச் சுவடிகளை தேடிப் பல இடங்களில் அலைந்தபோது பல அரசர்கள் குறு நில மன்னர்களை சந்தித்தாலும் அவர்களிடமிருந்து பணம் ஏதும் பெற்றுக் கொண்டதே இல்லை. ஆனால் இராசாளியாரின் தமிழ்ப்பற்றும் அவர் பராமரித்த நூலகச் சிறப்பும் அவரது அன்பும் தமிழ்த் தாத்தாவை பிணைத்ததால், உ.வே.சா. பிறரளித்த தொகையினை கை நீட்டி பெற்றுக் கொண்டது இராசாளியாரிடம் மட்டும் தான்.



# சோழமண்டல சொக்கத்தங்கம் இராசாளியார்

-எஸ். சங்கரவடிவேலு, I.R.S.(R),M.Sc.,(Ag.),M.B.A.,B.L.,

''அரித்துவாரமங்கலம் வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார் சாதனை சரித்திரம்'' எனும் நூலை தாங்கள் 21.09.2008 அன்று என்னிடம் கொடுத்தீர்கள். அய்யா அவர்கள் பற்றிய செய்திகள், ஆற்றிய அரும்பணிகள் பற்றி பல தமிழ்ச் சான்றோர்களும் பெரியவர்களும், அய்யாவின் வழித் தோன்றல்களும் எழுதிய கட்டுரைகள் இதில் இடம் பெற்றுள்ளன. என்னைவிட வயதிலும், அனுபவத்திலும் ஆற்றலிலும் சிறந்த பெரியவர்களின் படைப்புகளை படிக்கும் வாய்ப்பினை நல்கியமைக்கு எனது மணமுவந்த நன்றி. பல புதிய வரலாற்று நிகழ்வுகளை தெரிந்து கொள்ள முடிந்தது.

அய்யா இராசாளியார் அவர்கள் ''தோன்றின் புகழோடு தோன்றுக'' என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாக்கிற்கேற்ப தோன்றி வாழ்ந்து காட்டியவர். ''நாடும் மொழியும்'' நமதிரு கண்கள் என்பர். நாட்டினை நேசித்ததின் அடையாளமாக தம்மை சூழ்ந்து வாழ்ந்த மக்களை நேசித்து அவர்கள் வாழ்வுயர அரும்பணி ஆற்றியிருக்கின்றார்கள். மொழியினைப் போற்றும் வகையில் நான்காம் தமிழ்ச் சங்கம், கரந்தை தமிழ்ச்சங்கம் போன்ற அமைப்புகளை நிறுவியதில் பெரும்பங்கு ஆற்றியிருக்கின்றார்கள்.

அய்யா அவர்களின் வழித் தோன்றல்களாக திருமிகு முத்துக் குமாரசுவாமி, திருமிகு இராமானுஜம், டாக்டர் பி. வரதராஜன் ஆகியோருடன் பழகும் வாய்ப்பினைப் பெற்றிருக்கின்றேன். அவர்களிடம் உயர் குடிப் பண்பின் வெளிப்பாடுகளைப் பார்த்திருக்கின்றேன்.

தான் பிறந்த குடிக்குமட்டுமின்றி சோழமண்டலத்திற்கே பெருமைசேர்த்த அய்யா அவர்களின் புகழ் என்றும் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.



வா.கோ. இராசாளியார் அவர்களின் சகோதரர்
சின்னராஜாவுக்கு சதாபிஷேகம்
திருக்கடையூரில் நடைபெற்றபோது எடுக்கப்பட்டது.



# "ஆயிரம் பிறை கண்ட அண்ணல்"

## *[ந.வெ. ராஜாளியார் அவர்களின் வரலாறு]*

**-அரதை ஆ. திருவேங்கடக் கண்டியார்**

தஞ்சைத் 'தரணி சான்றோர்' பலரை ஈன்று பெருமை பெற்றுள்ளது. வாழையடி வாழையென வந்த அரித்துவார மங்கலம் ராசாளியார் மரபில், 'கோவேந்தன்' - கோபாலசாமி ரகுநாத ராசாளி யார் அவர்கட்குப்பிறகு வந்துதித்த திரு ந. வெங்கிடாஜல ரகுநாத ராசாளியார் அவர்கள் வரலாற்றை ஈண்டுக் காண்போம்.

அமரர் ராசாளியார் அவர்களின் அடுத்த வாரிசு எனக் கருதப்படும் அளவுக்குப் புகழ்பெற்ற பெருமகன் ந.வெ. அவர்களைப்பற்றி நாட நன்கு அறியும். அன்னார் கோபால சாமி ரகுநாத ராசாளியாரின் சிறிய தந்தை நடேச ரகுநாத ராசாளியார் அவர்களின் அருமைச் செல்வன் ஆவார்கள்.

அவ்வட்டாரத்து மக்களால் 'பெரிய பண்ணை' -என்று அழைக்கப்படும் ராசாளியார் குடும்பம் புகழ் வாய்ந்தது மட்டுமின்றிப் பல சாதனைகளையும் நிகழ்த்தியதாகும். அனைவராலும் 'சின்ன ராசா' என்று செல்லமாக அழைக்கப் படும் ந.வெ. அவர்களின் பூர்வீகத்தை விளக்குவோம்.

இவர்களது தாத்தா கோவிந்தசாமி ரகுநாத ராசாளியார் அவர்கட்கு இரண்டு ஆண்கள் பிறந்தனர். மூத்தவர்திரு. கிருணசாமி ரகுநாத ராசாளியார் ஆவார். இளையவர் திரு. நடேச ரகுநாத ராசாளியார் ஆவார். அனைவராலும் 'உக்கிராணத்து அய்யா' என்று அழைக்கப்பட்ட கிருஷ்ணசாமி ரகுநாத ராசாளியார் அவர்கள் இவர்களது பெரியப்பா ஆவார்கள். கிருஷ்ணசாமி ரகுநாத ராசாளியாருக்கு இரண்டு ஆண் பிள்ளைகள் பிறந்தனர். ஒருவர் 'கோயில் அய்யா' என்று அழைக்கப்பட்ட ராமையா ரகுநாத ராசாளியார். இளையவர்

இவரது கைராசிக்காகவும், வாழ்த்தினைப் பெறுவதற்காக வும் வசதி படைத்த பலர் கூட இவர்களிடம் மாங்கல்யம் பெற்று மணம் முடித்துள்ளனர்.

புரட்டாசித் திங்களில் நடைபெறும் 'தளியல்' வழிபாடு தரணிபோற்றும் வகையில் நடந்துள்ளது. இவர்கள் வழிபட்ட சாமிகூடமானது அன்றும், இன்றும் திருப்பதி மூலஸ்தானமாகத் திகழ்வது குறிப்பிடத்தகுந்தது.

வைஷ்ணவ வழி சம்பிரதாயங்களைப் பின் பற்றி னாலும், சிவாலயத்தின் முன்னேற்றத்திலும் பெரும்பங்கு பெற்றுவந்தனர். அரதை பெரும்பாழி உறையும் அன்னை அலங்காரத்தின் திரு கோவிலுக்கு வீரமான்யம் தந்துள்ளார் கள் பல்வேறு மண்டகப்படிகட்கு மான்யம் விடப்பட்டுள் ளது. பெருமாள்கோவில் திருப்பணி முழுவதும் இவர்கள் குடும்பத்தாலேயே நடந்து வந்துள்ளது. அதற்கும் மான்யம் அளித்ததும் இக்குடும்பம்தான்.

அன்னை அலங்காரத்தின் தேவாலயத்திற்கு முன்பு அழகிய திருக்குளம், புதுமை குலையாது, பூரித்து நிற்கும். இதுபோன்ற அழகிய குளங்கள் இல்லையென்றே கூறலாம். இதைக் கட்டி முடித்தவர் ராமையா ரகுநாத ராசாளியார் ஆவார்கள். இவர் சின்ன ராசா அவர்களின் பெரியப்பா மகன் ஆவார். எண்ணமும், இதயமும் கோவிலுக்காகவே செல வழித்த ராமையா ராசாளியார் அவர்களைக் ''கோயில் அய்யா'' என்று அழைத்ததில் வியப்பில்லை! கிருஷ்ணசாமி ராசாளியார் காலத்தில் 'உக்கிராணத்தார்' - வீடு என்று அழைக் கப்பட்டது. அவரது புதல்வர் ''ராமையா ராசாளியார் காலத் தில் ''கோயில் பண்ணை'' என்று எல்லோராலும் அழைக்கப் பட்டது. நடேச ராசாளியாருக்கு பெண் மகவுகளும், ஒரே ஆண் மகவும் பிறந்தனர். அவ்வாண் மகவுதான் சின்ன ராசா ஆவார்கள். ராமையா ராசாளியார் அவர்களுக்கு கோவிந்த சாமி, ரெங்கையா, தருமையா என்ற மூன்று மக்கள்கள் உண்டு. கோவிந்தசாமி தான் அந்த இரண்டு குடும்பங்கட்கு



# காலமிது காலம்

[illegible] N. அரியராஜ பூபதி, M.A.,

[illegible] அரங்கில் உயர்ந்து நின்று, உண்மைகளை, [illegible] அளித்து, உயர்ந்த வாழ்க்கை நடாத்தி வந்த [illegible]'' தலைமையேற்று வந்த பெருங்குலம். [illegible] பொருளுக்கும் ஆசையுறாது, புகழுக்கே [illegible] பெருங்குலம். வீரம் விளைத்தல், வேண்டும் [illegible] நிறைதல் வேண்டும் என்று எண்ணி, கூற்று [illegible] மேல்வரினும் கூடி எதிர்க்கும் ஆற்றல் உடைய [illegible] தமிழ் இனம் என்று எல்லோரும் போற்றுவர்.

காடு கொன்று நாடாக்கி, குளம் தொட்டு வளம்பெருக்கி, நாட்டின் நலம்காத்து நேர்மையும் நீதியும் காத்து உயர்ந்த உள்ளத்தோடு, உயர்ந்த விரத்தோடு தமிழகத்தின் தலையெழுத்தை மாற்றி, வாழ்ந்துவந்த வீர இனமாம் கள்ளர் இனத்தை சூழ்ந்ததொரு பெரும்பழி. ''கொள்ளையர்கள் - கள்வர்கள்'', என்று அதனால் நேர்ந்தது குற்றப்பிரிவினர் என்ற கொடுமை! அதை நீக்க வந்த வல்லவர்களில் நம்மின நல்லவர்களில் அரித்துவாரமங்கலம் கோபாலசாமி ரெகுநாத ராஜாளியார் அவர்கள் செய்த செயற்கரிய தொண்டுதனை, சிந்திக்கின்ற, அதேகாலை, இற்றைய சூழ்நிலையில், இற்றைய சமுதாயம், என்ன செய்துகொண்டிருக்கின்றது என்பதை சற்று எண்ணிப் பார்ப்பது அறிவுடைமையாகும்.

நேற்றைய சமுதாயத்தின் தலைமையேற்று களநாயர் [illegible]ாக களங்கண்டு! மறம்புரிந்து! வீரமே வேலையாக! வீரமே [illegible]ழுதுபோக்காக! ஏன்? வீரமே உணவாக வாழ்ந்த கள்ளர் [illegible] ஏன்? குற்றப்பிரிவினராக தள்ளப்பட்டனர் என்று [illegible]ப்பார்த்தால் உள்ளம் அழும்! இலக்கியமும், [illegible]லும், பண்பாடும், நாகரீகமும், வளர்ந்து வர அதை

காலத்திற்கேற்றாற்போல் அனுசரித்து வாழக்கற்றுக் கொண்ட இனங்கள் வாழ்ந்தன வளர்ந்தன. உதாரணமாக ஆரிய இனம் வளர்ந்து வரும் நாகரீகத்தின் இயல்புகளையும், போக்கினையும் நன்கு உணர்ந்து அதன் காலப்போக்கிற் கேற்றாற் போல் தம் வாழ்வியலையும் மாற்றிக் கொண்ட தனால் வாழ்வாங்கு வாழ்ந்து வளம் பல தம் இனத்திற்கு செய்து கொண்டது.

ஆனால், உலகத்தோடு ஒட்ட ஒழுகத் தெரியாமல்! இன்றைய இருபதாம் நூற்றாண்டிலும்! வீரத்தையும், பழமை யையும், பேசிக்கொண்டு இருக்கின்றதால் அல்லவோ? அன்று! நம்மினம் குற்றப்பிரிவினராக பிரிக்கப்பட்டது உல கின் இயற்கை சூழலுக்கும் சந்தர்ப்பத்திற்கும் ஏற்றாற்போல் தம்மை மாற்றிக் கொள்ளத் தெரியாத இனம் அழிந்துபடு கிறது.

சிங்கங்க இனமும் யானை இனமும் காலச் சூழலுக் கும், நேர சந்தர்பங்களுக்கும் தக்க முறையில் தம் வாழ்க் கையை அமைத்துக் கொள்ள முடியாததனால் முயலாத தனால் அவ்விரண்டு பேரினமும் அழிந்து கொண்டு வரு கின்றன! எனவே பழமை பேசியது போதும்! வீரம்! வீரமென்று! அழித்துக் கொண்டதும் போதும். நீங்கள் கடந்து வந்த பாதையைச் சற்றுப்பாருங்கள்? இனி கடக்க வேண்டிய காலத்தை, பாதையை, செம்மையுற செய்யவேண்டியத னால்.

கள்ளர்களுடைய ''பொற்காலம்'' எப்பொழுது தொடங்கியது என்று சொல்லமுடியாது. ஆனால்! இந்த இருபதாம் நூற்றாண்டிலிருந்து நம் இனத்தின் பொற்காலம் மிகச் சிறப்புற்று மிளிறியது. தமிழ்த்தாய் கள்ளர்களைப் பார்த்து, மகனே வா? இத்தமிழ் இனத்தின் தலைமை ஏற்கவா என்று கூப்பிட்டாள். கூப்பிடுகிறாள், கூப்பிட வேண்டும் இருக்கின்றாள். ஆனால் என்ன நடந்தது? மற்ற இனத்தவர் களை தலைமை தாங்க அழைப்பதும் அவர்களை தலைமை



தாங்க அழைப்பதும் அவர்களை தலை மேல் தாங்கிக் கொண்டு ஆடுவதும்! அவர் புகழைப் பாடுவதும்! அவரை எதிர்ப்பவர்களை சாடுவதையுமே வேலையாக வைத்துக் கொண்டு, மற்றவர்கள் இவர்களைப் பயன்படுத்திக் கொள்ள! இவர்கள் அவர்களுக்குப் பயன்படும் ஏணிகளாக இருந்தார்களே தவிர ''தலைவர்களாக'' ஆக நினைக்கவும் இல்லை, முயற்சிக்கவும் இல்லை. கிடைத்த பொற்காலம் வீணாயிற்று, பாழாயிற்று.

இவர்களின் வேலை இனத்தைப் பற்றி பெருமையாக பேசிக்கொள்வதே தவிர வளர்ச்சிக்கு எதுவும் செய்வது இல்லை! இவர்கள் வாழ்வதும் இல்லை! தம் இனத்தை வாழ விடுவதும் இல்லை!

வாழ நினைப்பதும் இல்லை! ஆனால்? மார் கட்டி பேசக்கொள்வார்கள் இனத்தான், இனத்தான், என்று ஆனால் மாற்று இனத்தவர்களின் கைப்பாவையாகி அவன் நம் இனத்தவனை அழிக்க - அடக்க நினைக்கையில் அவன் கைத் தடியாகி நம்மவன் தலையிலேயே தாக்கி நம்மவர்களை கெடுமாறச் செய்வது வேறுயாருமல்ல நம் இனத்தவனே.... நம்மவனே...

இந்த பிற்போக்கு எண்ணங்கள் போய் ஒழிதல் வேண்டும். எப்படி, ஆச்சரியார் - என்பவரும் பெருந்தலை வர் என்பவரும், தம் இனத்தவர்கள், தம் பகைவர்களானா லும் வாழவைத்து வழிகாட்டி விட்டார்களே அது ஏன்? சர்வதேசியமும், சகோதரத்துவம், இனமில்லாப் பேருலகும் படைப்பதாக சொல்லிக்கொண்டவர் கூடதம்மினத்தை மறக்காமல் இருக்கையில் நம்மவர்கள் மட்டும், மறந்தும், மறுத்தும், மறைத்தும் வாழ்வது ஏன்?

இன்றைக்கு நம் நாட்டில் நம்மின இளைஞர்கள் அறிவுபெற முயற்சிக்கின்றனர். ஆனால்! அவர்கள் முன் பழ

தடைகள் உள்ளன. அவர்களுடைய பின்னணி என்ன? காலையில் எழுந்தவுடன் கறவை மாட்டை கழுவி குளிப் பாட்டி புல் போட்டு பொட்டு வைத்து, பால் கறக்க வேண் டும். முடிந்தால் வயல் வெளிக்குச் சென்று வர வேண்டும். வந்த கடன்காரனுக்கும், இனி கடன்வாங்கப் போகின்ற வனிடமும் பேசி சமாளிக்க வேண்டும். இதற்கிடையில் அரசியல் பேச வேண்டும். அதோடு மட்டுமல்லாது பொது அறிவும் உலக அறிவும் எள் அளவு கூட இல்லாத மக்கள் கூட்டத்துடன் தினம் பழகி பள்ளிக்குச் சென்று, பாடம் பயின்று, பட்டம் பெறவேண்டும். அவனுக்குத் திறமை இல்லை என்று சொல்லிவிட முடியாது. அவன் ஒரு ''தவாவதானி'' -யைப்போன்று பல செயல்களை ஒரே நேரத்தில் செய்கின்றான், செய்யவைக்கப்படுகின்றான், செய்கின்றான், செய்யவைக்கப்படுகின்றான், தெரிந்து கொள்ளவேண்டியும் இருக்கின்றான். இவ்வளவு இடை யூறுக்கிடையில், படித்து பட்டம் பெற்ற அவன் புத்தகப் புழுக்களோடு போராட வேண்டியிருக்கிறது. அப்போராட் டத்தில் தோல்வியைத் தான் காண்கிறான். எதையும் தாங்கும் இதயம் கொண்ட அவன் இதையும் தாங்குகின்றான். அவன் பிறர்க்காக செய்ய எண்ணுகின்றானே தவிர தனக்காக பிறரிடம் எதையும் தயந்து கேட்கும் எண்ணம் இல்லாத தனால் வளரமுடியாததனால் எண்ணற்ற ஆற்றல் மிகு கள்ளல் குல இளைஞர்கள் வீழ்ந்து கிடக்கின்றனர் கீழே. கேடுதனை நீக்கி, கீழ்மையினைப் போக்கி, வாழவைத்து நாளை தமிழகத்தின் தலைமையேற்க வைக்க வேண்டும்.

இற்றைச் சூழலில் இன்னும் இருபத்தைந்தாண்டு காலம் நம்மினத்தின் பொற்காலமாக இருக்கலாம். தலைமைப் பதவிகள் இவர்களைத் தேடிவரலாம் தவிர தலைமையேற்க வேறு யாரும் இல்லாமலும் இருக்கலாம். ஆனால் இன்னும் கால்நூற்றாண்டுக்குப் பின் என்ன நடக்கும்! தாழ்த்தப்பட்ட பேரினம் தலை நிமிர்ந்து கொண்டு வருகின்றது. அவ்வினம் இவர்களை நேர்போட்டிக்கு



[illegible]க்கொண்டிருக்கின்றது. இற்றைக்கு [illegible]யும் தயையும் எதிர்பார்த்துக் [illegible] இருக்கின்ற அந்த இனம் தானே தலைமை [illegible], தமிழ்நாட்டைத் தானே நடத்தவும் எண்ணலாம். [illegible] போட்டியும் அதிகமாகும். போராட்டமும் [illegible]

[illegible] நம்மவர்கள் தலைமை தாங்க தம்மை தகுதி [illegible]களாக ஆக்கிக்கொள்ள வேண்டும். அல்லது நம்மவர்களை தலைமை தகுதி படைத்தவர்களாக [illegible] வேண்டும். உண்மையான அறிவும் திறமையும், எங்கேனும் நம்மவர்களிடம் காணப்பட்டால் அவர்களை "அழைத்து'' வாழ்த்தி தமிழகத்தில் உயர்த்திட வேண்டும்.

''காலமிது காலம் பொன்னான காலம்'' பயன்படுத் திக்கொள்வீர். சண்டைகள் வேண்டாம். வாய்வீரம் பேசித் திரியவேண்டாம். ஒன்றுபடுங்கள் உயருங்கள், உயர்த்தி விடுங்கள். ஏற்றிவிடுங்கள் நம்மவர், பிறர்க்கு ஏணியாய் இருந்தது போதும்.

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு! உயர்வு வாழ்க கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் புகழ்! வளர்க இன ஒற்றுமை.

# வரலாற்றுத் தள நாயகன் எங்கள் தாத்தா

## த. கோபாலசாமி

நெஞ்சை அள்ளும் தஞ்சைத் தரணிக்கு சான்றோர் பலரை பெற்றெடுத்த பெருமை உண்டு புலவரும், புரவலரும், ஆன்றோரும், சான்றோரும் அவனிக்கு அளித்திட்ட பெருமை தஞ்சைக்கு உண்டு! சோழநாடு வயிற்றுக்கு உணவு தருவதோடு அமையாது. ஆன்றமைந்த சான்றோர் பலரையும், தந்து பெருமைதனை ஈட்டி உள்ளது.

பெரும்புலவன் கம்பனைப் பெற்றெடுத்தது தஞ்சையே! கரிகால் பெருவளத்தான் கட்டி ஆண்ட தஞ்சை வீரத்தின் விளை நிலம்! உரிமை முழக்கமிட்ட உததமர் பலரையும் ஈன்றது தஞ்சையே!

இம்மாவட்டத்தில் பாபனாசம் தாலுகா பழம் பெருமை படைத்தது! தமிழ்த் தாத்தா உ.வே. சாமினாத ஐயர் வெள்ளிநாக்கு (Silver tongue) சீனிவாச சாஸ்திரி ஆகியோரைப் பெற்றெடுத்த பெருமை இதற்கு உண்டு! இலக்கியங்களில் இடம்பெறும் ஆவூர் இங்குதான் உள்ளது! வெள்ளைக்குடி நாகனார், ஆவூர் மூலங்கிழார் போன்ற பெரும் புலவர்கள் பிறந்திட்டது பாபனாசம் கூற்றம்! விண்ணைமுட்டும் கோபுரம்! மண்ணின் மானம் காத்த மறவர் கூட்டம்! பல்லோரை ஈன்ற பெருமை இதற்கு உண்டு!

காவிரியின் தலைமகளாம் வெண்ணாறு இங்கு பொங்கி புனலோடு வரும் காட்சி கண் கொள்ளாக் காட்சி! காவிரியின் கிளை நதியாக வெண்ணாறு பிறந்தாலும்,



காட்சியிலும், மாட்சியிலும் காவிரிதனை நினைவூட்டும் பேராற்றல் பெற்றது வெண்ணாற்றின் வடகரையில் வெற்றிப் புன்னகையுடன் காட்சி தரும் அரித்துவாரமங்கலம் கிராமம் உள்ளது! தஞ்சையில் இருந்து 16கல் தொலைவு கீழ்த் திசையில் உள்ளது. அம்மாபேட்டைக்கு வடக்கே 4 கல் தொலைவு உள்ளது.!

வாழையடி வாழையாய்ப் பெரும் புலவர்களையும் புரவலர்களையும் ஈன்று எடுத்து உள்ளது. புறநானூற்றில் இடம் பெறும் வீரத்தின் விளைநிலம் ''வெண்ணிப் பெறந்தலை'' என்னும் இடம் அரித்துவாரமங்கலத்தின் தெற்கே வெண்ணாற்றின் தென்கரையில் 1 கல் தொலைவில் உள்ளது! குறிப்பிடத்தக்கது.

அரித்துவாரமங்கலம் - என்று இன்று அழைக்கப் பட்டாலும், முன்பு அரதைப் பெரும்பாழி என்று தேவாரத் தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அரதைப் பெரும்பாழி என்று அழைக்கப்பட்ட இவ்வூர், நாளடைவில் மாறி வடமொழி ஆதிக்கத்தின் காரணமாய் அரித்துவாரமங்கலம் என்று அதிகாரபூர்வப் பெயராய் வழங்கி வருகிறது! என்றாலும் ''அரதைப் பெரும்பாழி'' என்று அழைக்கும்போது விம்மிதம் ஏற்படத்தான் செய்கிறது!

கொடைவள்ளல் பலர் இங்கு வாழ்ந்தனர். இசைவாணர்கள் நாட்டிய மேதைகள், நாடக விற்பன்னர்கள் பலர் வாழ்ந்து உள்ளனர். வேணுநட்டுவனார் என்ற நாட்டிய மேதை இங்கு வாழ்ந்துள்ளார். இவர்தான் பந்தநல்லூர் நாட்டிய மேதைகளுக்கு எல்லாம் குருவாக விளங்க உள்ளார். பந்தநல்லூர் பரம்பரைக்கு வழிகாட்டியாக இவ்வூர் திகழ்ந்துள்ளது!

தேவாரத் திருப்பதிகத்தில் ஞானசம்பந்தப் பெருமான் பத்துக்கு மேற்பட்ட முத்துப்பாடல்களால் இவ்வூரில்

குடிகொண்ட பெருமானை வாயார வாழ்த்தி மனமுருகப் பாடியுள்ளது குறிப்பிடத் தகுந்ததாகும். இக்கோவில் கோச்சங்க சோழனால் கட்டப்பட்ட எண்பது கோவில்களில் ஒன்றாகும் ஐம்பெரும் திருத்தலங்கள். இவ்வட்டாரத்தில் பாடல்பெற்ற தலங்களாக விளங்கி வருகின்றது! திருக் கருக்காவூர், அவளிவநல்லூர், அரித்துவாரமங்கலம், ஆலங்குடி திருக்கொள்ளம்புதூர் போன்றவையாகும். இவைகட்குப் பழைய பெயர்களில் தேவாரத்தில் இடம் பெற்றுள்ளது.

அவை பின்வருமாறு:-

| | | |
|---|---|---|
| அரித்துவாரமங்கலம் | - | அரதைப்பெரும்பாழி |
| ஆலங்குடி | - | திரு இருப்பூளை |
| அவளிவநல்லூர் | - | அவளிவநல்லூர் |
| திருக்கருகாவூர் | - | திருக்கருகாவூர் |
| திருக்கொள்ளம்புதூர் | - | திருக்கொள்ளம்புதூர் |

என்ற தேவாரத்தில் சிறப்பாக அழைக்கப்படுகிறது.

ஆறுபடை வீடு என முருகப்பெருமானுக்கு அமைந்தது போன்று ''ஐம்பெரும்படைவீடாக'' சிவபெரு மான் இடம்பெற்றுள்ளார்! தேவாரப் பாடலில் சிறப் பிப்பதை காண்போம்.

''பைத்த பாம்ப டோரை பாய்புலி - என்று தொடங் கும் பாடலில் ஞானசம்பந்தர் ஊரின் சிறப்பினையும், உறையுள் பெருமானையும் போற்றிப் புகழ்ந்துள்ளது குறிப்பிடத்தகுந்தது!

இவ்வாலயத்தின் அழகினையும்! திருக்குளத்தின் அமைப்பினையும்! காணக் கண்கோடி வேண்டும்! இத்தனை கொள்ளை அழகு பெற்று இருப்பதால்தான் இங்குள்ள அம்பிகை அலங்காரம் என்று அழைக்கப்படகிறாள்! எழிலுடை அலங்காரம் சேவைதனைக் காணுங்கள்! சங்கம்



வளர்த்த ஊர்! சரித்திரம் கண்ட ஊர்! தரித்திர மானோர்க்குத் காரணமாக வந்த ஊர்!

இத்துணைச் சிறப்பினைக்கொண்ட ஊர் விடுதலைப் போராட்டத்தில் பலவீரத் தியாகிகளையும் கொண்டுளள்து! திரு. மணலி கந்தசாமி அவர்கள் ஒருமுறை அரித்துவார மங்கலம் மண்ணுக்கே தனிச் சிறப்பு உண்டு! என்று புகழ்ந்ததை நினைவு கூர்கிறோம்!

இத்துனை சிறப்பினையும் தன்னகத்தே கொண்ட அரித்துவாரமங்கலம் சிறப்பினும் சிறப்பாக, அணிக்கு அணிசேர்ந்தார் போன்று முத்தமிழ் கொடை வள்ளல் கோவேந்தன் கோபால சாமி ரகுநாத ராஜாளியாரையும் ஈன்ற பெருமை இம்மண்ணுக்கு உண்டு!

உரிமைக்குக் குரல் கொடுத்தவர்! குற்றப் பரம்பரை என்ற கொடிய சட்டத்தை (C.T. Act) எதிர்த்து முறி அடித்தவர் ராஜாளியார் ஆவார்கள்! கரந்தைத் தமிழ்ச் சங்கத்தை தோற்று வித்து கட்டிக்காத்தவர் ராஜாளியார்! மதுரைத் தமிழ்ச் சங்கத்தை மாட்சிமை பொருந்த வளர்த்தவரும் ராஜாளியார் முக்குலத்தோரின் மானம் காத்தவர் ராஜாளியார்! கள்ளர் இனத்தின் கண்ணியம் காத்தவர் ராஜாளியார்! சரஸ்வதி மகாலுக்கு நிகரான நூல் நிலயத்தை அரித்துவார மங்கலத்தில் நிறுவியவர் ராஜாளியார்! புதுடெல்லியில் நடந்த கார்னே ன் விழாவிற்குச் சிறப்பாக அழைக்கப்பட்ட சிலருள ராஜாளி யாரும் ஒருவர்! சித்த மருத்துவத்துறைக்குச் சிறந்த பணி யாற்றியவர் ராஜாளியார்! தனக்குச் சொந்தமான நூற்றுக் கணக்கான ஏக்கர் நிலத்தையும், அதன் வருவாயையும் இல்லை என்னாது அனைத்தையும் அள்ளிக்கொடுத்தவர் ராஜாளியார்! தமிழ்ப் புலவர்களை வீட்டில் உபசரித்து அவர்கட்கு வேண்டியன செய்து பல இலக்கியங்கள் மலர காரணமாய் இருந்தவர் ராஜாளியார்! அள்ளிக்கொடுத்த காரணத்தால் தனது சொத்துக்கள் அனைத்தையும் இழந்தவர்

ராஜாளியார்! ஏட்டுச் சுவடிகளில் இருந்த இலக்கியங்களை பலவற்றை அச்சிடப் பண உதவி அளித்திட்டு! நமது இலக்கிய செல்வங்கள் அழியாது காப்பாற்றியவர் ராஜாளியார்! மற்றும் புதுமை இலக்கியங்கள் மலரப் புலவர்களைத் தூண்டி உற்றுழி உறுபொருள் தந்தவர் ராஜாளியார்!

தேவர் என்று சொன்னால் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரையே குறிக்கும்! நாட்டார் என்று சொன்னால் நல்ல தமிழ் வளர்த்த நடுக்காவேரி ந.மு. வேங்கடசாமி நாட்டாரையே குறிக்கும்! அது போன்று ராஜாளியார் என்று கூறினால் அது முத்தமிழ்க் கொடை வள்ளல் அரித்துவாரமங்கலம் கோபாலசாமி ரெகுநாத ராஜாளியாரையே குறிக்கும்.

உலக சரித்திரம் நமக்குத் தெரியும்! உள்நாட்டுச் சரித்திரமும் புரியும்! ஆனால் நமது சரித்திரம் நமக்கே தெரியாது! அது மட்டுமல்ல தெரியவும் நாம் விரும்புவது கிடையாது!

அக்பரைப்பற்றி அறிந்திருப்போம்! பாபரின் சரித்திரமும் புரியும்! ஆனால் நமது சரித்திரம் நமக்கே தெரியாது! அது மட்டுமல்ல தெரியவும் நாம் விரும்புவது கிடையாது!

அக்பரைப்பற்றி அறிந்திருப்போம்! பாபரின் சரித்திரத்தைப் படித்து இருக்கிறோம்! நமது குடும்பச் சரித்திரம் நமக்குச் சரிவரத் தெரியாதது மிகவும் வருந்தத்தக்கதாகும். ஒரு சிலர் தனது தாத்தாவின் பெயரைக்கூட மறந்து விட்டது மட்டுமன்று. அதை அறியாமல் இருப்பது பெருமை என்று கூட நினைக்கவும் செய்கின்றனர்!

இதனை மாற்றவேண்டும்! நம் குடும்பத்தில் தோன்றிய சரித்திரச் சான்றோர்களை நினைவு கூர்வது பழம் பெருமை பேசுவதற்கு அன்று! அது தேவையும் இல்லை!



ஆனாலும் இந்நுணைப் பெரும் சரித்திரமும் நமக்குச் சொந்தம் என்று எண்ணும் போது நாமும் அவர்கள் வழி நடக்க வேண்டும் என்ற அவா ஏற்படும். இதனால் நமக்கு நல்ல பயன் ஏற்படும். உத்தமார்களின் வாழ்க்கை வரலாற்றை உணர்ந்தே கற்பது நாட்டிற்கும் வீட்டிற்கும் நல்ல பயன் அளிக்கும்.

ஆதலின் அரித்துவாரமங்கலம் சரித்திரச் சான்றோர் ராஜாளியார் வாழ்க்கை வரலாற்றினும், அவரது புலமையும் அவரது சாதனைகளும் இங்கு பேசப்பட்டுள்ளன.

அரித்துவாரமங்கலத்தில் ராஜாளியார் குடும்பங்கள் அதிகம்! அங்கு புகழ் வாய்ந்த குடியில் பூத்த மலர் தான் ராஜாளியார்! அவரது தந்தையார் பெயர் வாசுதேவ ரகுநாத ராஜாளியார் என்பதாகும். தாயார் பெயர் ஆயி அம்மாள் என்பதாகும்.

வாசுதேவ ரகுநாத ராஜாளியாரும் சிறந்த பக்திமான். புலமையும் புரவலத்தன்மையும் பெற்றவர். நான்கு பண்ணைகளாகக் குடும்பம் திகழ்ந்து வந்தது. இவர்கள் குடும்பம் மட்டும் 'பெரிய பண்ணை' - என்று சிறப்பித்து அழைக்கப்பட்டது. 'பெரிய பண்ணை ஐயா' - என்று அனைவராலும் அன்போடு அழைக்கப்பட்டவர் ராஜாளியார் பெயரில் மட்டுமன்று, செயலிலும் பெரியபண்ணையாகவே விளங்கியது.

## இளமைப் பருவம்

ராஜாளியார் இளமையில் கல்வி பயின்றது பச்சைக் கோட்டையில் - 'பள்ளிக்கூடத்து ஐயா' - என்று போற்றப்பட்ட விஞ்சிராயர் அவர்களிடம் எட்டு ஆண்டுகள் கல்வி பயின்றார். விஞ்சிராயர் சிறந்த புலவர்! எவ்விதப் பயனும் கருதாது இலவசமாகவே பல மாணாக்கர்கட்கு பயிற்றுவித்தார். அப்பொழுது பச்சைக்கோட்டையில் குருகுலவாசம்

மிகவும் சிறப்பு வாய்ந்தது! விஞ்சிராயர் வீட்டிலே வளர்ந்தும், கல்வி கற்றுத்தந்தும் வந்தார். ஒழுக்க சீலர்களை உருவாக்கும் பாசறையாகவே பச்சைக் கோட்டை விஞ்சிராயர் குருகுலம் திகழ்ந்து வந்தது! விஞ்சிராயரின் ஒழுக்கமும், கண்டிப்பும் பிரசித்திப்பெற்றது!

ஒருசமயம் தனது மாணவன் ராசாளியார் நடத்திய கருத்தரங்கிற்கு பச்சைக்கோட்டை விஞ்சிராயரும் வந்தார்! தனது குருநாதரைக் கண்டவுடன்! எழுந்து நின்று, கூனிக் குறுகி, வணங்கி வரவேற்ற காட்சி, அவருக்குக் குருநாதரிடம் இருந்த பக்தியை எடுத்துக்காட்டியது. இதிலிருந்து அவரது குருபக்தியை அறியலாம்.

ராஜாளியார் மனைவியின் பெயர் பெரியநாயத்தம் மாள்! பெரிய பண்ணை ஐயாவிற்கும், பெரியநாயகத்தம் மாளுக்கும் ஆண்மக்கள் இரவரும் பெண்மக்கள் இருவரும் பிறந்திட்டனர்! இல்லற வாழ்வு சிறப்புற்று விளங்கியது. விருந்தினர் உபசரிப்பில் அவர்கட்கு நிகர் அவர்களே! பெரும் புலவர் பெருமக்கள் பலர் அங்கே தங்கி, ஆய்வு நடத்தி வந்தனர். அவர்களை ராஜாளியார் விருந்தினராக எண்ணிய தில்லை. குடும்ப உறுப்பினராகவே எண்ணி வேண்டிய அனைத்தையும் செய்து வந்தார். பெரிய நாயகத்தம்மாளும் கணவரின் பெருந்தொண்டிற்குப் பெருந்துணையாகவே இருந்து வந்தார். ஒரு ஆண்மகவு குழந்தையாகத் தவழ்ந்த போதே இறந்து விட்டது.

மறு ஆண் மகவிற்கு ஆராவமுதன் எனப்பெயரிட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து வந்தனர். இளம்பிராயத்திலே ஆராவமுதன் கல்வி. கேள்வி களில் சிறந்து விளங்கி வந்தான்.

அந்தோ கொடுமை! ஆராவமுதாய், அன்பாய் வளர்த் திட்ட செல்வன் ஆராவமுதன் திடீர் நோய் ஏற்பட்டதன்



காரணமாய் இயற்கை எய்தினார்! இரு பெருஞ்செல்வரை இழந்து விட்ட ராஜாளியார், சோகமே உருவாய் மாறினார்! புலவர்கள் தேற்றினார்கள்! மனதை மாற்றினார்கள்! தமிழ் இலக்கியச் செல்வங்களை நுகர்வதின் மூலம் தன் மக்கள் மறைந்ததை மறந்து ஆறுதல் பெற்றார்! பெண்மக்களுக்கு முறையே ருக்மணி, ஆண்டாள் எனவும் பெயரிட்டுப் பேணி வளர்த்தார்!

மூத்த பெண்ணை சீராளூர் ராஜமன்னார்சாமி நாட்டார் அவர்கட்கு (ராமலிங்கசுவாமியின் சகோதரர்) திருமணம் முடித்தார். இளையபெண் ஆண்டாள் அம்மாளை வடுகக்குடி மைத்துனர் சிவகாமி வாண்டையார் அவர்கட்குத் திருமணம் முடித்துவைத்தார். மகள்களின் மணவிழா அவர் நடத்திக்காட்டியது போன்று இந்நாள் வரை நடந்தது இல்லை என்று கூறுவார்கள்! தமிழகத்தின் பல பகுதிகளில் இருந்துவந்த பல மன்னர்களும், புலவர்களும் புடை சூழத் திருமணத்தை இனிதே நடத்தி முடித்தார்!

திருமணத்தை முன்னிட்டுப் பல புலவர் பெருமக் களுக்குப் பொன்னாடையும் பொற்கிழியும் பரிசளித்தார். அவ்வட்டாரத்து வாழ் ஏழை மக்கள் அனைவர்க்கும் புத்தாடை பரிசாகத் தந்தார்.

சீராளூரில் தந்திட்ட பெண்ணிற்கு வாரிசு இல்லை. வடுகக்குடி மாப்பிள்ளை சிவகாமி வாண்டையார் மைத்துன ருக்குத் துணையாக அரித்துவாரமங்கலத்திலே வாழ்ந்து வந்தார். ஆண்டாள் அம்மாளுக்கு இரண்டு ஆண்களும் இரண்டு பெண்களும் உள்ளனர்! திரு. முத்துக்குமாரசுவாமி அவர்களும் (தலைமை அலுவலர், வேலைத் தேடித்தரும் அலுவலகம், சென்னை) திரு. மாரிமுத்து (பட்டுக்கோட்டை யில் வாழ்ந்து வருகிறார்) அவர்களும் ஆண்டாள் அம்மாளின் செல்வங்கள் ஆவார்கள்.

தஞ்சை மருத்துவனையில் புகழ்சேர் மருத்துவராகப் பணியாற்றிவரும் மருத்துவ நிபுணர் டாக்டர் V. வரதராஜன் M.S. அவர்கள் ராஜாளியாரின் மகள் வழிப்பெயரன் ஆவார். மரபு நிலையின் பெருமைதனை டாக்டர் V.V.R. அவர்களிடம் காணலாம். ராஜாளியார் வாரிசு என்பதை மெய்ப்பித்துக்காட்டி, அமெரிக்கா போன்ற உலக நாடுகளில் கல்விபயின்று புகழுக்குப் புகழ் சேர்க்கிறார் டாக்டர் V.V.R. அவர்கள்.

''அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை ஆரிருள் உய்த்து விடும்'' என்பது தமிழ் மறை தந்திட்ட தாரக மந்திரம்! ராஜாளியார் பல் துறையிலும் வித்தகராக விளங்கினாலும் அடங்கி நடப்பதிலும், மூத்தவர்கட்கு மரியாதை செலுத்துவதிலும் முதல் இடத்தைப் பெற்றவர் ஆவார்!

இதோ ஒரு நிகழ்ச்சி. ''உக்கிரணத்து ஐயா'' - என்று அழைக்கப்பட்ட கிருஷ்ணசாமி ரகுநாத ராஜாளியார் அவர் கள் இவரது மூத்த சகோதரர் ஆவார். தமயனாருக்குப் பணிந்து நடக்கவேண்டும் என்பதை ஒரு சந்தர்ப்பத்தில் மிகவும் துல்லியமாக நடந்து காட்டினார்!

தனது வீட்டில் இருந்து அவரது பரிவாரங்கள் படை சூழ வெளியூர் செல்லும் நேரங்களில் மூத்த சகோதரன் உக்கிராணத்து ஐயா'' - கிருஷ்ணசாமி ரகுநாத ராஜாளியாரின் வீட்டின் வழியேதான் செல்லவேண்டும். இதற்காக அண் ணன் வீடு தாண்டிச் செல்லும் வரை எவ்வித வாகனத்திலும் ஏறிவே மாட்டார். அண்ணன் வீடுவரை நடந்தே வருவார்! காலணிகளைக்கூட அணியமாட்டார். அவரோடு அவரது சகாக்களும் நடந்தே பவனி வருவார்கள்!

ராஜாளியார் வேலை ஆட்கள் முன்னமேசென்று உக்கிரணத்து ஐயா திண்ணையில் இல்லை'' என்று ஒருமுறை கூறினார்கள்! உடனே ராஜாளியார் ''அண்ணன் அவர்கள் வீட்டில் உள்புறத்தில் இருந்தாலும் நாம் செல்லும் போது திண்ணைப்பக்கம் வந்துவிட்டால் மிகவும் கஷ்டமாக ஆகிவிடும். ஆதலின் வழக்கம்போல் நடந்தே அவரது வீடுவரை தாண்டி செல்வது சாலச் சிறந்தது என்று கூறி தன்னுடைய சகோதர மரியாதையினைத் தெளிவுபடுத் தினார். அது மட்டுமா கூறினார்! ''எனது அண்ணன் அமரும் இடத்திற்கும் மரியாதை உண்டு'' என்று கூறி அண்ணன் ஊரில் இல்லாதகாலத்தும் நடந்தே சென்றுள்ளார். தனது காலணிகளை தானே கையில் சுமந்து மறைத்து நடந்து செல்வது அவரது வாடிக்கை.



இதில் வேடிக்கை என்னவென்றால் அவரது சகோ தரர் கிருஷ்ணசாமி ரகுநாத ராஜாளியார் தனது வேலை ஆட்களைக் கொண்டு தம்பி வெளியூர் செல்லும் நேரத்தை அறிந்து கொள்வார். தம்பி வருவான் தமருடன் வருவான்! புலவர் பெருமக்கள் புடைசூழ வருவான். அத்தோடு மன்னர் கள் கூடவும் வரக்கூடும். அத்தனைபேரும் தனது வீட்டினை நடந்தே கடந்து செல்ல நேரிடும் என்பதனைக்கருதி அவர் முன்னமே வீட்டினுள் சென்று அமர்ந்துவிடுவார்! என்றாலும் கூட வழக்கம்போல் அண்ணன் அமர்ந்திருக்கும் திண்ணை களை நோக்கித் தலைகுனிந்து கைகட்டி, மெல்லநடந்து, தெய்வ சன்னிதானத்தைக் கடக்கப்போவது போன்று பக்தி யுடன் செல்வது குறிப்பிடத்தக்கதாகும். மிகவும் நோய் வாய்ப்பட்டபோதும்கூட வண்டியில் அமர்ந்து செல்ல மாட்டார்!

அடக்கம் சகோதரபாசம், இவற்றிற்கு இதனைவிடச் சிறந்த உதாரணம் இருக்கமுடியாது!

உக்கிராணத்து ஐயாவின் மகன் ராமையா ரகுநாத ராஜாளியார் அனைவராலும் 'கோவில் ஐயா' என்று அழைக் கப்படுவார்! இவரது முயற்சியால் அரித்துவாரமங்கலத்தில் சிவன் கோவில் குளத் திருப்பணி செய்து முடிக்கப்பட்டது. இந்த அழகிய திருக்குளம் காண்போரைக் கவர்வது, புதுமை இன்றுவரை அழியவே இல்லை. இது போன்று அழகிய

'திருக்குளம்' வேறு எங்கும் இல்லை என்றே கூறலாம். அத்துணை அழகிய திருக்குளம் 'கோயில் ஐயா' அவர்களால் திருப்பணி செய்த முடிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

ராஜாளியார் அவர்கள் சிறந்த பக்திமான். வைணவ மரபைச் சேர்ந்தவர்! அவர் திருநாமமிட்டு புலித்தோலில் அமர்ந்து தியானம் செய்யும் திருக்கோலத்தைக் கண்டவர்கள் தெய்வ சன்னிதானமாகவே எண்ணி மகிழ்வார்கள். அவரது சொந்த பொறுப்பில் அரித்துவார மங்கலத்தில் குடிகொண்டிருக்கும் வரதராஜப் பெருமாள் கோவிலைப் புதுப்பித்து அமைத்து, கோபுரம் அமைத்து, பிரகாரம் அமைத்தது குறிப்பிடத்தக்கதாகும்! அத்தோடு, அங்கு உள்ள சிவாலயம், விஷ்ணு ஆலயம், மற்றும் இதர ஆலயங்கள் அனைத்திற்கும் பல ஏக்கர் நிலங்களைத் தானமாகத் தந்ததோடு, பல்வேறு முக்கிய விழாக்களையும் இவரும் இவரது குடும்பமும் இன்றுவரை செய்து வருகின்றனர்.

## அரித்துவாரமங்கலத்தின் அற்புத வரலாறு

தேவாரத்தில் இடம்பெற்ற திருத் தலம் அரதைப் பெரும்பாழியெனும் அரித்துவாரமங்கலம். 12 பாடல்கள் ஞான சம்மந்தப் பெருமானால் பாடப்பட்டுள்ளது.

அரித்துவாரமங்கலம் நான்கு பெயர்களால் அழைக்கப்படுகிறது. 1. அரித்துவாரமங்கலம், 2. தேவாரத்தில் அரதைப் பெரும்பாழி, 3. செப்பேட்டில் அதிவீரராக வமங்கலம், 4. சமீவனம் என்றும் தலபுராணம் பேசுகிறது.

**வள்ளலார் வாழ்த்திய அரதை**

விரும்பும் விரதப்பெரும்பாழி
விண்ணவர்களேத்தும்
அரதைப்பெரும்பாழி ஆர்ந்தோய்!

-திருவருட்பா



**மணலி கந்தசாமியும் தோழர் பால தண்டாயுதமும்**

இருவரும் அரித்துவாரமங்கலம் சின்னராசா ராஜாளியாரால் நடத்தப் பட்ட சுதந்திரப் போராட்ட பயிற்சி முகாமில் 6 மாதங்கள் பயின்றவர்கள். ''நானும் தோழர் பாலதண்டாயுதமும் அரித்துவாரமங்கலத்தில் தங்கி அரசியல் விழிப்புணர்வும் ஆரம்ப பாலபாடமும் பயின்றோம்'' சொன்னவர் மணலி கந்தசாமி அவர்கள்.

**பத்மஸ்ரீ நாட்டியப் பேராசான் வழுவூர் இராமையா பிள்ளை**

திரைப்படத் துறையில் கொடிகட்டிப் பறந்த வழுவூரார், அவரது மகன் வழுவூர் சாம்ராஜ் ஆகியோரின் பூர்வீகம் அரித்துவாரமங்கலம்தான்.

**பந்தநல்லூர் பரம்பரை - ஒரு ஆய்வு**

பரதநாட்டியம் என்றால், ''பந்த நல்லூர் பாரம்பரியம் தனி முத்திரை பதித்து வந்துள்ளது அந்த பந்தநல்லூர் பரம்பரையின் பூர்வீக புண்ணிய பூமியும் அரித்துவார மங்கலமே.

**தோழர் ஏ.வி. ராமசாமி**

பொதுவுடைமை இயக்கத்தில் ஒன்று பட்ட தஞ்சை மாவட்டத்தில் மாவட்ட செயலராகப் பணியாற்றி உலக நாடுகளில் பொது உடைமைத் தத்துவத்தைப் போதித்த (ரஷ்யா - ஹங்கேரி மற்றும் பல நாடுகள்) ஏ.வி. ராமசாமி ராஜாளியார் அவர்களும் அரித்துவாரமங்கலமே.

**வி. இராமானுஜம் ரகுநாத ராஜாளியார்**

தஞ்சை காவேரி சிறப்பங்காடியில் பணியாற்றி கட்டிடம் கட்ட ஆவண செய்து பின்னர் டில்லி மாநகரிலும் கூட்டுறவுத் துறையில் பணிபுரிந்து குடும்ப விளக்கு வங்கியிலும் பணியாற்றி உலகில் பல்வேறு நாடுகட்கு சென்று பயின்று பயிற்றுவித்தார்.

## அரித்துவாரமங்கலம் வந்திட்ட ஆன்றோர்கள்

அன்னிபெசண்ட் அம்மையார்
மறைமலை அடிகள்
அரசன் சண்முகனார்
தருமபுர ஆதீனகர்த்தர்
உ.வே. சாமிநாத ஐயர்
பாண்டித்துரைத் தேவர்
மற்றும் நூற்றுக்கும் மேற்பட்ட புலவர் பெருமக்கள்.

## தவில் சக்கரவர்த்தி ஏ.கே. பழனிவேல்

பத்மஸ்ரீ டாக்டர் அரித்துவாரமங்கலம் தவிலிசை சக்கரவர்த்தி ஏ.கே. பழனிவேல் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழக இசைத்துறை முதல்வராகவும் திருவையாறு தியாகப் பிரும்ம சபையின் செயலராகவும், அமெரிக்கா, கனடா, பாரீஸ் போன்ற பல்வேறு நாடுகட்குச் சென்று இசையால் வென்ற பேரும் பெருமையும் பெற்றவர்.

## ந. வெங்கிடாஜல ரகுநாத ராஜாளியார்

ஆயிரம் பிறை கண்ட அண்ணல் சுதந்திரப் போராட்ட தியாகியும் முன்னாள் கிராமத் தலைவரும், போராட்ட பயிற்சி முகாமை நடத்தியவரும் சின்னராசா என்று அழைக்கப் பெறும் ந. வெங்கிடா ஜல ரகுநாத ராஜாளியார்.

## ஏ. திருஞானசம்பந்தமூர்த்தி கண்டியர்

இராஜாளியார் அவர்கள் முதல் உறவின் முறையினர் ஆவார். இராசாளியார் இல்லத்தின் நிகழ்ச்சியில் முதல் மரியாதை செய்யப்படுவது கண்டியர் வம்சாவளியினர் ஆவார். திருஞானம் அவர்கள் கூட்டுறவுத் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார். மனவளக் கலையில் மாவட்டத் தலைவராகவும் திகழ்கிறார்.

## வழக்கறிஞர் கண்ணுசாமி ரெகுநாத ராஜாளியார்

முப்பெரும் வங்கிகட்கு சட்ட ஆலோசகராகப் பணியாற்றி கரந்தை, தமிழ்ச் சங்க கட்டிட நிதிக்குப் பெரும் தொகையினைப் பெற்றுத் தந்தும், சுவாமிமலை கோவிலில் தங்கத் தேர் செய்திட ஆவன செய்தவரும், கள்ளர் மகா சங்கத்தின் பொருளாளராகவும், நிக்கல்சன் கூட்டுறவு சங்கத்தின் தலைவராகவும், சீராளூர் ராமலிங்க சுவாமிகளின் தமக்கை மகனும் ஆன கண்ணுச்சாமி ரெகுநாத ராஜாளியாரும் எங்கள் ஊரே!



## கோயில் ஐயா ராமையா ரெகுநாத ராஜாளியார்

அலங்காரவல்லி ஆலயத்தின் முன் அழகுற அமைக்கப்பட்ட திருக்குளப் பணியினை செய்து முடித்தவர் ராமையா ரெகுநாத ராசாளியார். அத்தோடு விருந்தினர் தங்க விடுதியும் கட்டி வைத்தார். அலங்காரவல்லி திருக்கோயில் புனரமைப்பு செய்து குடமுழுக்கு செய்திட்ட சிறப்பும் பெருமையும் வெதர்ணை வீரையா ராஜாளியார் பெயரன் - திரு நாராயணசாமி கண்டியர் அவர்களைச் சாரும். அத்தோடு மாரியம்மன் ஆலய திருவிழாவினைப் பெருவிழாவாகவும் நடத்தி வருகிறார்.

## வெதர்னை வீரையா ராசாளியார்

அமரர் வா.கோ. இராஜாளியார் சிற்றரசனைப் போன்று சிறப்புற வாழ்ந்தார். அவரது ஆஸ்தானத்தில் தலைமை அமைச்சர் போல் போற்றப்பட்டவர் வெதர்னை வீரையா ராசாளியார் ஆவார். ஐந்தாம் ஜார்ஜ் முடிசூட்டு விழாவில் பங்கேற்று சிறப்பித்த இராசாளியார் அவர்கட்கு பெரும் வரவேற்பும் செய்திட்டார்.

## திருப்பணிச்செம்மல் எஸ். நாராயணசாமி கண்டியர்

சிதம்பரத்திலும் சிறப்பான திருக்கோயிலை புதுப்பித்து குடமுழுக்கு செய்தவர் எஸ். நாராயணசாமி கண்டியர். 30 ஆண்டுகளுக்கும் மேலாக மாரியம்மன் கோயில் திருவிழாவையும் சிறப்பாக நடத்தி வருபவர். உறுதுணையாக இருப்பவர் லெட்சுமண வாண்டையார், அம்பிகாபதி சாம்பலாண்டியர்.

# அரதைப் பெரும்பாழி எனும் அரித்துவாரமங்கலம் செப்பேடு செப்பும் செய்தி

*முனைவர் குடவாயில் பாலசுப்பிரமணியன்*

சோழநாட்டில் திருவாரூர் மாவட்டத்தில் திகழும் அரித்துவாரமங்கலம் எனும் ஊரில் உள்ள சிவாலயம் திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற திருத்தலமாகும். 450 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வூர் அரிவீரராகமங்கலம் என்ற பெயரில் அழைக்கப்பட்டது என்பதை செப்பேடு ஒன்று கூறுகின்றது. கோயில் மிகப் பழமையானது.

திருமால் பன்றி வடிவங்கொண்டு இறைவன் முன்பு பள்ளம் (துவாரம்) பறித்தமையால் அரி - துவார - மங்கலம் என்று பெயர் பெற்றது என்பர்.

இறைவன் - பாதாளேஸ்வரர், பாதாளவரதர்
இறைவி - அலங்காரவல்லி
தலமரம் - வன்னி
தீர்த்தம் - பிரம தீர்த்தம் கோயிலுக்கு எதிரில் உள்ளது.
சம்பந்தர் பாடல் பெற்றது.

மூன்று நிலைகளுடைய கோபுரம் - கிழக்கு நோக்கியது. உள்ளே சென்றதும் வலப்பால் நடராசர் தெற்கு நோக்கிய காட்சி. பதஞ்சலி, வியாக்ரபாதர். சிவகாமி உடன் எழுந்தருளியுள்ளனர். வெளியில் சுப்பிரமணியர் சந்நிதி. சம்புந்தர் பதிகம் பொறிக்கப்பட்டுள்ளது. வெளிப்பிரகாரத்தில் விநாயகர் சந்நிதி உள்ளது. எதிரில் வன்னி மரம் உள்ளது. கோயிலின் முன்னும் பின்னுமாக இரு வன்னி மரங்கள் உள்ளன. மூலவர் திருவாயிலுக்கு வலப்பால் கஜலட்சுமி திருமேனி உள்ளது. சுவாமி, அம்பாள் சந்நிதிகள் பக்கத்துப் பக்கத்திலேயே கிழக்கு நோக்கி உள்ளன.



மூலவர் - சிவலிங்கத் திருமேனி. இதன் முன்னால் சற்றுப் பக்கவாட்டில் வட்டமாகக் கல் இட்டி மூடியுள்ள இடமே, அரி - துவாரம் (பிலம்) என்றும், இவ்வழி அரி, வராகமாகத் தோண்டிச் சென்ற ஐதீகமாகவும் சொல்லப்படு கிறது.

அம்பாள் சந்நிதி - நின்ற திருக்கோலம். அம்பாள் சந்நிதிக்கு நேரே தனிக் கோபுர வாயில் உள்ளது. இத்திருக்கோயிலில் மூன்றாம் குலோத்துங்க சோழனின் கல்வெட்டு உள்ளது.

ஆய்வாளர்,
''மண்ணர் நீரார் அழலார் மலிகாலினார்
விண்ணர் வேதம் விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணர் பாடல் உடையார் ஒரு பாகமும்
பெண்ணர் கோயில் அரதைப் பெரும்பாழியே''

என்பது சம்பந்தரின் பாடலாகும்.

''விரும்பும்
விரதப் பெரும்பாழி விண்ணவர் களேத்தும்
அரதைப் பெரும்பாழி ஆர்ந்தோய்''

என்பது வள்ளலார் வாக்காகும்.
-குடவாயில் பாலசுப்பிரமணியன்

## இரகுநாதனிடம் வேளாளர்கள் அளித்த அரித்துவாரமங்கலம் செப்பேடு

தஞ்சாவூர் மாவட்டம், அரித்துவாரமங்கலம் எனும் ஊர் பண்டு அரதைப் பெரும்பாழி என அழைக்கப்

பெற்றதாகும். இவ்வூரிலுள்ள சிவாலயம் பாதாளீஸ்வரர் திருக்கோயில் என அழைக்கப் பெறுகின்றது. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர் இக்கோயிலில் திருப் பதிகம் பாடியுள்ளார். கி.பி. 1981 ஆம் ஆண்டு இத்திருக் கோயிலில் இரண்டு செப்பேட்டுத் தொகுதிகள் இருப்பதை இந்நூலாசிரியர் கண்டு வரலாற்றுலகுக்கு அறிமுகம் செய் தார். முதல் தொகுதி மூன்று ஏடுகள் கொண்டது. சகம் 1554 ஆங்கிரச ஆண்டு உத்தராயணம், மகர ஞாயற்று பூர்வபட்ச மான தசமியும் குருவாரமுமான நாளில் (கி.பி. 1633 ஜனவரி 13ஆம் நாளில்) தமிழகம் முழுவதுமுள்ள வேளாளப் பெரு மக்கள் ஒன்றுகூடிப் பாதாள ஈஸ்வர சுவாமியார்க்கும் அலங் காரவல்லி அம்மைக்கும் பூஜைகளுக்காகவும், திருப்பணிக் காகவும் அளித்த ஓர் ஒப்பந்தக் கொடை பற்றி விரிவாகப் பேசுகின்றது. மற்றொரு செப்பேடு மராட்டிய காலத்திய தாகும்.

மூன்று தனித்தனிச் செப்பேடுகள் ஒன்றோடு ஒன்று கதவுகளுக்குரிய கீழ் அமைப்பு போன்ற இணைப்பால் பொருத்தப்பெற்று இவை மூன்றும் ஒன்றின் மேல் ஒன்றாக மடித்து அமையும் வண்ணம் உள்ளது. ஏடுகள் ஒவ்வொன் றின் இரண்டு பக்கங்களிலும் எழுதப் பெற்றுள்ளது. மற்றச் செப்பேட்டுத் தொகுதிகள் எல்லாம், ஒவ்வோர் ஏடும் துளை இடப்பெற்று வளையத்தில் கோக்கப்பெற்றிருக்கும் ஆனால் இங்கு மூன்று ஏடுகளும் கீல் அமைப்புடைய துளைகளில் இணைக்கப்பெற்றிருப்பதோடு, சாசன வரிகள் ஒவ்வொன் லும் விரிந்த நிலையில் உள்ள மூன்று ஏட்டிலும் தொடராக எழுதப் பெற்றுள்ளது. எந்த ஒரு ஏடு எடுக்கப் பெற்றாலும் சாசன வரிகளைப் படிக்க இயலாது இது ஒரு புதுமையான அமைப்பாகும்.

''ஸ்வஸ்திஸ்ரீ'' என்ற மங்கலத் தொடரோடு தொடங் கும் இச்சாசனம் முதலில் விஜய நகரப் பரரசர்களின் மெய்க் கீர்த்தியையும் அவர்களது பெயர்களையும் பட்டியலிடு



கின்றது. அடுத்து அறம் வழுவாமல் உள்ள இந்நாட்டின் சிறப்புகளைப் பேசி, சாலி வாசன சகாப்தம் கூறிச் சோழ நாட்டு மன்னனின் சிறப்புக்களையும் விவரிக்கின்றது. பின்பு இச்சாசனம் எழுதப் பெற்ற புனிதநாளின் பஞ்சாங்கக் குறிப்புக்கள் காணப்பெறுகின்றன. இதனைத் தொடர்ந்து தலமான்மியம், அரிவீரராகமங்கலம் எனும் அர்தைப் பெரும்பாழியின் பெருமைகள், வேளாளப் பெருமக்களின் குலச் சிறப்புகள், வேளாளர்களின் பட்டியல், அவர்கள் ஆண்டொன்றுக்கு அளிக்க வேண்டிய நிதி, அவ்வறக் கட் டளையின் செயல்பாடுகள், அறங்காக்க வேண்டுகோள்கள் ஆகியவற்றோடு, கச்சி ஏகம்பன் ஆலயச் சிறப்பும் கூறி முடிகின்றது.

''தன் குடை பரப்பும் வெண்குடை நிழலின் பொரு புலியும் புல்வாயும் ஒருதுறை
நீராடப் புசையும்(பூனையும்) எலியும் பேசுறவாக; கீரியும் பாம்பும் ஓரிடத்து உறைய,
முயலும் சுணங்கனும்(நாயும்) பயிலுறவாகச் சீயமும் (சிங்கம்) யானையும் நேயம்
பெருக, கிளியும் பருந்தும் களியுறவாக, மறம் நெருக்கி அறம் பெருக்கி முறை
சுருக்காமல் இறை பெருக்காமல் காட்சிக் கெளிதாய் கடுஞ்சொல் மறந்து பெரும்பகை
ஐந்தும் மருங்குற வறுத்தி நாடொன்றும் நன்கு தலை பெருக்கி அறத்துறை நூல் நித்தம்
பயின்று, சிறறின்பம் நீக்கி, மேலோர் உறவு கொண்டு உலகினுக்கு ஆவியும், நிலவிய
கண்ணுமாய்த் தரைமகவர்க்த், தான் தாயாக வோர் அந்தணரோடு பிருதிவிராச்சியம்
பண்ணியருளா நின்ற''

என்று இரகுநாத நாயக்கரின் சோழ நன்னாட்டின் ஆட்சித்திறம் கூறுகின்றது.

பறவைகளும் விலங்குகளும் கூடப் பகைமறந்து, அறம் வழுவாமல் நிற்கும் இந்நாட்டில் மன்னன் இரகுநாத நாயக்கன் தன் நாட்டைக் குழந்தையாகவும் (தரைமகவாக) தன்னைத்தாயாகவும் பாவித்து கொண்டு, ஓர் அந்தணராகிய கோவிந்த தீட்சிதரின் உதவியோடு அரசாட்சி மேற்கொண்ட திறத்தை மிக அழகாகக் குறிப்பிடுகின்றது. திடசிதர் அய்யன் செவ்வப்பன், அச்சுதப்பன், இரகுநாதன் ஆகிய மூவர் காலத் திலும் வாழ்ந்து மதி அமைச்சராகவும், அறிவார்ந்த அரசியல் குருவாகவும் திகர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அரிவீரராகமங்கலம் (தற்போது அரித்துவாரமங்கலம் என்றும், தேவாரங்களில் அரதைப் பெரும்பாழி என்றும் கூறப்பெறும் ஊர்) பற்றிக் குறிப்பிடும் இடத்தில் சோழ மண்டலம், காவிலியின் தென்கரை, திருவாரூர்ச் சாவடி, ஆவூர்ப் பற்று, குலோத்துங்க சோழ வள நாடு கரம்பை நாடு, ஆகிய்வற்றுள் அடங்கிய ஊராகக் குறிப்பிடப் பெற்றுள்ளது. 17ஆம் நூற்றாண்டிலும் விசயநகரப் பேரரசுக் காலத்தில் சோழமண்டலம் என்றும், குலோத்துங்க சோழ வளநாடு என்றும் அழைக்கப்பட்ட மரபை காண்கிறோம்.

மேலும், இவ்வூர் பற்றியும் தரபுராணச் செய்திகளும் குறிக்கப் பெற்றுள்ளன. பிரம்மா விஷ்ணு ஆகியவர்களால் கமலாயக்கியம் பண்ணப்பட்ட திருவூர் என்றும், இங்குக் கரன் என்பவனுக்கு மூப்பை நீக்கி இளமையாக்கியதும், இறையுருவம் என்று தெரியாமல் முக்தி கொடுத்தும், உபமன்யு மகரிக்கு இறைவன் திருநடனமாடியும் அருள் செய்த தரவுராண வரலாறுகள் கூறப் பெற்று 'மனத்துக்கு எட்டாத சிதம்பரத்திற்குச் சமமான தேவார மூவர் திருப் பாட்டும் பெற்ற அரதைப் பெரும்பாழி அரிவீரராக மங்கலமாகிய சமீவானம் எனும் புரி'' என்றும் அரித்துவாரமங்கலம் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது. இங்கு இவ்வூரின் தேவாரப் பெயர், சமீவனம் எனும் தரபுராணம் பெயர், அக்கால வழக் கில் உள்ள பெயர் ஆகியவை முறையாகக் தொகுக்கப் பெற் றுள்ளது.



அரிவீரராகமங்கலத்திலுள்ள அலங்காரவல்லி பங்கர் பாதாள ஈசுவரர்க்குத் தொண்டர்களான கங்காகுல வேளாளப் பெருமக்களின் பெருமை பட்டியலிடப் படுகின்றது. திருத்தொண்டர் அறுபத்து மூவர், தொகையடியார் பதின்மர், ஆக எழுபத்து மூவராக வேளாள பெருமக்களின் சிறந்து விளங்கிய அடியார்கள் எழுபத்து நாலாவதாக திகழ்வதாகச் சிறப்புப் பெற்றது. மேலும் வேளாளர் குல பெருமையாக பல வரலாறுகள் கூறப்பெற்றுள்ளன. தொடை ஆடை கீறியது, அரிவின் வாயில் கையிட்டது, பாணன் பிணஞ்சுமந்தது, பறையனோடு உண்டது, சூலி முதுகிற் சோறிட்டது, நீலிப் பழிதுடைத்தது, முளைவாரி அன்னமிட்டது, முன்கையைச் சந்தனமாய் அரைத்தது, சேர, சோழ, பாண்டியரைச் சிறை வைத்தது, நாவிசைத்த தமிழ் கொண்டது, மேகந்தளை விடுத்தது, பாவலர்க்கு வெள்ளிப் பாத்திரத்தில் முத்துச் சோறும் இரத்தினக்கரியும் படைத்தது, சம்பந்தப் பெருமானாரின் பாடல் கேட்டது, கம்பனுக்குக் கொடை நல்கியது, பிணம் மூடிச் சோறிட்டது போன்ற பல வேளாளக் குலப் பெருமைகள் குறிக்கப்பெற்றுள்ளன. இவ்வரலாறுகள் தொண்டை மண்டலச் சதகத்திலும், திருக்கை விளக்கத்திலும் விரிவாகப் பேசப்படுபவையாகும்.

வடக்கே திருக்காளத்தி மாலை, தெற்கே கன்னியா குமரி கிழக்கே நாகப்பட்டினத் திருநகரம், மேற்கே மலை நாடு ஆக நான்கு எல்லைக்கு உட்பட்ட நாட்டில் உள்ள தொண்டை மண்டலத்து வெள்ளாளர், சோழிய வெள்ளாளர், காரைக்காட்டு வெள்ளாளர், செயின வெள்ளாளர், காரணி மாள் வெள்ளாளர், கொடிக்கால் வெள்ளாளர், ஊற்றத்தூர் வெள்ளாளர், வெண்பா நாட்டு வெள்ளாளர், தென்மண்டலத்து வெள்ளாளர், மேலும் வெள்ளாளர் என்று அழைக்கப் பெற்ற யாதொரு குலத்தாரும் இவ்வறக் கொடைக்கு உதவ வேண்டும் என்றும் குறிக்கப் பெற்றுள்ளது.

மேற்குறித்தவர்களில் பல்லக்கு வைத்திருப்பவர்கள் பத்துப் பணமும், தண்டிகை வைத்திருப்பவர்கள் ஐந்து பண

மும், குதிரையும் குடையும் வைத்திருப்பவர்கள் மூன்று பணமும், அட்டவணைப்பதவி வசிக்கும் அதிகாரம் பெற்ற வர்கள் ஒரு பணமும், பயிர்த் தொழில் புரியும் வேளாண் மக்கள் ஏர் ஒன்றுக்குக் கால் பணமும், பயிர்த்தொழில் செய் யாத குடிகள் அரைக்காற் பணமும் ஆண்டுதோறும் வர்த்த தனையாகப் பாதாள ஈசுவரசுவாமிக்கு அளிக்க வேண்டும் என்றும், இப்பொருளைச் சுவாமிக்கு அபிஷேகம், நெய்வேத் தியம், திருவிளக்கு இடல், திருப்பணிகள் செய்தல் ஆகிய வற்றுக்குக் கொள்ளல் வேண்டுமென்றும் கூறப்பெற்றுள் ளது. வேளாளப் பெருமக்கள் செய்து கொண்ட இந்த ஒப்பந்தம் தஞ்சை மன்னன் இரகுநாதன் முன்பு பலரும் அறியத் தன்மசாசனமாக அளிக்கப்பட்டது.

இவ்வறக் கொடையைப் பேணிக்காத்தால் ஏற்படும் நற்பலன்ளைக் கூறி, இதனை அழிக்க முற்பட்டால் மேலே சொல்லப்பட்ட வெள்ளாளர் விரதும், மேழிக் கொடியும், நாழிக்கு வளையும், பாலாறும், பெண்ணையாறும், காவேரி யாறும் துறந்த சிவத்துரோகி, செனத்துரோகி, உறவன் முறைத்துரோகி, குருத்துரோகியும் ஆகிய மகத்துக்களால் சொல்ல ஒண்ணாப்பாவங்களில் போகக்கடவான் என்ற சாபமும் கூறப்பெற்றுள்ளது. நிறைவு செய்யும் சாசன வரியாக இச்செப்பேட்டுச் சாசனத்தைக் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் ஆலயத்துக் குமுதப்படைக் கல்வெட்டாகக் கருதிக் கொள்ளப் பணிக்கப் பெற்றுள்ளது! தொண்டை மண்டல வேளாளர்கள் தங்கள் வழக்கு, சத்தியம் போன்றவை களுக்குக் கச்சி ஏகம்பன் ஆலயத்தையே முன் நிறுத்தும் மரபு இச்செப்பேட்டிலும் பின்பற்றப்பட்டுள்ளது. தமிழக வரலாற் றில், குறிப்பாகத் தஞ்சை நாயக்க மன்னன் இரகுநாதன் காலத்தில் தமிழக வேளாளப் பெருமக்கள் அனைவரையும் ஒரு அறக்கொடையால் இணைத்த இச்செப்பேடு தனித் தன்மை வாய்ந்ததாக உள்ளது. காளத்தியையும் கன்னியா குமரியையும், நாகப்பட்டினத்தையும் மலைநாட்டையும், ஒன்றாக அரித்துவாரமங்கலத்தில் இணைத்துக் காட்டி நிற்கின்றது இச்செப்பேடு.



# துளஜா மன்னர் காலத்து அரித்துவார மங்கலம் செப்பேடு

- டி.எம். சரபோஜி, தஞ்சாவூர்.

அரித்துவாரமங்கலம் பாதாள ஈஸ்வரி சுவாமி திருக்கோயிலில் தஞ்சை மராட்டிய மன்னர் துளஜா என்பவர் காலத்தில் வழங்கப்பட்ட செப்பேடு ஒன்றுள்ளது. அதில் உள்ள குறிப்புகளின்படி அது ஒன்றுள்ளது. அதில் உள்ள குறிப்புகளின்படி அது 5-3-1770இல் எழுதப்பட்டது என்பதை அறியலாம்.

பாதாள ஈஸ்வர சுவாமி கோயிலுக்காக வழங்கப்பட்ட கொடைகள் பற்றியும், அதனை ஏற்று மேற்கொண்டவர் பற்றிய விவரங்களும் அச்செப்பேட்டில் எழுதப்பட்டுள்ளன.

இச் செப்பேட்டில் மிகுதியான வேலைப்பாடுகள் ஏதுமில்லை. முதல் பக்கம் மேல் பகுதியில் இரண்டு முனை களிலும் இரண்டு சூலங்கள் சிறிய அளவில் வரையப் பெற் றிருக்கின்றன. செப்பேட்டின் தொடக்கத்தில் ஒரு சிவ லிங்கம் வரையப் பெற்றுள்ளது. செப்பேட்டின் இரண்டு பக்கங்களிலும் கொடைச் செய்தி எழுதப் பெற்றுள்ளது.

துளசா மகாராசாவின் ஆட்சிக்காலத்தின் போது (கி.பி.1770) இச்செப்பேட்டில் கண்ட கொடை அளிக்கப் பெற்றது. அப்போது அரித்துவாரமங்கலம் சூழ்ந்த பகுதியில் மத்திஷம் ஆக இருந்தவர் சூழ்ந்த பகுதியல் மத்திஷம் ஆக இருந்தவர் காணு சாயபு என்பவர். 'அதிகாரம்' செலுத்தியர் லட்சுமி காந்தய்யன் மகன் சுவாமி அய்யன் என்பவர் ஆவார்.

அலங்காரவல்லி உடனமர் பாதாளலிங்கருக்கு தீப நகர் அம்மாள் பேட்டை பலபட்டடை வணிகர்கள் சாத்தெண் ணெய், சந்தனக்கட்டை, சூடம், சாம்பிராணி ஆகியவை களைக் கொடையாக அளித்தனர். உப்ப முதல் கற்பூரம்

வரையிலான எல்லா ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்
களுக்கும் அரசு, காரர்க்குப் பட்டடையார் செலுத்தும்
வரியைப் பாதாளலிங்கருக்கு அளிப்பதாக ஒப்புக் கொண்டு
செப்பேடும் எழுதித் தந்தனர்.

இந்தத் தர்மம் திருவாவடுதுறை சங்கரலிங்கத்
தம்பிரான் அவர்கள் வசம் ஒப்புவிக்கப்பட்டது. இந்தச்
செப்பேட்டைப் பொறித்தவர் அருள் நிறைத்தேவர் அம்பல
வாணர் குமாரர் செஞ்சடை வேதியன் என்பவர். அரசர்
சார்பில் இந்தக் கொடை ஏற்பாட்டைச் செய்தவர் லட்சுமி
காந்தய்யன் மகன் சுவாமி அய்யன்.

லெட்சுமி காந்தய்யன், பெருமாள் செட்டி, வெங்
கிடாசல செட்டி, சிவகுருநாதன் ஆகியோர் சாட்சிக்
கையொப்பமிட்டிருக்கின்றனர்.

இறுதியில் சாயப்பட்டடை, எருத்துப்பட்டடை,
பட்டு நூல் செட்டி, கைக் கோளப் பட்டடை, சேணியர்,
கம்மாளப் பட்டடை, வாணியர் சார்பில் சிலர் கையொப்ப
மிட்டிருக்கின்றனர்.

செப்பேட்டின் கடைசியில் கூறப்பெறும் வழக்க
மான காப்புரைகள் இச்செப்பேட்டின் இடையிலேயே
(37-45) கூறப்பெற்றிருப்பது புதுமையாக உள்ளது. காப்புரை
யில் ஒன்று அன்னியராகிய மத பேதக்காரர்கள் விகாதம்
செய்தால் அவரவர்கள் மதத்தை விட்டு நரகத்திலே போவார்
களாகவும் எனச் சிறப்பு மிக்கதாகக் காணப்படுகிறது.

இவ்வளவு சிறப்பு பெற்ற இவ்வூரில் உள்ள அருள்
மிகு முத்துமாரியம்மன் திருக்கோயில் கடந்த 57 ஆண்டு
களாக திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்பட்டு வரு
கிறது. அதன் தொடர்ச்சியாக தெப்பத்துடன் ஊர் பொது
ஜனங்கள் அனைவரின் ஒத்துழைப்புடன் இவ்வருடமும்
சிறப்பாக நடைபெறுகிறது. அனைவரும் கலந்து கொண்டு
அம்பாள் அருளை பெரும்படி அன்புடன் அழைக்கிறோம்.



# Thiru Gopalasamy Ragunatha Rajaliar: A Philanthropist, Humanist and Tamil Savant

Dr. **N.Murugaiyan**
Director - Dr. M.Karunanithi Centre For Political Science,
Periyar Maniyammai University, Vallam

Thiru Gopalasamy Ragunatha Rajaliar was a doyen amongst the great sons of the Kallar Community. Though the Kallar Community Possesses great glories equaling those of other communities anything good about it was rarely recorded in the Social History of Tamil Nadu till Thiru Rajaliar came to prominence while the country was under alien rule the Sons of the Kallar Community were condemned as members of a criminal tribe. But, for the efforts taken by Thiru Gopalasamy Ragunatha Rajaliar, we, the members of this community, who are now in position and prosperity, would have remained insignificant as members of an illstarred social group with hardly anything to pride ourselves on Mr. Rajaliar founded the Indra gulathipar Sangam which was used as a forum to portray the origin and fame of the Kallar Community.

Thiru Gopalasamy Ragunatha Rajaliar (1870 - 1920) was the Son of Thiru Vasudeva Ragunatha Rajaliar and Thirumathi Ayiyammal. He studied upto

matriculation in the Banadurai High School, Kumbakonam, Thanjavur Dt. He spent most of his life time in the beautiful village Arithuvaramangalam which has been referred to as Arathaiperumpazhi in literary works and glorified by Thirugnana Sambadar in his Thevaram. It is five miles from Ammapettai (Thanjavur Dist.) in the north east direction.

Mr. Rajaliar was a great Tamil Savant. He finds his place in a list of Tamil scholars of Madurai Tamil Sangam. This list is led by the name of the great scholar and philanthropist Thiru M. Pandithurai Thevar (Palavanatham Jamindar and President, Madurai Tamil Sangam) followed by that of Dr. U.V. Saminatha Iyer (Professor of Tamil, Presidency College, Madras). Mr. Rajaliar's name is the thirty sixth in this list of about forty five Tamil scholars of the time. Evidence to this piece of information can be found in 'Senthamizh' a monthly magazine of the Madurai Tamil Sangam.[1]

Being a Tamil scholar Thiru Rajaliar was keenly interested in the propagation of Arts, Tamil Language and literature. Not only was he a prominent man of letters but also a source of inspiration and support to many a Tamil scholar. Pinnathur Narayanasamy Iyyer, - a veteran Tamil Pandit of Town High School, Kumbakonam, who spent many years of his life



preparing an annotated edition of Narrinai received financial assistance from Thiru Rajaliar which he has gratefully acknowledged in his preface to Narrinai.[2]

Another interesting feature in the multi faceted personality of Rajaliar was his involvement in the Theosophical movement and his interest in Yoga. He become a member of the Theosophical Society (Kumbakonam division) on 06.03.1908 and continued to be an active member of this Society till the close of his illustrious life.[3]

That Mr. Rajaliar had patronized Tamil Scholars can be understood from the fact that he nurtured the friendship of Maraimalai Adigal, a great man of letters of this century. Accepting the kind invitation of Thiru Rajaliar, Maraimalai Adigal visited Arithuvaramangalam and delivered an enlightening lecture called 'Pranavam' on 18.03.1912. Thiru Rajaliar treated his honoured guest with his usual warmth and kindness and successfully persuaded him to accept a fee of Rs. 250/- for his lecture. And that was the first occasion in the life of Maraimalai Adigal to receive a fee for his lecture. Marai Thirunavukkarasu (Son of Maraimalai Adigal) in his biography of his father pays a glowing tribute to Rajaliar by calling him 'Puravalar Rajaliar'.[4]

Thiru Rajaliar was known for opening libraries wherever he went and making generous contributions for all good causes. He was an important personality who had close contacts with English men like Messrs Lawly and Austin who held important positions then. He was one of the few who attended the coronation of King George the fifth, son of the great Queen Victoria, in Delhi on 12th December 1911. Thiru Na.Mu. Venkatasamy Nattar praises him high for his noble qualities in his great book[5] about the Kallas. Also Thiru V. Natarajan, in his biography[6] of Thiru Na.Mu. Venkatasamy Nattar, speaks about the great love and reverence that Mr. Nattar had for Thiru Rajaliar. Thiru R.V. Swaminathan, a former Minister of Govt. of India, once paid a glowing tribute to Rajaliar placing him along with Vandayar describing them as two eyes of the society.

The fact that the Jubilee Special Issue of the Karanthai Tamil Sangam carries the portrait of Thiru Rajaliar in the opening page itself shows that Thiru Rajaliar played a significant role as the President of the Karanthai Tamil Sangam in improving the finances of the Karanthai Tamil Sangam. In 1912 he founded a library in Karanthai Tamil Sangam and donated Rs. 1,000/- as building fund in the same year. His



involvement in and patronage for Karanthai Tamil Sangam has been referred to by R. Chinnathambi in his book entitled Karanthai Tamil Sangam (pp. 2 - 9). Moreover he had identified himself with the activities of Madurai Tamizh Sangam as well Mr. Rajaliar also founded a Sidha Medicine Research Institute (Gopalasamy Aushakasalai) and Ralajiar Kalasalai (Rajaliar's School of Studies) at his native place, Arithuvaramangalam.

In a worldwide website known as sangam.org, D..P. Sivaram in his work entitled Association of Sri Lanka Tamils : The Association of Sri Lanka Tamil in the USA refers to Rajaliar's services to Madurai Tamil Sangam and the efforts taken by him to change his community's name from 'Kallan' to 'Kallar'.

In brief, Rajaliars towering personality was chiefly known for his love of Tamil and his desire to help others with unbounded gereosity. His humanity and scholarship are worthy of emulation by every member of the Kallar Community. Since, there are many chapters, in the great volume of his life, which remain yet unexplored and since the few chapters that are explored are only half - explored, it is the bounden duty of everyone to study the book of his life so as to bring to light the hitherto and unobserved aspects of

his illustrious career and events relating to his life.

*Bibliography*

1. Senthamizh, VI Volume 1907 - 1908, The Madurai Tamil Sangam
2. Pinnathur Narayanasamy Iyer, Narrinai Preface Page 2, Published in Ratshaza year Vaikasi month.
3. Indian Section, Card No. 34303, Information division, Theosophical Society, Adayar, Madras.
4. Marai Thirunavukarasu, Maraimalai Adigal, Varalaru, pp. 156 - 157, 1959.
5. Na.Mu. Venkatasamy Nattar, Kallar Sarithiram
6. V. Natarajan, Thame Payinra Thamizh Perasiriyar Na.Mu. Venkatasamy Nattar, pp. 64 - 65, 1956.



# இண்டர்நெட்டில் ராஜாளியார்

## Sangam.org. - Ilankai Tamil Sangam Association of Tamils of Sri Lanka in the USA

### On Tamil Militarism; an 11 part essay by D.P. Sivaram written in 1992.

A Kallar caste leader called Gopalsamy Rajaliar, who had succeeded in a campaign with Thevar's assistance to alter his caste name from the derogatory Kallan to a more respectable from Kallar (Annual Report of Sangam, 1907)

http : / / www.sangam.org / articles / view2 / ?uid=1073

தொல்காப்பியம் - தெய்வச்சிலையார் உரை, அரித் துவாரமங்கலம் இரகுநாத ராஜாளியார் இல்லத்திலிருந்த ஓலைச்சுவடியிலிருந்து எடுத்துத்தான் பதிப்பிக்கப்பட்டது.

தகவல்

**உடையார்கோயில்குணா**

# செயற்கரிய செயல் வல்லார்

டாக்டர் வி. திவாகரன்,
தாளாளர்/செயலாளர்,
செங்கமலத்தாயார் கல்வி அறக்கட்டளை
மகளிர் கல்லூரி குழுமம், மன்னார்குடி.

*''பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து
சங்கத்து இருப்பிலே இருந்து
வைகை ஏட்டிலே தவழ்ந்த தண்டமிழை''*

முச்சங்கங்கள் வைத்து போற்றி வளர்த்தவர்கள் பாண்டியர்கள். தமிழன்னைக்கு மேலும் பெருகூட்டும் வகையில் நான்காவது தமிழ்ச்சங்கம் அமைக்க சோழ நாட்டின் 'புலியொன்று' புறப்பட்டுச் சென்றது மதுரையை நோக்கி. பாண்டித்துரைத் தேவரோடு இணைந்து நான்காவது சங்கம் அமைத்து அதன் வளர்ச்சிக்குப் பெரும் தொண்டாற்றியவர் வா. கோபால்சாமி இரகுநாத இராசாளியார். இது மட்டுமின்றி கரந்தை தமிழ்ச்சங்கத்தைத் தோற்றுவித்து தஞ்சைக்குப் பெருமை சேர்த்தவர் இராசாளியார்.

தமிழ், வடமொழி, ஆங்கிலம் மூன்றையும் கற்று முதுபெரும் அறிஞராகத் திகழ்ந்த போதும் தமிழ்மொழிக்குத் தொண்டு செய்வதில் தனியாத ஆர்வம் கொண்டவர். தமிழ் செம்மொழியாக ஏற்றம் பெற அன்றே வித்திட்டவர். கல் தோன்றி மன்தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்தகுடியாகியத் தமிழினத்தின் தாய்மொழியாம் தமிழின் மூலாதாரமாக விளங்கும் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தைப் படைத்த தொல்காப்பியருக்குச் சிலையெடுத்து சிறப்பு செய்தவர்.

''ஒரு நூலகம் திறக்கப்பட்டால் ஒரு சிறைச்சாலை மூடப்படும்'' என்பதையுணர்ந்து பல நூலகங்களையும் கல்வி நிலையங்களையும் தோற்றுவித்தவர். ''நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'' என்னும் பழமொழிக்கேற்ப ஐம்பதுக்கும் மேற்பட்டக் கிராம மக்கள் மருத்துவ வசதி பெறுவதற்குத் தம் சொந்த செலவில் மருத்துவ மையத்தை உருவாக்கி உதவியவர்.



*''திங்களோடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்களோடும்
மங்குல்கடல் இவற்றோடும் பிறந்த
தமிழுடன் பிறந்தோம்
நாங்கள் ஆண்மைச்
சிங்கத்தின் கூட்டமென்றும் சிறியோருக்கு
ஞாபகம் செய் முழங்கு சங்கே!
......................................................
......................................................
......................................................
பொங்கும் தமிழர்க் கின்னல் விளைத்தால்
சங்காரம் நிசமெனச் சங்கே முழங்கு''!*

என்று பழந்தமிழரின் வீரத்தைப் பறைசாற்றுகிறார் பாவேந்தர். இத்தகையப் பழமையும், மறமும், நற்திறமும் கொண்ட தமிழ்க்குடியின் வழித்தோன்றல் 'கள்ளர் இனம்' என்பதை ஆங்கில அரசுக்கு உணர்த்தியவர். ஆங்கில அரசு கள்ளரினத்தை அடிமையாக்கிக் குற்றப் பரம்பரை என்று அறிவித்தது ஐந்தாம் ஜார்ஜ் மன்னரிடம் இராசாளியார் போராடி கள்ளர் இனப் பெருமக்கள் மீது சுமத்தப்பட்டிருந்த இழிவைப் போக்கி வெற்றி கண்ட வீரர்.

வாழ்வியல் கருவூலமாகியப் பழந்தமிழ் இலக்கியங்கள் ஓலைச்சுவடியில் இருந்து அச்சேறுவதற்கு அரும்பணி ஆற்றியப் பெரும்புலவர் இராசாளியார் போற்றுதலுக்குரியவராவார். நற்றினைப் பாடல்களை முதல் முதலில் அச்சேற்றியவர் இவரேயாவார். ஊர் ஊராகச் சென்று ஓலைச்சுவடியில்

உள்ள இலக்கியங்களையெல்லாம் சேகரித்து பாதுகாத்து வைத்தார் அவைகளை தமது இல்லத்துக்கு வந்த உ.வே.சா. அவர்களிடம் கொடுத்து நூல்கள் அச்சேறுவதற்கு உதவியவர். 'இச்செய்தியை உ.வே.சா. தம் புறநானூற்றுப் பதிப்புரையில் கூறியுள்ளார். புலவர்களின் வறுமை நீங்க வாரிக் கொடுத்த வள்ளலாகத் திகழ்ந்த இராசாளியார் புகழால் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

*''செயற்கரிய செய்வர் பெரியர்''*

என்ற பொய்யாமொழிப் புலவரின் வார்த்தைகளுக்குத் தம் வாழ்க்கையினால் பொருள் தந்தவர் இராசாளியார்.

*''தமிழன்னைக்குச் சங்கம் அமைத்த*
*தஞ்சையின் தவப்புதல்வர்;*
*தரணிபோற்றும் நூலகங்கள்*
*தோன்ற வித்திட்ட விடிவெள்ளி;*
*பகைவராலும் மதிக்கப்பெறும் பண்பாளர்;*
*புலவர்களைப் போற்றிய புரவலர்;*
*ஏழை எளியவர்களுக்கு மருத்துவம் கண்ட*
*'மாமனிதர்'*
*கள்ளர் இனத்தின் அடிமை வாழ்கை*
*'அகற்றிய ஆதவன்';*
*ஆன்மீகத்தின் அழியாச் சொத்து*
*செயற்கரிய செயல்கள் பற்பலசெய்து*
*சாதனைப் படைத்திட்ட சரித்திர நாயகன்;*
*அரித்துவாரமங்கலம் ஈன்றெடுத்த*
*அரியமுத்து கோபாலசாமி*
*இரகுநாத இராசாளியார்.*

*'மாமனிதர்களிடையே'*



அன்னாரது பணிகளை நினைக்க, நினைக்க என் நெஞ்சம் நெகிழ்கின்றது''

*''தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்*
*தோன்றலின் தோன்றாமை நன்று''*

என்ற வள்ளுவனின் வாக்கிற்கேற்ப வாழ்ந்து மறைந்த இராசாளியாரின் புகழ் வையம் உள்ளவரை நிலைத்திருக்கும்.

செம்மொழி கால்கோளர் கோபால்சாமி ராசாளியார் பெருமை வாழ்க.

---

## செம்மொழி அறிவிப்பின் முன்னோடி!

புலவர் இரா. மாறன்

முத்தமிழுக்கும் புகழ் விளங்கும் புனித மண்ணாக விளங்கும் அரித்துவாரமங்கலம் என்ற ஊர் பாரம்பரியப் பெருமையைப் பெறுவதற்கு வள்ளல் த. கோபாலசாமி ரகுநாத ராசாளியாரின் கொடைத் தன்மையே முதற் காரணமாக அமைந்திருக்கிறது. அவர் தமிழ்ப் பரம்பரைக்கே அள்ளி அள்ளி வழங்கியதால் வரலாற்றில் அழுத்தமாக நிற்கிறார்.

தமிழ்மொழியைச் செம்மொழியாக அறிவிக்க வேண்டி கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் 1916 முதல் தீர்மானம் நிறைவேற்றக் காரணமாக இருந்திருக்கிறார். ராசாளியார் விதைத்த தமிழ் விதை, தமிழ்ப்பற்றி இன்னும் ஆலமரமாய் விரிந்து பரந்துள்ளது.

அவரது பெருமைகளை புகழை இந்த மண் உள்ள வரை நிலை நாட்ட சிலை கண்டும் சிறந்ததோர் வரலாற்றுச் செய்திமலர் வெளியிட்டும் அரும்பாடுபட்ட அண்ணன் த.கோபால்சாமி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த வணக்கமும்! பாராட்டுக்களும்!

# அரியர் ஐயா ராஜாளியார்

தஞ்சை அ. இராமமூர்த்தி, எம்.ஏ., பி.எல்.,

அண்மைக்காலம் வரை, அமரர் ராஜாளியார் அவர்களது அரும்பெரும் ஆற்றலையும் சாதனைகளையும் அறியாதிருந்த எனது குற்றத்திற்கு என்னை நானே தண்டித்துக்கொள்ள வேண்டியவனாக உள்ளேன். கரந்தை உமாமகேசுவரனார் உயர்நிலைப் பள்ளியில் நான் ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்த காலத்தில், சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்பு - அங்கே கல்லூரி முதல்வராக இருந்த சித்திரகுடி புலவர் ந. இராமநாதன் அவர்களும், பாவலர் பாலசுந்தரம் அவர்களும் ஓரிரு வேளைகளில் ஐயா ராஜாளியார் பற்றிக் குறிப்பிடுவார்கள். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தினைத் தோற்றுவிப்பதற்கு மூலகாரணமாக இருந்தவர்களில் ராஜாளியார் அவர்களும் ஒருவர் என்று அப்போது கேள்விப்பட்டிருக்கிறேன். அதற்குமேல், அவரைப் பற்றி அறிய வாய்ப்பில்லை.

மிகச் சமீபத்தில், எனது அன்பு நண்பர் நாகூர் சோமசுந்தரத் தேவர் அவர்கள் எழுதிய கட்டுரைத் தொகுப்பு ஒன்றினை அளித்தார். அதில் ஒரு கட்டுரை ராஜாளியார் பற்றியது. அதில், நல்ல தகவல்கள் சிலவற்றைத் தந்துள்ளார். இறுதியாக, ராஜாளியார் வழித்தோன்றலில் ஒருவரும், அவரது பெயரையே தாங்கியவருமான புலவர் மற்றும் ஓய்வுபெற்ற தலைமையாசிரியரும், எனக்குப் புதிய உறவினருமான கோபால்சாமி அவர்கள் ஒரு மலரை அளித்தார்கள். அதிலிருந்தும் நான் மேலும் பல தகவல்களைப் பெற்றேன். இவற்றையெல்லாம் அறிந்து நான் வியக்கின்றேன். இப்படியும் ஓர் அரிய மனிதர் இந்தப் பகுதியில் வாழ்ந்து பணியாற்றியுள்ளாரே என்று மேலும்



மேலும் வியப்படைகின்றேன். அவரைப் பற்றி ஒரு முறையான, முழுமையான வரலாற்று நூலினை முனைவர் ஆய்வுப் பட்டத்திற்கு உரியதாகச் செய்து முடிக்க முன்வர வேண்டும் என்று நினைக்கின்றேன். தஞ்சையிலுள்ள தமிழ்ப் பல்கலைக்கழகமே அதனைச் செய்யத் திட்டமிடலாம் என்ற வேண்டுகோளினையும் வைக்க விரும்புகின்றேன்.

அவர் குன்னூர் (ஊட்டி) சென்றது, அங்கே நூலகம் உருவாக்கியது, அனைத்திற்கும் மேலாக அங்கே தொல்காப்பியர் சிலை நிறுவியது போன்ற அரிய சாதனைகளை மேலும் விரிவாகவும் விளக்கமாகவும் ஆய்வு செய்ய வேண்டுமென்பது மிகவும் அவசியம். அதேபோன்று, ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் நடைமுறைப்படுத்தப்பட்ட குற்ற பரம்பரையினர் சட்டம், அதனை நீக்குவதற்கு எடுக்கப்பட்ட முயற்சிகள், நடத்தப்பட்ட இயக்கம், அது தொடர்பாக ராஜாளியார் எடுத்த முன்கை போன்றவையும் மேலும் வெளிச்சத்திற்கு கொண்டு வரப்பட வேண்டியவையாகும். மேலும், அவரது கரந்தைத் தமிழ்ச் சங்கத் தொடர்பும் சரியாக அறியப்பட வேண்டியவை.

எது எவ்வாறாயினும், கடந்த காலங்களில், அவருக்கு உரிய சரியான அங்கீகாரம் அளிக்கப்படவில்லையோ என்பது எனது ஆதங்கம்! அரசியலுக்கு அப்பாற்பட்டு, அவர் தமிழுக்கு ஆற்றியுள்ள ஆக்கப்பணிகள் ஆய்வு செய்யப் பட்டால், அவருக்கு மேலும் உயர்வான இடம் கிடைக்கும் என்று தோன்றுகின்றது. அவர் காலத்திய அரசியல் மற்றும் சமூகச் சூழ்நிலைகள் பாரபட்சமற்ற முறையில் ஆய்வு செய்யப்பட்டால், அவர் மேலும் உன்னதமான நிலைக்கு உயர்த்தப் படுவார். அதன் விளைவாக, அவர் ஒட்டுமொத்த தமிழ்ச் சமூகத்திற்கே பெருமை சேர்த்தவர் என்ற உண்மை புலனாகும்!

# செம்மொழி வேந்தர்

புலவர் ஆதி. நெடுஞ்செழியன்

உறங்காமல் தமிழ்ப்பணிக்குத் தொண்டு செய்தவர், கரந்தைத் தமிழ்ச்சங்கம் கண்டு எடுத்தவர் இராஜாளியர் என்னும் மாமனிதர்

''இனிது வாய்த்துள்ள தமிழ் மொழியை உயர்தனிச் செம்மொழி வரிசையில் சேர்க்க வேண்டும்'' சங்க கூட்டத்தில் தலைமைஏற்ற - அன்று நெஞ்சு நிமிர சிறப்புத் தீர்மானத்தை தஞ்சையில் கொண்டு வந்தார் முதன்முதலாக ஆயிரத்துக் தொள்ளாயிர பதிமூன்றில் (1913) தோன்றிவிட்ட தீர்மானம் மறந்துபோனார்- அதைத் தோண்டிப் புதைத்த வர்க்கு கணக்கு ஏது? எத்தனை தான் மறைத்தாலும் வித்து எங்கே விழுந்து முறைத்தென்று தெரிந்தே தீரும்! விளைந்த மண் தமிழ்ச்சங்கம் கரந்தை என்றால் விதைபோட்ட இராசாளியார் (பெயர்) வெளிவரவேண்டும் தமிழ்ப்பணி யோடந்தமைந்தது நின்றாரில்லை ''தமிழ்ச் சமுதாயப் பணிகளையும் தலைமேற் கொண்டார்.

ஆங்கிலேயே மன்னர்கட்கு மகுடம் சூட்டும் அளப்பரிய விழாவிற்கு அழைப்பைப் பெற்று ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்முடி சூட்டும் நாளில் அவருகே இருந்தோடு பேட்டியும் கண்டார்.

எல்லோர்க்கும் தொண்டு செய்யும் அருங்குணத்தால் எஃப்.டி.எஸ் பட்டத்தைஇவர்க்கு ஈந்து அன்னி பெசண்ட் அம்மையார் அகம் களித்தார்.

அக்காலம் நூறுபத்து ஆயிரம் என்று தக்கவர்க்குப் பணஉதவி செய்த வள்ளல் தக்கவராம் காப்பியர்க்கு ஊட்டி மலையில் எக்காலமும் நிலைக்கும் கற்றளி செய்தார்.